# திருக்குறளில் நிர்வாகச் செயல்பாட்டுக் கூறுகள்

பெரியார் பல்கலைக்கழக முனைவர் (பிஎச்.டி.) பட்டத்திற்காக (பகுதி நேரம்)
அளிக்கப்பெறும் ஆய்வேடு


ஆய்வாளர்

**சி. கலைமகள்**

நெறியாளர்

**முனைவர் இரா. சந்திரசேகரன்**

KSR COLLEGE OF ARTS AND SCIENCE
INDIA
Knowledge is Power

**தமிழ்த்துறை**

**கே.எஸ்.ஆர்.கலை & அறிவியல் கல்லூரி**

திருச்செங்கோடு - 637 215. நாமக்கல் மாவட்டம், இந்தியா.


ஏப்ரல் - 2010

# நெறியாளர் சான்றிதழ்

**முனைவர் இரா. சந்திரசேகரன்**
உதவிப் பேராசிரியர்
தமிழ்த்துறை
அரசு கலைக் கல்லூரி
உதகை – 643 002.

**"திருக்குறளில் நிர்வாகச் செயல்பாட்டுக் கூறுகள்"** என்னும் பொருள் குறித்தமைந்த இந்த ஆய்வேடு, பெரியார் பல்கலைக்கழகத்திற்கு **சி. கலைமகள்** அவர்களால் கே.எஸ்.ஆர். கலை & அறிவியல் கல்லூரித் தமிழ்த்துறையில் 2006-2009 ஆம் கல்வி ஆண்டில் பகுதி நேர ஆய்வாக என் மேற்பார்வையில் முனைவர் (பிஎச்.டி.) பட்டத்திற்காகத் தன்னிலையாக ஆக்கப்பட்டது எனச் சான்றளிக்கிறேன். இதற்கு முன் இப்பொருள் குறித்து எந்தப் பல்கலைக்கழகத்திலும் எந்த ஆய்வாளருக்கும் எவ்வகை ஆராய்ச்சிப் பட்டமும் வழங்கப்படவில்லை எனச் சான்றளிக்கிறேன்.

**இடம் : திருச்செங்கோடு**

**நாள்:** 30-04-2010

**நெறியாளர்**

Dr.R.CHANDRASEKARAN Ph.D.,
Asst. Professor,
PG & Research Dept. of Tamil
Govt. Arts College,
OOTY-643 002, The Nilgiris,
Tamilnadu, India.

# ஆய்வாளர் உறுதிமொழி

**சி. கலைமகள்**
முனைவர் பட்ட ஆய்வாளர் (பகுதிநேரம்)
தமிழ்த்துறை
கே.எஸ்.ஆர். கலை & அறிவியல் கல்லூரி
திருச்செங்கோடு - 637 215.

பெரியார் பல்கலைக்கழகத்திற்கு முனைவர் (பிஎச்.டி.) பட்டப்பேற்றிற்காக அளிக்கப்பெறும் **"திருக்குறளில் நிர்வாகச் செயல்பாட்டுக் கூறுகள்"** என்னும் பொருள் குறித்தமைந்த இந்த ஆய்வேடு, 2006-2009 ஆம் கல்வியாண்டில் பகுதிநேர ஆய்வாக, கே.எஸ்.ஆர். கலை & அறிவியல் கல்லூரித் தமிழ்த்துறையில் முனைவர் இரா. சந்திரசேகரன் அவர்களை ஆய்வு நெறியாளராகக் கொண்டு என் சுய முயற்சியில் உருவானதாகும். இதற்கு முன் இப்பொருள் குறித்து எந்தப் பல்கலைக்கழகத்திலும் எந்த ஆய்வாளருக்கும் எவ்வகை ஆராய்ச்சிப் பட்டமும் வழங்கப்படவில்லை என உறுதி கூறுகிறேன்.

**இடம் : திருச்செங்கோடு**

**நாள்:** 30/4/10

**(சி. கலைமகள்)**

சி. கலைமகள்
**ஆய்வாளர்** 30/4/10

**மேலொப்பம்**

**(இரா. சந்திரசேகரன்)**

Dr.R.CHANDRASEKARAN Ph.D.,
Asst. Professor,
PG & Research Dept. of Tamil
Govt. Arts College,
OOTY 643 002, The Nilgiris,
Tamilnadu, India.

# நன்றியுரை

கே.எஸ்.ஆர். கலை & அறிவியல் கல்லூரித் தமிழ்த்துறையில் முனைவர் பட்டத்திற்காக பகுதிநேர ஆய்வு செய்ய அனுமதி வழங்கிய பெரியார் பல்கலைக் கழகத்திற்கும் கே.எஸ்.ஆர் கலை & அறிவியல் கல்லூரியின் **தாளாளர், செயலர், செயல் இயக்குநர், முதல்வர்** ஆகியோருக்கும் முதற்கண் எனது நன்றியை உரித்தாக்குகின்றேன்.

நான் ஆய்வு மேற்கொண்ட காலத்தில் எனக்கு நம்பிக்கையூட்டியும் வழி நடத்தியும் ஆய்வுக்குத் தேவையான நூல்களை வழங்கியும் பற்பல ஆய்வியல் கருத்துக்களையும் நுட்பங்களையும் வழங்கிய ஆய்வு நெறியாளர் **முனைவர் இரா.சந்திரசேகரன்** அவர்களுக்கு நான் என்றென்றும் கடமைப்பட்டுள்ளேன்.

ஆய்வேட்டினைக் கணிப்பொறியின் வழியாக நன்முறையில் வடிவமைத்த **ஆல்பா ஜெராக்ஸ்** நிறுவனத்தாருக்கு என் நன்றி.

**- ஆய்வாளர்**

## சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| 1. இ.ஆ. | - | இதழ் ஆசிரியர் |
| 2. இ. எண் | - | இதழ் எண் |
| 3. உ. ஆ. | - | உரையாசிரியர் |
| 4. தொ. ஆ. | - | தொகுப்பாசிரியர் |
| 5. ப. | - | பக்கம் |
| 6. ப.ஆ. | - | பதிப்பாசிரியர் |
| 7. பக். | - | பக்கங்கள் |
| 8. மேலது | - | மேற்சுட்டிய நூல் |
| 9. மொ.பெ.ஆ. | - | மொழிப்பெயர்ப்பு ஆசிரியர் |
| 10. Ed. | - | Editor |
| 11. lbid. | - | Ibideum |
| 12. op. cit | - | Opera cited |
| 13. p. | - | Page |
| 14. Pp. | - | Pages |
| 15. Pub. | - | Publisher |
| 16. Tr. | - | Translator |
| 17. Vol. | - | volume |

# பொருளடக்கம்

# ஆய்வு அறிமுகம்

தொழில் சமுதாயத்தில் நிர்வாகம் என்பது ஒரு தனித்த முக்கிய குழு ஆகும். நிர்வாகம் எனப்படுவது முன்பே நிர்ணயிக்கப்பட்ட இலட்சியங்களை நிர்ணயிக்கப்பட்ட வழி முறைகளில் மனித சாதனையைத் திசை திருப்புவதன் மூலம் அடைவதாகும்.

நிர்வாகம் என்ற பதத்தை ஒரு குறிப்பிட்ட விளக்கத்திற்குள் கட்டுப்படுத்திவிட முடியாது. தொழில்துறை, வர்த்தகத்துறை, விஞ்ஞானம், பொறியியல் துறை என எத்துறையாக இருப்பினும் நிர்வாகம் நடைபெறுவதற்கு ஓர் அமைப்பு தேவை. அமைப்பும் நிர்வாகமும் ஒன்றுடன் ஒன்று சார்புடையவை. அதாவது, ஓர் அமைப்பு இன்றி நிர்வாகம் நடைபெற முடியாது.

ஓர் அமைப்பை ஏற்படுத்துவதே நிர்வாகம்தான். நிர்வாகத்தின் பணி, அமைப்பை ஏற்படுத்துவதுடன் மட்டுமில்லாமல் அந்த அமைப்பு இயங்குதல், அதன் வெற்றி அதன் எதிர்காலத் திட்டங்கள் ஆகிய அனைத்தையும் நிர்வாகம் கவனித்துக் கொள்கிறது.

நிர்வாகிக்குத் தேவையான நற்பண்புகளுடன் அன்றாட நடப்புகளைத் திறமையாக நிர்வகிப்பதுடன், எதிர்காலத்திற்கும் சிறந்த திட்டங்களைக் கொண்டு வருவதும் நிர்வாகத்தின் இன்றியமையாப் பணியாகும்.

ஓர் உணர்கிற நோக்கத்திற்கான பின்தொடர்கையாக எடுக்கப்பட்ட தீர்மான நடவடிக்கையே ‘நிர்வாகம்’ ஆகும். எதனை நாம் நிகழ்த்த விரும்புகின்றோமோ அதனை நிகழ்த்திக் காட்டுவதற்காகக் காரியங்களை முறையாக ஒழுங்குப்படுத்தி வளங்களைக் கணக்கிட்டுப் பயன்படுத்துவது ‘நிர்வாகம்’ ஆகும்.

நிர்வாகத்தின் உள்ளடக்கிய பிரிவுகளாகப் பொது நிர்வாகமும் தனியார் நிர்வாகமும் அமைந்துள்ளது. நடைமுறையில் பொது நிர்வாகம் என்பது அரசு நிர்வாகத்தைக் குறிப்பதாக அமைகிறது. தனியார் நிர்வாகத்தை மேலாண்மை என்றே பெரும்பாலும் குறிப்பிடுகின்றனர். இவற்றைத் திருக்குறளில் கண்டடையும் வகையில் இவ்ஆய்வு அமைகிறது.

## ஆய்வுத் தலைப்பு

'திருக்குறளில் நிர்வாகச் செயல்பாட்டுக் கூறுகள்' என்பது இவ் ஆய்வின் தலைப்பாகும்.

## ஆய்வு நோக்கம்

அரசாங்கம் எப்படிச் செயல்படுகிறது என்பதைக் கற்கும் இயல் பொது நிர்வாகவியல். அரசுடன் தொடர்புடைய நிர்வாக அறிவியல் பொது நிர்வாகவியல் ஆகும். பொது நிர்வாகம் எவ்வாறு செயல்படுகிறது அதன் முக்கிய அம்சங்கள் பற்றி ஆய்வது இவ்ஆய்வின் முதன்மை நோக்கம். பொது நிர்வாகச் செயல்பாட்டெல்லை திருக்குறளில் எந்த அளவிற்கு இடம்பெற்றுள்ளது என்ற அக்கால உண்மை நிலையை ஆராய்ந்து அறிவது இவ்ஆய்வின் துணைமை நோக்கம்.

## இவ்ஆய்வின் முன்னாய்வுகள்

1969ஆம் ஆண்டு சென்னைப் பல்கலைக் கழகத்தில் ரா.சாரங்கபாணி, 'தமிழில் நீதி நூல் இலக்கிய ஆய்வு' என்ற தலைப்பில் மேற்கொண்ட ஆய்வு, 1980 ஆம் ஆண்டு ச. முத்துச்சாமி, 'திருக்குறள் கண்ட தமிழ்ப் பண்பாடு' என்ற தலைப்பில் மேற்கொண்ட

ஆய்வு, 1981ஆம் ஆண்டு என்.பாண்டுரெங்கன், ‘நீதி நூல்கள் ஓர் ஆய்வு’ என்ற தலைப்பில் மேற்கொண்ட ஆய்வு, 1985ஆம் ஆண்டு அழகப்பா பல்கலைக் கழகத்தில் சி.பங்கயச் செல்வி, ‘திருக்குறள் துறவறவியல்’ என்ற தலைப்பில் மேற்கொண்ட ஆய்வு, 1986ஆம் ஆண்டு மதுரை காமராசர் பல்கலைக் கழகத்தில் ஆர்.வேலு, ‘திருக்குறளும் கௌடில்யமும் - ஒப்பாய்வு’ என்ற தலைப்பில் மேற்கொண்ட ஆய்வு, 1990 ஆம் ஆண்டு புதுவை பல்கலைக் கழகத்தில் அரசு திர. தாமரைச்செல்வி, ‘திருக்குறள் காட்டும் தமிழர் சமுதாயம், குடும்பம்’ என்ற தலைப்பில் மேற்கொண்ட ஆய்வு, 1996 ஆம் ஆண்டு பொன்பத்மநாபன், ‘வள்ளுவரின் அறநெறிக் கொள்கைகள்’, என்ற தலைப்பில் மேற்கொண்ட ஆய்வு, 1998 ஆம் ஆண்டு மதுரை காமராசர் பல்கலைக் கழகத்தில் எஸ்.முருகன், ‘திருக்குறளும் தம்மபதமும் மனுதர்மமும்’ என்ற தலைப்பில் மேற்கொண்ட ஆய்வு, 2002 ஆம் ஆண்டு பாரதிதாசன் பல்கலைக்கழகத்தில் த. செல்லம்மாள், ‘பிறதுறை நோக்கில் திருக்குறள்’ என்ற தலைப்பில் மேற்கொண்ட ஆய்வும் இவ்ஆய்வுக்கு முன்னாய்வுகளாக அமைகின்றன.

## ஆய்வுத் தரவுகள்

உ.வே.சா. அவர்களின் ஆய்வு நெறியைப் பின்பற்றி, கி.வா.ஜ. அவர்களைப் பதிப்பாசிரியராகக் கொண்டு கோவை ராமகிருஷ்ண மிஷன் வித்யாலயம் வெளியிட்டுள்ள ‘திருக்குறள் ஆராய்ச்சிப் பதிப்பு’ நூல் இவ் ஆய்விற்கான முதன்மை ஆதாரமாகின்றது. திருக்குறள் தொடர்பான திறனாய்வு நூல்களும், நிர்வாகவியல் தொடர்பான நூல்களும் துணைமை ஆதாரங்களாகக் கொள்ளப்படுகின்றன.

## ஆய்வு அணுகுமுறைகள்

இவ்ஆய்வு கீழ்காணும் அணுகுமுறைகளுடன் மேற்கொள்ளப்படுகிறது.

1. பகுப்பாய்வு அணுகுமுறை
2. ஒப்பியல் அணுகுமுறை
3. விளக்கவியல் அணுகுமுறை

திருக்குறளில் இடம்பெற்றுள்ள நிர்வாகச் செய்திகளைப் பகுத்து, ஒப்பிட்டு, விளக்கி, தொடர்புபடுத்திக் காண இம் மூன்று அணுகுமுறைகளும் பயன்படுகின்றன.

## இயல்பகுப்பு

இவ் ஆய்வு ஆய்வுஅறிமுகம், ஆய்வு நிறைவுரை தவிர்த்து ஆறு இயல்களாகப் பகுப்பட்டுள்ளது.

இயல் 1 : நிர்வாகமும் திருக்குறளும்

இயல் 2 : திருக்குறளும் பொது நிர்வாகமும்

இயல் 3 : நிர்வாக மேலாண்மைச் சிந்தனைகள்

இயல் 4 : திருக்குறளில் நிர்வாகப் பணிகளும் மேம்பாட்டு உத்திகளும்

இயல் 5 : திருக்குறளும் தொழில் நிர்வாகமும்

இயல் 6 : திருக்குறளும் நிர்வாகக் கூறுகளும்

## இயல் விளக்கம்

### இயல் 1 : நிர்வாகமும் திருக்குறளும்

காலம் காலமாய் இருந்து வந்த நிர்வாக முறைகள் இன்று தலைகீழ் மாற்றங்களைக் காண்கின்றன. எதைச் செய்வது, எப்படிச் செய்வது, எப்போது செய்வது, எங்கே செய்வது, யாரால் செய்வது என்ற விவரங்களை ஆணவமும் அதிகாரமும் கலந்த தோரணையில் கட்டளையிட்டு வந்த நிர்வாகக் கலாச்சாரம் இன்று இல்லை. அன்பு, பண்பு, பரிவு, அரவணைப்பு, மதிப்பு, மரியாதை, வழிநடத்தல், பலவகை உதவிகளையும் வசதிகளையும் அளித்தபிறகே உலகினில் நிர்வாக இயந்திரம் என்பது சீராக இயங்கி வெற்றியைக் காண உதவுகிறது.

ஒரு தனிப்பட்ட படிப்பாக, பட்டயமாக, பட்டமாக, முதுகலைப் பட்டமாக, தத்துவப் பட்டமாக மற்றும் முனைவர் பட்டமாக இன்று பல்வேறு பல்கலைக்கழகங்கள் கற்பிக்கப்பட்டு வரும் நிர்வாகவியல் இன்று உலக படிப்புகளில் கணினித் துறையை அடுத்த இடத்தில் உள்ள படிப்பாகத் திகழ்ந்து வருகின்றது. கலை சார்ந்த, அறிவியல் சார்ந்த படிப்புகள் பலநூறு ஆண்டுகளாக இருந்தாலும் இன்று இரண்டாம் நிலையில் உள்ள இந்தப் படிப்பிற்கு வயது இன்னும் ஒரு நூற்றாண்டு கூட ஆகவில்லை. திருவள்ளுவரின் 1330 குறட்பாக்களில் இடம் பெற்றுள்ள நிர்வாகப் பண்பாட்டை அறியும் நோக்கில் திருக்குறளில் இடம்பெற்றுள்ள நிர்வாகச் சிந்தனைகளை இவ்வியல் விளக்குகிறது.

## இயல் 2 : திருக்குறளும் பொது நிர்வாகமும்

அரசரை முதன்மையாகக் கொண்ட அரசியல் அமைப்பு அக்காலத்தில் அமைந்திருந்தது. சமுதாயமும் அச்சமுதாயத்தை உருவாக்கும் அரசியல் அமைப்பும் நெருங்கிய தொடர்புடையவை. நாட்டில் மக்கள் அமைதியாக வாழவும் அவர்களுக்கு வேண்டிய உரிமைகள் கிடைக்கவும் 'அரசியல்' தேவை. இந்த அடிப்படையில் அரசரைச் சார்ந்து வாழும் மாந்தர்கள், அரசருக்கு உதவி செய்து அரணாக அமைந்திருப்பவர், அரசரது கடமைகள், அமைப்பு மற்றும் பொது நிர்வாகம், நிர்வாகச் செயல்கள் எவ்வாறு நடைபெற்று வந்தன என்பதை இவ் இயல் விளக்குகிறது.

## இயல் 3 : நிர்வாக மேலாண்மைச் சிந்தனைகள்

நிர்வாகம் என்பது நிறுவனத்தின் சட்டங்கள், ஒழுங்குகள், நோக்கங்கள் ஆகியவற்றிற்கு முதன்மையளித்து வலியுறுத்தும் அதிகாரத் தன்மையுடையது.

நிர்வகித்தல் என்பதற்கு எதிர்கொள்ளுதல், நடத்திச் செல்லுதல், கட்டுப்படுத்துதல் ஆகிய சொற்கள் பொருந்தும். ஆங்கிலத்தில் Administration, Management ஆகிய சொற்கள் நெருங்கிய பொருள் தொடர்புடையன.

மேலாண்மை என்பது வெறும் கருத்தோ, கோட்பாடோ அல்லது தத்துவமோ மட்டுமல்ல. அது முறையாக செயல்படும் வழியாகும். பின்னால் நடக்கப் போவதை மனத்தில் கொண்டு முன்கூட்டியே திட்டமிடுவது, அமைப்பை உருவாக்குவது, பணியாளர்களை நியமித்து இயக்குவது, கட்டுப்பட்டுத்துவது, ஒருங்கிணைப்பது போன்ற தெளிவான தொடர் படிகளைக் கொண்டதாகும்.

இது மேலாண்மைப் பணிகளை மேலாண்மைச் செயல்பாங்கின் கூறுகளாகக் காட்டுகிறது. இந்த அடிப்படையில் திருக்குறளில் காணப்படும் மேலாண்மைக் கூறுகளை இவ்வியல் ஆராய்கிறது.

## இயல் 4 : திருக்குறளில் நிர்வாகப் பணிகளும் மேம்பாட்டு உத்திகளும்

திருக்குறளில் இடம்பெற்றுள்ள நிர்வாகம் சார்ந்த கருத்துக்களை நவீன நிர்வாகப் பணிகளான திட்டமிடுதல், அமைத்தல், பணியாளர்களை நியமித்தல், இயக்குவித்தல், ஒருங்கிணைத்தல், கட்டுப்படுத்துதல் ஆகியவற்றுடன் ஒப்பிட்டும், ஒரு நாட்டின் பொருளாதார சமுதாய வளர்ச்சிக்கான ஒட்டு மொத்த செயல்முறைகளை உள்ளடக்கிய மேம்பாட்டு நிர்வாகத்தை, நிர்வாக வழிமுறை, செயல்முறைகளில் ஏற்படும் முன்னேற்றம் அல்லது வளர்ச்சியை SWOT பகுப்பாய்வு முறையில் கணக்கிட்டும் இவ்வியலில் தொகுத்துரைக்கப்பட்டுள்ளன.

## இயல் 5 : திருக்குறளும் தொழில் நிர்வாகமும்

பழங்காலத்தில் விவசாயத் தொழில் முன்னிலையிலும் மற்றும் நாட்டைக் காக்கும் போர்த் தொழில், வீடு கட்டும் தொழில், தச்சுத் தொழில், பட்டறைத் தொழில், நெய்தல், மீன் பிடித்தல், மாடு மேய்த்தல், வாணிபம் செய்தல் போன்றவையும் இருந்தன. அத்தொழில்களை எவ்வாறு நிர்வாகம் செய்தனர் என்பது குறித்து குறட்பாக்கள் வழியாக இவ்வியல் விளக்குகிறது.

## இயல் 6 : திருக்குறளும் நிர்வாகக் கூறுகளும்

இக்காலத்திற்கு ஏற்பச் செயல் மேலாண்மை, நிதி மேலாண்மை, பணியாளர் மேலாண்மை, இடம் மற்றும் கால மேலாண்மை, மக்கள் நல மேம்பாடு, போன்றன தனி மனித முன்னேற்றத்திற்கும், நிறுவன முன்னேற்றத்திற்கும், நிறுவனம் புதிய சூழலில் புதிய பொருளை உற்பத்தி செய்து வெற்றி காண்பதற்கும் வள்ளுவர் தரும் கருவிகளை வகை – தொகைசெய்து இவ்வியலில் விளக்கிக் கூறப்பட்டுள்ளன.

## மேலாய்வுக் களங்கள்

இவ் ஆய்வின் தொடர்ச்சியாகத் திருக்குறளில் எவ்வகையில் ஆய்வு செய்யலாம் என்பது குறித்த குறிப்புகள் இப்பகுதியில் சுட்டப்பட்டுள்ளன.

## துணைநூற்பட்டியல்

இவ் ஆய்வுக்குத் துணையாய் அமைந்த தமிழ் மற்றும் ஆங்கில நூல்கள், திறனாய்வு நூல்கள், தொன்மையான இலக்கண நூல்கள், பழைய இலக்கியங்கள், உரைநடை நூல்கள், மலர்கள், ஆய்வுக் கோவைகள், அகராதிகள், இதழ்கள், அச்சில் வராத ஆய்வேடுகள், இணைய தள முகவரிகள் ஆகியன அகரவரிசையில் தொகுத்து இப்பகுதியில் தரப்பட்டுள்ளன.

## பின்னிணைப்பு

தமிழ்மொழி தவிர பிற மொழிகளில் திருக்குறள் பதிப்பிக்கப்பெற்றுள்ளமை குறித்த விவரங்கள் அடங்கிய அட்டவணை இவ் ஆய்வேட்டின் பின்னிணைப்பாக அமைக்கப்பட்டுள்ளது.

# இயல் ஒன்று

# நிர்வாகமும் திருக்குறளும்

சங்கம் மருவிய காலத்தைச் சாாந்த திருக்குறளை அறிமுகம் செய்யும் வகையிலும் தற்காலக் கோட்பாடுகளுள் ஒன்றான நிர்வாகவியல் செல்நெறிகளை விளக்கும் வகையிலும் இந்த இயல் அமைகிறது.

## சங்கம் மருவிய காலம்

கி.பி. ஆறாம் நூற்றாண்டின் இறுதிமுதல் கி.பி. எழாம் நூற்றாண்டின் தொடக்கம் வரை, தமிழகத்தில் ஆட்சி புரிந்த பல்லவர்களின் ஆட்சிக் காலத்தைச் 'சங்கம் மருவிய காலம்' எனலாம். இக்காலக் கட்டத்தில் சோழ நாட்டையும் பாண்டிய நாட்டையும் களப்பிரர்களும், நடுநாட்டையும் தொண்டை நாட்டையும் பல்லவர்கள் ஆண்டு வந்தனர். இவர்களுள் களப்பிரர்கள் பாலிமொழியையும் பல்லவர்களும் பிராகிருத மொழியையும் ஆட்சி மொழியாகக் கொண்டிருந்தனர். ஆதலால், தமிழ் மக்களின் மொழி, இலக்கியம், கலை, இசை, பண்பாட்டுக் கூறுகள் போன்றவற்றின் வளர்ச்சியில் பின்னடைவு ஏற்பட்டது. ஆகவே, இவர்களின் காலப் பகுதியைத் தமிழ் இலக்கிய வரலாற்றில் 'இருண்ட காலம்' எனச் சுட்டலாம்.

இவ்விருண்டகாலப் பகுதியில் பழந்தமிழரின் அகப்புற ஒழுக்கலாறுகள் பேணப்படாது புறந்தள்ளப்பட்டன. அதனால், அக மரபும் புற மரபும் சங்க இலக்கியத்தில் கோலோச்சியிருந்த நிலை மாறியது. குழப்பமான அச்சூழலில் நீதியும் அறமும் தேவைப்பட்டன. இதனை வாய்பாகக் கருதிய பௌத்த – சமண சமயத்தவர்கள் தம் சமய ஒழுகலாறுகளை நீதியாகவும் அறமாகவும்

மக்களிடம் இலக்கியங்களின் வழியாகப் பரப்பினர். ஆதலால், நீதி இலக்கியங்களே 'இலக்கியங்கள்' என்ற எண்ணம் உருவாக்கப்பட்டது. ஆகவே, இருண்ட காலத்தை 'நீதி இலக்கியக்காலம்' என அழைக்கலாம்.

## கீழ்க்கணக்கு நூல்கள்

சங்கம் மருவிய காலத்தில் தோன்றிய நீதி நூல்களை வகைப்படுத்தி, அவற்றைக் 'கீழ்க்கணக்கு நூல்கள்' என்ற சிறப்பு வகைக்குள் அடக்கினர். 'கீழ்க்கணக்கு' என்பதற்குப் பன்னிரு பாட்டியல்,

> "அடிநிமிர் பில்லாச் செய்யுட் டொகுதி
> யறம்பொரு ளின்ப மடுக்கி யவ்வத்
> திறம்பட வுரைப்பது கீழ்க்கணக் காகும்"[1]

என இலக்கணம் வகுத்துள்ளது. 'கீழ்க்கணக்கு' என்பது, அடிவரையறையில் குறைந்து பெரும்பாலும் வெண்பாவினாலும் வெண்பா வகைப் பாக்களினாலும் அறம், பொருள், இன்பம், வீடு ஆகிய உறுதிப் பொருட்களைப் பாடுவதாகும்.

கீழ்க்கணக்கு நூல்கள் 18 என்றும் அவற்றின் பெயர்களை வரிசைப்படுத்தியும் எழுதப்பட்ட ஒரு தனிப்பாடலும் நமக்குக் கிடைக்கப்பட்டுள்ளது.

> "நாலடி நான்மணி நானாற்பது ஐந்திணைமுப்
> பால்கடுகம் கோவை பழமொழி மாமூலம்
> இன்னிலைசொல் காஞ்சியுடன் ஏலாதி என்பவே
> கைந்நிலைய வாம்கீழ்க் கணக்கு"[2]

இவ்வெண்பாவின்படி, கீழ்க்கணக்கு நூல்களாவன, 1.நாலடியார், 2.நான்மணிக்கடிகை, 3. இனியவை நாற்பது, 4. இன்னாநாற்பது, 5. கார் நாற்பது, 6.களவழி நாற்பது, 7.ஐந்திணை ஐம்பது 8. ஐந்திணை எழுபது, 9. திணை மொழி ஐம்பது, 10. திணை மாலை நூற்றைம்பது, 11. முப்பால், 12. திரிகடுகம், 13.ஆசாரக்கோவை, 14. பழமொழி, 15. சிறுபஞ்சமூலம், 16. கைக்கிளை, 17.முதுமொழிக்காஞ்சி, 18. ஏலாதி என்பனவாகும். இவற்றுள் பதினொரு நூல்கள் அறநூல்கள். ஆறு நூல்கள் அகப்பொருள் நூல்கள். ஒரு நூல் மட்டும் புறப்பொருள் நூலாகும்.

## அறநூல்கள் தோன்றிய காலப்பின்னணி

வரலாற்று அடிப்படையில் அறநூல்கள் சங்க இலக்கியங்களை அடுத்துத் தோன்றியவை என்பது அறிஞர்களின் முடிபு. இலக்கியங்களை ஆற்றல் இலக்கியம் (Literature of power), அறிவு இலக்கியம் (Literature of knowledge) எனப் பகுக்கலாம். அறிவு இலக்கிய வகையில் நீதி நூல்கள் அடங்கும். இவற்றை ஆங்கிலத்தில் 'டைடாக்டிக் லிட்டரேச்சர்' (Didactic literature) என்பர். பதினெண் கீழ்க்கணக்கு நூல்களுள் அறவியல் நூல்கள் பெரும்பான்மையாகச் சமணர்களால் இயற்றப்பட்டவை. அவை, அறம்-பொருள்-இன்பம்-வீடு ஆகிய நான்கு உறுதிப் பொருட்களையும் நீதி, ஒழுங்கு, வாய்மை, நேர்மை, நன்றி மறவாமை, கள்ளுண்ணாமை, பொய்யாமை, பிறர்மனை நயவாமை, நிலையாமை, ஊழ்வினை போன்றவற்றை வலியுறுத்துகின்றன. நீதி நூல்கள் இவற்றையே பாடுபொருளாகக் கொண்டமைக்குக் காரணங்களாக ஆ.வேலுப்பிள்ளை,

"சங்க கால வாழ்க்கை முறையில் காணப்பட்ட குறைபாடுகளால் மனம் நொந்த மக்களுக்குவேறு வாழ்க்கை முறை தேவைப்பட்டது. பொறியாலும் புலனாலும் கவர்ச்சியுற்று, காதல் வாழ்க்கை, வீர வாழ்க்கைகளிலும் ஊக்கம் மேலிட்டு நின்று வாழ்ந்த அவ்வாழ்க்கையிலே துன்பத்தைக் கண்ட தமிழ் மக்கள், கட்டுப்பாடுகள் நிறைந்த வாழ்க்கையையும் ஒழுக்கத்தையும் அவாவினர்"[3]

என்கிறார்.

சங்க காலச் சமுதாய அமைப்பில் மக்கள் வெறுப்புற்றனர். வாழ்க்கையில் ஒழுக்கநெறியை விரும்பினர். ஆதலால், அவர்களின் தேவைக்கேற்ப நீதி நூல்கள் தோன்றலாயின எனலாம்.

முதன் முதலில் அறநூற் பணிக்கு வெண்பா யாப்பைப் பயன்படுத்தியவர் திருவள்ளுவர். திருக்குறளை நிலைக்களனாக, வழிகாட்டியாகக் கொண்டு நீதி நூல்கள் பல தோன்றின. அந்த வகையில், நீதி நூற்களத்தின் முன்னோடியாகத் திருவள்ளுவரைக் கருதலாம்.

## திருக்குறள் - ஒரு கண்ணோட்டம்

திருக்குறள், அதிகாரத்திற்குப் பத்து குறட்பாக்கள் வீதம் 133 அதிகாரங்களையும், 1330 குறள் வெண்பாக்களையும் கொண்டது. இதில் மொத்தம் 12,000 சொற்கள் அமைந்துள்ளன. அறம், பொருள், இன்பம் என்ற முப்பிரிவுகளில் முறையே 38, 70, 25 அதிகாரங்களை அடக்கியுள்ளது. திருக்குறளின் நூலமைப்பு, தொல்காப்பியர் வகுத்துள்ள,

"இன்பமும் பொருளும் அறனும் என்றாங்கு

அன்பொடு புணர்ந்த ஐந்திணை மருங்கின்"[4]

என்ற நெறியைப் பின்பற்றி அமைந்துள்ளது எனலாம்.

## திருக்குறளின் அமைப்பு

| | | |
|---|---|---|
| அ. அறத்துப்பால் | 38 அதிகாரங்கள் | (38 x 10 = 380 குறட்பாக்கள்) |
| ஆ. பொருட்பால் | 70 அதிகாரங்கள் | (70 x 10 = 700 குறட்பாக்கள்) |
| இ. காமத்துப்பால் | 25 அதிகாரங்கள் | (25 x 10 = 250 குறட்பாக்கள்) |
| | 133 அதிகாரங்கள் | 1330 குறட்பாக்கள் |

## அறத்துப்பால்

1. பாயிர இயல்: அதிகாரங்கள் -4

   (1. கடவுள் வாழ்த்து முதல் 4. அறன் வலியுறுத்தல் வரை)

2. இல்லற இயல் : அதிகாரங்கள் -20

   (5. இல்வாழ்க்கை முதல் 24. புகழ் வரை)

3. துறவற இயல் : அதிகாரங்கள் -13

   (25. அருளுடைமை முதல் 37. அவா அறுத்தல் வரை)

4. ஊழியல் : அதிகாரம் - 1

   (38. ஊழ்)

## பொருட்பால்

1. அரசியல் - அதிகாரங்கள் - 25

   (39. கல்வி முதல் 63. இடுக்கண் அழியாமை வரை)

2. அங்க இயல் - அதிகாரங்கள் - 32

   (64. அமைச்சு முதல் 95. மருந்து வரை)

3. ஒழிபியல் - அதிகாரங்கள் - 13

   (96. குடிமை முதல் 108. கயமை வரை)

## காமத்துப்பால்

1. களவியல் - அதிகாரங்கள் - 7

   (109. தகையணங்குறுத்தல் முதல் 115. அலர் அறிவுறுத்தல் வரை)

2. கற்பியல் - அதிகாரங்கள் - 18

   (116. பிரிவாற்றாமை முதல் 133. ஊடல் உவகை வரை)

எம். ஏரியல் என்ற அறிஞர்,

"திருக்குறள் மனிதகுல சிந்தனையின் மாசு மருவற்ற வெளிப்பாடு"[5]

என்று கூறியுள்ளார்.

திரு.வி.கல்யாணசுந்தரன் திருவள்ளுவர் பற்றியும் திருக்குறள் பற்றியும் பின்வருமாறு கருத்துத் தெரிவித்துள்ளார்.

"தமிழ்நாடு செய்த தவத்தின் பயனாய்த் தோன்றியவர் திருவள்ளுவர். அவரது பிறப்பு, வளர்ப்பு முதலியவற்றைப் பற்றிய உண்மை வரலாறு

நமக்குக் கிட்டவிலை. அவரது வரலாறு பலவாறு பகரப்படுகிறது. இந்நாளில் வழங்கிவரும் அவர்தம் வரலாறுகளெல்லாம் புனைந்துரைகளே. திருவள்ளுவர் தமிழ்நாட்டில் பிறந்து வளர்ந்தவர் என்பதும் அறவோர் என்பதும் அவர் அருளிய நூலால் இனிது விளங்குகின்றன."[6]

சி. பாலசுப்பிரமணியன்,

"காலவெள்ளத்திற்கு இறையாகாமல் இன்றளவும் நிலைபெற்று வாழும் பேற்றினைத் திருக்குறள் பெற்றுள்ளது. அறிதொறும் அறிதொறும் அறியாமையைப் புலப்படுத்துவதாய், நவில் தொறும் நவில்தொறும் நயம் பயப்பதாய்த் திருக்குறள் விளங்குகிறது"[7]

என்று குறிப்பிட்டுள்ளார்.

ஜி.யு. போப்,

"திருக்குறளும் நாலடியாரும் ஒன்றுக்கொன்று விளக்கமாக அமைந்து தமிழர் தம் அறிவியல் கொள்கைகளையும் வாழ்க்கைத் தத்துவத்தையும் விளக்கும் பெரு நூல்கள்"[8]

என்று பாராட்டியுள்ளார்.

மு. வரதராசன்,

"திருக்குறள் பலர்க்குப் பல வகையாகப் பயன்படும் சிறப்பு வாய்ந்த தனி நூலாகும். இலக்கிய ஆராய்ச்சியாளர், அதைச் சிறந்த இலக்கியமாகக் கற்றுக் கலைநயம் காணலாம். அறிவோர், சமய நூலெனப் போற்றி

ஒழுக்க முறைகளைக் காணலாம். இவ்வாறே ஒவ்வொரு சாராரும் தத்தம் துறைக்கு ஏற்ற கருத்துகளைக் காணலாம். பொதுவாக வாழ்க்கையை ஆராய்ந்து விளக்கியுள்ள எல்லா நூல்களும் இவ்வாறு பலர்க்குப் பல்வேறு வகையாகப் பயன்படுவனவே ஆகும்"[9]

என்று கூறியுள்ளார்.

அரசு, சமுதாயத்திற்கு இன்றியமையாதது எனத் திருவள்ளுவர் கருதுகிறார். 'அரசு இல்லை என்றால் சமுதாய வாழ்க்கை இல்லை' என்பதும் அவரது கொள்கை என்றும் 'அரசரை ஆண்டவனாகக் கருதுவது திருவள்ளுவரின் நிலைப்பாடு' என்றும் கருதலாம். தமிழக வரலாற்றில் அரசுக்குரிய சட்ட, திட்டங்களைத் தொகுத்துத் தந்த முதல் நூல் திருக்குறள் என்பதில் ஐயமில்லை. இக்கருத்திற்கு ஏற்ப மா. சண்முகசுப்பிரமணியம்,

"ஒரு நாட்டின் அரசமைப்பை, அரசமைப்பின் கட்டுக் கோப்பினை, அந்த அமைப்பின் ஆதாரக் கொள்கைகளை வரையறுத்துக் கூறுவது அந்நாட்டின் அரசியலமைப்புச் சட்டமாகும்"[10]

என்று தெரிவித்துள்ளார்.

அரசாங்கம் கட்டுக்கோப்புடன் இயங்கத் தரமான நிர்வாகச் செயல்பாடு முதன்மைத் தேவையாகும். திருவள்ளுவர், திருக்குறளின் பொருட்பாலில் நிர்வாக நெறிமுறைகளை வெளிப்படுத்தியுள்ளார்.

திருக்குறளின் காலம் ஏறத்தாழ 2000 ஆண்டுகளுக்கு முற்பட்டது எனலாம்.

"கி.மு. 31 திருவள்ளுவர் காலம் எனத் தமிழக அரசு

ஏற்றுக் கொண்டுள்ளது."[11]

ஆதலால், பழமைவாய்ந்த திருக்குறளில் இக்காலத்தில் பெருவழக்காக, மேலாண்மைச் செயல்பாடாகக் கருதப்படும் நிர்வாகவியல் கூறுகள் பொதிந்திருப்பது சிந்திக்கத்தக்கதே.

## திருக்குறள் - பெயர்க்காரணம்

திருவள்ளுவர் அறம், பொருள், இன்பம் என்னும் மூன்றைப் பற்றிய கருத்துக்களையும் தொகுத்து அடைவுபடுத்தி மூன்று பகுதியாக்கித் திருக்குறளை இயற்றியுள்ளார்.

அறம், பொருள், இன்பம் என்னும் மூன்றையும் ஒரு கொத்தாக வழங்குவது இந்திய நாட்டு மரபு. வடமொழியில் அதைத் 'திரிவர்க்கம்' என்பர். தமிழ் நூல்களில் அம்மூன்றையும் ஒருங்கிசைக்கும் வழக்கத்தை,

"அறனும் பொருள் இன்பமும் மூன்றும்

ஆற்றும் பெருமிநன் செல்வம்"[12]

என்றும்,

"சிறப்புடை மரபிற் பொருளும் இன்பமும்

அறத்துவழிப் படூஉம் தோற்றம் போல"[13]

என்றும் புறநானூற்று அடிகள் சுட்டியுள்ளன.

திருக்குறளில் அந்த மூன்றையும் பற்றிய பகுதிகளைத் தனித்தனியே அறத்துப்பால், பொருட்பால், காமத்துப்பால் எனப் பெயரிட்ட திருவள்ளுவர், இந்நூலுக்கு இட்ட பெயர் 'முப்பால்' எனத் தெரியவருகிறது.

குறட்பாவால் அமைந்த தனிநூல் பழங்காலத்தில் இல்லையாதலால் இதனைக் 'குறள்' என்றும் பின்னர் 'திருக்குறள்' என்றும் வழங்கினர். தற்போது, இந்நூலைத் 'திருக்குறள்' என்றே வழங்குகின்றனர். நூலில் அமைந்த யாப்பினால் வந்த பெயர் இது எனலாம்.

சங்க இலக்கியங்களுள் எட்டுத்தொகை நூற்களுள் கலித்தொகை, பரிபாடல் என்னும் நூல்கள் பாவினால் பெயர் பெற்றமை இதனோடு ஒப்பு நோக்கத் தக்கனவாகும். தெய்வத் தன்மை வாய்ந்த பொருள்களுக்குத் 'திரு' என்னும் அடை கொடுத்துச் சொல்வது தமிழ்நாட்டு மரபு. அவ்வகையில் இது 'திரு' குறள் எனப்பெற்றது. சங்க காலத்து நூலாகிய முருகாற்றுப்படை, திருமுருகாற்றுப் படை என வழங்குவதை இங்கு நினைத்து கொள்ளத் தக்கது.

## குறளுக்குரிய வேறு பெயர்கள்

திருக்குறள் முப்பால், திருக்குறள் ஆகிய பெயர்களில் பெரும்பான்மையாக அழைக்கப்பட்டாலும் சிறுபான்மையாகப் பல்வேறு பெயர்களில் வழங்கப்பட்டு வருகிறது. அவை; 1.இரண்டு, 2.உத்தரவேதம், 3.எழுதுண்ட மறை, 4. தமிழ்மறை, 5.திருவள்ளுவப் பயன், 6.திருவள்ளுவர், 7.தெய்வ நூல், 8.பழமொழி, 9.பால்முறை, 10.பொதுமறை, 11.பொய்யாமொழி, 12.பொருளுரை, 13.முதுமொழி, 14.வள்ளுவதேவன் வசனம், 15.வள்ளுவமாலை, 16. வள்ளுவர், 17.வள்ளுவர் வாய்மொழி, 18.வள்ளுவன்

வாய்ச்சொல், 19.வள்ளுவனார் வைப்பு, 20.வாயுறை வாழ்த்து, 21.திருவள்ளுவம், 22.முப்பானூல் என்பனவாகும்.

## உலகப்பொதுமறை ‘திருக்குறள்’

திருக்குறளில் எல்லாக் காலத்துக்கும் எல்லா நாட்டுக்கும் உரிய பொதுவான உண்மைகளையே பெரும்பாலும் தொகுத்துச் சொல்கிறது. தனிமனிதனுடைய வாழ்க்கையிலும் சமுதாய வாழ்க்கையிலும் கொள்ளத் தகுவன இவை, தள்ளத்தகுவன இவை என்று வரையறுக்கிறது. நீதி நூல்களின் இயல்பு இது. ஆனால், அந்தந்த நாட்டின் நீதி நூல்கள் மட்டுமே அந்தந்த நாட்டின் இடத்துக்கும் காலத்துக்கும் ஏற்பனவற்றை விரிவாகச் சொல்லும். திருக்குறளோ அவ்வாறு சொல்லாமல் மனித வாழ்வின் அடிப்படையான நலத்தைக் கருதி, என்றும் எங்கும் நலம் பயப்பவற்றை எடுத்துக்காட்டி, இவற்றைச் செய்க என்றும் எங்கும் தீங்கு பயப்பவற்றை எடுத்துரைத்து, இவற்றைச் செய்யற்க என்றும் கூறுகிறது. இதனால்தான் இது எக்காலத்துக்கும் பொதுவான நூலாகவும் எந்த நாட்டுக்கும் பொதுவானதாகவும் சிறப்புற்று விளங்குகிறது.

## குறள் உரைகள்

திருக்குறளுக்கு பல உரைகள் அமைந்திருப்பது, அதன் சிறப்பை உலகுக்கு உணர்த்தும் வகையில் உள்ளது. பரிமேலழகருக்கு முன்பு ஒன்பது உரைகள் தோன்றியுள்ளன என அறியப்பட்டுள்ளது.

“தருமர்மணக்குடவர் மாமந்தர் நச்சர்

பரிமேலழகர் பருதி – திருமலையார்

மல்லர் பரிப்பெருமாள் காளிங்கர் வள்ளுவர் நூற்

செல்லையுரை கண்டார் இவர்”[14]

என்ற தனிப்பாடலில் பத்து உரையாசிரியர்களின் பெயர்கள் உள்ளன. இவர்களில் ஏனைய ஒன்பதின்மரும் பரிமேலழகருக்கு முன்பே திருக்குறளுக்கு உரைசெய்துள்ளனர். இதனை,

“திருந்திய தமிழில் தெய்வப் புலைமை

அருந்திறல் வள்ளுவன் ஆய்ந்துதன் வாக்கால்

அறம் பொருள் இன்பம் வீடென நான்கின்

திறந்தெரிந் துரைத்த செவ்விமுப் பாலுக்

கோருரை இன்றி ஒன்பது சென்றும்

ஐயுற வாக நையுறு காலை”[15]

என்ற உரைச் சிறப்புப் பாயிரச் செய்யுளால் அறியலாம்.

இப்பத்து உரைகளில் மணக்குடவர், பருதி, பரிப்பொருள், காளிங்கர், பரிமேலழகர் ஆகிய ஐவர்தம் உரைகளே கிடைக்கப்பெற்றுள்ளன.

## நிர்வாகம் - பொருள் விளக்கம்

‘நிர்வாகம்’ என்ற சொல்லின் ஆங்கில இணை ‘அட்மினிஸ்டர்’ என்பதாகும். இச்சொல் ‘மினிஸ்டியாரே’ என்ற லத்தீன் சொல்லிலிருந்து தோன்றியதாகும். ‘அட்மினிஸ்டர்’ என்ற ஆங்கிலச் சொல்லின் விளக்கமாக ஆக்ஸ்போர்டு அகராதி,

"Administer – to control the affairs of a business, an organization, etc!"[16]

என்று குறிப்பிட்டுள்ளது.

"குறிக்கோள்களுடன் ஆற்றப்படும் பணிகள், கூட்டுச் செயல்பாடுகள் நிர்வாகம் எனப்படும்"[17]

என்று இரா. பாஸ்கரசேதுபதி தெரிவித்துள்ளார்.

'நிர்வாகம்' என்பதனை ஒரு செயல், செயல்பாடு, கூட்டுமுயற்சி, மக்களுக்கு உதவும் சமுதாயத் தொழில்நுட்பம் என்று வரையறுக்கலாம்.

எல்.டி.வொயிட் என்ற அறிஞர்,

"நிர்வாகம் என்பது ஒரு செயல் முறையாகும். பொதுத்துறை அல்லது தனியார் துறை, இராணுவம் அல்லது குடிமைப்பணி, பெரியது அல்லது சிறியது எத்தகையதாயினும் அதன் பொதுவான குழு முயற்சியே நிர்வாகம். ஒரு பல்பொருள் அங்காடி, ஒரு வங்கி, ஓர் உணவகம், ஒரு நகரம் எதிலுமே உள்ள வேலைகளின் செயல்முறையாக உள்ளது நிர்வாகம்"[18]

என்று கருத்துத் தெரிவித்துள்ளார்.

"ஓர் உணர்கிற நோக்கத்திற்கான பின் தொடர்கையாக எடுக்கப்பட்ட தீர்மான நடவடிக்கையே நிர்வாகமாகும். எதனை நாம் நிகழ்த்த

விரும்புகிறோமோ அதனை நிகழ்த்திக் காட்டுவதற்காகக் காரியங்களை முறையாக ஒழுங்குபடுத்தி, வளங்களைக் கணக்கிட்டுப் பயன்படுத்துவது நிர்வாகமாகும்”[19]

என்று மோர்ஸ்ட்டீன் மார்க்கஸ் குறிப்பிட்டுள்ளார்.

மேற்சுட்டப்பட்ட வரையறைகளை உற்றுநோக்கும் போது, மோர்ஸ்ட்டீன் மார்க்கஸ் என்பவர், ‘ஓர் உணர்கிற நோக்கத்திற்கான பின் தொடர்கையாக எடுக்கப்பட்ட தீர்மான நடவடிக்கையே நிர்வாகம்’ என்று நிர்வாகத்திற்கு வரையறை கொடுத்திருப்பது ஏற்புடையதாக உள்ளது.

## திருக்குறளில் ‘நிர்வாகம்’

திருவள்ளுவர் காலத்தில் ‘நிர்வாகம்’ என்ற சொல் ஆளப்பெறவில்லை. ஆனால், அச்சொல் உணர்த்தும் பொருண்மைகள் அக்காலத்திற்கு முன்பிருந்தே வாழ்வியல் நடைமுறையில் இருந்துள்ளது எனலாம். அவற்றைத் திருவள்ளுவர், ‘ஆள்வினை உடைமை’, ‘ஊக்கம் உடைமை’, ‘மடியின்மை’, ‘இடுக்கண் அழியாமை’, ‘குடி செயல்வகை’, ‘வினைத்திட்பம்’, ‘வினை செயல்வகை’, ‘வினைத் தூய்மை’, ‘தெரிந்து செயல்வகை’ போன்ற அதிகாரங்களின் வழியாக வெளிப்படுத்தியுள்ளார்.

ஒருவர் தன்னைத் தானே நிர்வாகிக்கக் கற்றுக் கொண்டால்தான், அவரால் பிறரை அல்லது ஒரு குழுவைத் திறம்பட நிர்வகிக்க இயலும். தன்னைத் தானே நிர்வகித்துக் கொள்ள ஒருவருக்குப் பின்வரும் பண்புநலன்கள் சிறப்புத் தேவையாகவும் அடிப்படைத் தேவையாகவும் வேண்டியுள்ளன.

1. நேர்மை,
2. சிறந்த அறிவு,
3. பொறுமை,
4. தளராத முயற்சி,
5. ஈகை,
6. சோர்வின்மை,
7. மனஉறுதி,
8. செயலாற்றும் திறமை.

இவற்றைப் பற்றித் திருவள்ளுவர் தம் குறட்பாக்கள் பலவற்றின்வழி விரித்துரைத்துள்ளார். அவற்றோடு தனி நபர் ஆளுமை, பிறரை ஆளுதல், செயலில் வெற்றி போன்றவை குறித்து பற்பல தகவல்களைக் குறிப்பிட்டுள்ளார்.

இவை போன்ற கருத்துக்கள் நாலடியார், ஆசாரக்கோவை, இன்னாநாற்பது, முதுமொழிக் காஞ்சி, கொன்றைவேந்தன், நன்னெறி, நீதிநெறி விளக்கம், வெற்றி வேற்கை, உலகநீதி போன்ற நீதிஇலக்கிய நூல்களிலும் சுட்டப் பெற்றுள்ளன. இருப்பினும் அதிக அளவில் விரிந்த பொருளில் திருக்குறளில் மட்டுமே அவை வெளிப்பட்டுள்ளன என்பது குறிப்பிடத்தக்கது.

## தொகுப்புரை

சங்க காலச் சமுதாய அமைப்பில் மக்கள் வெறுப்புற்றனர். வாழ்க்கையில் ஒழுக்கநெறியை விரும்பினர். அவர்களின் தேவைக்கு ஏற்ப நீதி நூல்கள் தோன்றலாயின.

வரலாற்று அடிப்படையில் அற நூல்கள் சங்க இலக்கியங்களை அடுத்துத் தோன்றியவை என்பது அறிஞர்களின் முடிபு.

நீதி நூல்களுள் முதலில் தோன்றியது திருக்குறள். அது மட்டுமல்ல, தமிழக வரலாற்றில் அரசுக்குரிய சட்ட திட்டங்களைத் தொகுத்தளித்த முதல் நூலும் அதுவே.

ஓர் உணர்கிற நோக்கத்திற்கான பின் தொடர்கையாக எடுக்கப்பட்ட தீர்மான நடவடிக்கையே 'நிர்வாகம்' ஆகும். வள்ளுவர் காலத்தில் 'நிர்வாகம்' என்ற சொல் ஆளப்பெறவில்லை என்றாலும் கூட, அச்சொல் உணர்த்தும் பொருண்மைகள் அக்கால வழக்கில் இருந்துள்ளமையைத் திருக்குறள் வழி உணரமுடிகிறது. அப் பொருண்மைகளுக்கு வள்ளுவர் வரையறையும் விதிமுறைகளும் வகுத்துள்ளார் என்பதனை அறியமுடிகிறது.

ஒருவர் தன்னை ஆளவும், பிறரை ஆளவும், பிறிதொரு குழுவினரை ஆளவும் நேர்மை, சிறந்த அறிவு, பொறுமை, தளராத முயற்சி, ஈகை, சோர்வின்மை, மனஉறுதி, செயலாற்றும் திறமை போன்றவை முதன்மைத் தேவை. அவற்றை வள்ளுவர் தம் குறட்பாக்களின் வழி விரித்துரைத்துள்ளார். அக் கருத்துக்களைப் பிற நீதி இலக்கியங்கள் சுட்டியுள்ள போதிலும் வள்ளுவர் அவற்றை விரிவாக எடுத்துரைத்துள்ளமை சிந்திக்கத்தக்கது.

## அடிக்குறிப்புகள்

1. ச.வே. சுப்பிரமணியன் (ப.ஆ.), தமிழ் இலக்கண நூல்கள், ப. 270.
2. ந. பிச்சமுத்து, திறனாய்வும் தமிழ் இலக்கியக் கொள்கைகளும், ப. 152.
3. அ. வேலுப்பிள்ளை, தமிழ் இலக்கியத்தில் காலமும் கருத்தும், ப. 80.
4. ச.வே. சுப்பிரமணியன் (ப.ஆ.), மு.நூ., ப. 57.
5. ந. பிச்சமுத்து, மு.நூ., ப. 156.
6. மு. வரதராசனார், திருவள்ளுவர் அல்லது வாழ்க்கை விளக்கம், அணிந்துரை, ப.8.
7. சி. பாலசுப்பிரமணியன், தமிழ் இலக்கிய வரலாறு, பக். 80-81.
8. ந. பிச்சமுத்து, மு.நூ., ப. 157.
9. மு. வரதராசனார், மு.நூ., முன்னுரை, ப. 52.
10. ந. பிச்சமுத்து, மு.நூ., ப. 158.
11. சி. பாலசுப்பிரமணியன், மு.நூ., ப. 85.
12. ச.வே. சுப்பிரமணியம் (ப.ஆ.), சங்க இலக்கியம் மூலமும் உரையும், ப. 160.
13. மேலது, ப.161.
14. கி.வ. ஜகந்நாதன் (ப.ஆ.), திருக்குறள் ஆராய்ச்சிப் பதிப்பு, ப.29.
15. மேலது, ப.31.
16. A.S. Hornby, oxfored Advanced Learner's Dictionary of current English, P.15.
17. இரா. பாஸ்கரசேதுபதி, பொது நிருவாகவியல், ப. 1.
18. L.D. White, Introduction to the study of public Administration, P. 30.
19. மேற்கோள் : இரா. பாஸ்கரசேதுபதி, மு.நூ., ப. 2.

# இயல் இரண்டு

# திருக்குறளும் பொது நிர்வாகமும்

நிர்வாகவியலின் ஒரு பிரிவான பொது நிர்வாகம் பற்றியும் அதன் கோட்பாடுகள், வகைகள், தனித்தன்மைகள், சிறப்புகள் பற்றியும் விளக்கிக் கூறி, திருக்குறளில் வெளிப்பட்டுள்ள பொதுநிர்வாகக் கருத்தாக்கங்களை எடுத்துரைப்பதாக இந்த இயல் அமைகிறது.

## 'பொதுநிர்வாகம்' - விளக்கம்

'நிர்வாகம்' என்ற சொல்லோடு முன்னொட்டாக அமைந்துள்ள 'பொது' என்ற சொல் இங்கு, 'அரசாங்க நிர்வாகத்தால் நேரடியாகவும் மறைமுகமாகவும் செய்யப்படும் அனைத்து பணிகளையும் உள்ளடக்கியது' என்ற பொருளினைக் கொண்டுள்ளது.

எஸ். விஜயன் என்பவர்,

> "நீதித்துறை, நிர்வாகத்துறை, அரசியல் துறை ஆகிய மூன்று துறைகளின் செயல்பாடுகளைக் குறிப்பது பொதுநிர்வாகம்"[1]

என்று குறிப்பிட்டுள்ளார்.

> இரா. பாஸ்கரசேதுபதி, "ஒரு நாட்டின் நிர்வாக முறை, அரசின் செயல்பாடுகள், பொதுநலத் திட்ட அமலாக்கம், நீதியமைப்பு, நிர்வாகம் போன்றவற்றைப் பொது நிர்வாகம் எனலாம்"[2]

என்று 'பொது நிர்வாகம்' குறித்து விளக்கம் அளித்துள்ளார்.

எல்.டி. வொயிட் என்ற அறிஞர்,

“பொதுக் கொள்கைகளை அமல்படுத்துதல் அல்லது நிறைவேற்றுவதற்கான நோக்கங்களின் அனைத்துச் செயல்முறை நடவடிக்கைகளையும் உள்ளடக்கியதே பொது நிர்வாகம்”[3].

என்று விளக்கியுள்ளார்.

ஓர் அரசின் செயல்பாட்டு முறையே ‘பொது நிர்வாகம்’ எனலாம்.

## ‘அரசு’ மற்றும் ‘அரசாங்கம்’ - விளக்கம்

இத்தாலிய அரசியல் மேதை மாக்கியவெல்லி, ‘அரசு’ (State) என்ற சொல்லை முதன் முதலில் பயன்படுத்தினார்.

பிளண்ட் சிலியின் கருத்துப்படி,

> “அரசு என்பது, ஒரு குறிப்பிட்ட நிலப்பரப்பில் வாழும்
> மக்களின் அரசியல் சார்ந்த அமைப்பு”[4]

என்பதாகும்.

இவ் அரசு நான்கு இன்றியமையாத பண்புகளைக் கொண்டிருக்கும். அவை; 1.மக்கள் தொகை, 2. நிலப்பரப்பு, 3. அரசாங்கம், 4. இறைமை என்பனவாகும்.

அரசும் அரசாங்கமும் ஒரே பொருளிலேயே குறிக்கப்பெறுகின்றன. அரசாங்கம் என்பது ஓர் அரசியல் நிறுவனமாகும்.

அரசாங்கத்தால் மட்டுமே ஒரு குறிப்பிட்ட நிலப்பரப்பில் வாழும் மக்களால் ஓர் அரசை உருவாக்க இயலும். அரசாங்கம் பின்வரும் மூன்று நிறுவனங்களால் செயல்பட்டுவருகிறது. 1. சட்டமன்றம், 2. ஆட்சித்துறை, 3. நீதித் துறை.

கி.பி. 19 ஆம் நூற்றாண்டில் ஜான்லாக் என்ற அறிஞர் அரசுக்கும் அரசாங்கத்திற்கும் (State and Government) இடையேயுள்ள வேறுபாட்டை விளக்கினார்.

| அரசு | அரசாங்கம் |
|---|---|
| மக்கள் தொகை, நிலப்பரப்பு, அரசாங்கம், இறைமை ஆகிய நான்கு பண்புகளைக் கொண்டது | அரசின் நான்கு பண்புகளுள் ஒன்றாகும் |
| இறைமை உண்டு | இறைமை இல்லை |
| நிலையானது | தற்காலிகமானது |
| அரசினுள் வாழும் மொத்த மக்கள் கூட்டத்தையே உள்ளடக்கியது | மொத்த மக்கள் கூட்டத்தில் ஒரு சிறு பகுதியை உள்ளடக்கியது |
| புலனாகாதது | புலனாகக் கூடியது |
| ஒருவகைத் தன்மையுடையது | பலவகைத் தன்மையுடையது |
| இதனை மக்கள் எதிர்க்க முடியாது | இதனை மக்கள் எதிர்க்க முடியும் |

ஒரு சமுதாயம் அரசியல் அடிப்படையில் ஒருமுகப்படுத்தப்படுகின்ற போது அதனை ‘அரசு’ என்றும் அதனைச் செயல்படுத்தும் இன்றியமையாதக் காரணியை ‘அரசாங்கம்’ என்றும் கூறலாம்.

## திருக்குறளில் அரசு, அரசாங்க நிர்வாக முறைகள்

கிரேக்க அறிஞர் அரசாங்கத்தை மூவகையாகப் பகுத்து, விளக்கம் அளித்துள்ளார். அவை 1. ஒருவரது அரசாங்கம், 2. சிலரது அரசாங்கம், 3. பலரது அரசாங்கம் என்பனவாகும்.

> "அரசின் இறையாமையும் அரசாங்கமும் ஒருவரிடம் அடங்கியிருந்தால் அதை 'ஒருவரது அரசாங்கம்' என்றும் சிலரிடம் அடங்கியிருந்தால் அதைச் 'சிலரது அரசாங்கம்' என்றும் பலரிடம் அடங்கியிருந்தால் அதைப் 'பலரது அரசாங்கம்' என்று அரிஸ்டாட்டில் வரையறுத்துள்ளார்"[5]

என்று ஆர். தங்கராஜ் குறிப்பிட்டுள்ளார். க.ப. அறவாணன்,

> "தனி ஒருவன் ஆளும் தனிநபர் ஆட்சி (Minacity), ஆளுதற்கு என்று தனி உரிமைபெற்ற சிலர் ஆளும் ஆட்சி (Aristocracy), மக்கள் ஆளும் குடியாட்சி (Democracy) எனும் மூன்றை அரிஸ்டாட்டில் குறிப்பார். சிலர் ஆட்சி (Oli garchy) எனும் ஒன்றை மாக்ஈவர் குறிப்பிடுவார். முடியாட்சி, குடியாட்சி என்ற இரண்டை நம் வழக்கமாகச் சுட்டுகிறோம்"[6]

என்று சுட்டிக்காட்டியுள்ளார்.

தந்தைக்குப்பின் மூத்தமகன் முடிசூட்டி ஆளுவது 'முடியாட்சி'. மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர்களைக் கொண்டு மக்களுக்காகச் செயல்படும் கட்சி வழியான அரசாட்சி 'குடியாட்சி'. வள்ளுவர் இவ்விரு ஆட்சி முறைகளையும் தவிர்த்துவிட்டுப் புதியதொரு ஆட்சிமுறையான 'அறவோர் ஆட்சி'யை வலியுறுத்தியுள்ளார்.

வள்ளுவர் அரசியல் பற்றிய கருத்துக்களைப் பொருட்பாலில் 'அரசியல்' எனும் பிரிவில் 25 அதிகாரங்களிலும் 'அங்க இயல்' எனும் தலைப்பில் 32 அதிகாரங்களிலும் விரிவாக விளக்கியுள்ளார். 'முடியாட்சி' பற்றி வள்ளுவர்,

"குடிதழீஇக் கோல்ஓச்சும் மாநில மன்னன்

அடிதழீஇ நிற்கும் உலகு"[7]

எனக்குடிமக்களை அன்போடு நடத்தி நீதிமுறை தவறாமல் அரசாளும் மன்னனை 'உலகம் போற்றும்' என்ற பொருள்படக் கூறியுள்ளார்.

இக்கருத்தை அடியொற்றிப் பழமொழி நூலில்,

"எந் நெறியானும் இறைவன்தன் மக்களைச்

செந் நெறிமேல் நிற்பச் செயல் வேண்டும், அந்நெறி

மான் சேர்ந்த நோக்கினாய் - ஆங்க, அணங்கு ஆகும்

தான் செய்த பாவை தனக்கு"[8]

என, அரசன் தன் கீழ் வாழும் குடிமக்களை நல்ல நெறிகளைப் பின்பற்றும் நற்குடி மக்கள் ஆக்குதல் வேண்டும் என்ற உட்பொருளில் சுட்டப்பெற்றுள்ளது.

திருக்குறளில் குடியரசு ஆட்சியைப்பற்றி எக்குறிப்பும் இல்லை என்பது சுட்டத்தக்கது. ஆனால், குடியரசு போன்றதொரு அமைப்பின் தீமைபற்றி 'நாடு' மற்றும் 'உட்பகை' ஆகிய இரண்டு அதிகாரங்களில் சுட்டியுள்ளார்.

'நாடு' என்ற அதிகாரத்தில்,

“பல்குழுவும் பாழ்செய்யும் உட்பகையும் வேந்தலைக்கும்

கொல்குறும்பும் இல்லது நாடு”[9]

என, மாறுபட்டுக் கூடும் பல கூட்டம் அரசு நடத்த இடையூறாக அமையும் தன்மையினைக் குறிப்பிட்டுள்ளார்.

உட்பகை என்ற அதிகாரத்தில்,

“உட்பகை அஞ்சித்தற் காக்க உலைவிடத்து

மட்பகையின் மாணத் தெறும்”[10]

எனத் ‘தன்னைச் சுற்றித் தனக்கு வேண்டியவர் போலிருந்து துன்பந் தரும் தீயோரிடமிருந்து தன்னைக் காத்துக் கொள்ள வேண்டும்’ என்று சுட்டியுள்ளார்.

இக்கருத்தை அடியொற்றி நீதிநெறி விளக்கம்,

“புறம் நட்டு அகம் வேர்ப்பார் நச்சுப் பகைமை

வெளியிட்டு, வேறாதல் வேண்டும்; கழி பெருங்

கண்ணோட்டம் செய்யார் கருவி இட்டு ஆற்றுவார்

புண் வைத்து மூடார் பொதிந்து”[11]

என, ‘வெளியே சிரித்துக்கொண்டு உள்ளத்தில் புழுங்குவோருடைய நஞ்சை ஒத்த பகைமையைக் கண்டறிந்து வெளிப்படையாகப் புலப்படுத்தி, வஞ்சகரிடமிருந்து பிரிந்து விடுதல் வேண்டும்’ என்று குறிப்பிட்டுள்ளது.

ஆக, 'மாற்றுக் கருத்துடைய பல்வேறு கட்சியினருடைய கூட்டம் நிறைந்த குடியாட்சி நன்மை பயக்காது' என்பது நீதி நூல்களின் கருத்தாகும். திருவள்ளுவா், 'பல்வேறு கட்சிகள் அமைத்து நடத்தப் பெறும் குடியரசு ஆட்சி முறையை விரும்பவில்லை' என அறியமுடிகிறது.

'முடியரசு' குறித்து வள்ளுவரின் கருத்துக்களை இனிக் காண்போம். 'அரசியல்' எனும் பிரிவில் 25 அதிகாரங்களில் குறிப்பாக, 39 ஆவது அதிகாரம் தொடங்கி 64 ஆவது அதிகாரம் வரை 250 குறட்பாக்களிலும் 'அங்க இயல்' எனும் பிரிவில் 32 அதிகாரங்களில் குறிப்பாக, 64 ஆவது அதிகாரம் தொடங்கி 95 ஆவது அதிகாரம் வரை 320 குறட்பாக்களிலும் எவ்விடத்திலும் தந்தை, மகன் மற்றும் அரசன், இளவரசன் என்ற சொற்களைக் குறிப்பிடவில்லை.

தந்தை, மகன் பற்றித் "தந்தை மகற்காற்றும் உதவி"[12] என்றும் "மகன் தந்தைக் காற்றும் உதவி"[13] என்றும் மகன் தாய் உறவைத் "தன் மகனைச் சான்றோன் எனக் கேட்ட தாய்"[14] என்றும் ஈன்றாள் மகன் என்பதை "ஈன்றாள் பசி காண்பானாயினும்"[15] என்றும் "ஈன்றாள் முகத்தேயும் இன்னாதால்"[16] என்றும் பெற்றோர் பிள்ளைகள் உறவைச் சுட்டிக் காட்டியுள்ள வள்ளுவா் தந்தைக்குப் பின் மகன் என்றோ, மகள் என்றோ பெயரன் அல்லது பெயா்த்தி என்றோ, கணவனுக்குப் பின் மனைவி என்றோ வாரிசு அரசு உருவாவதைச் சுட்டவில்லை.

அரசர் தலைமைக்குத் திருவள்ளுவர் ஆடவரை மட்டுமே கருதினார். பெண்களை அரசத் தலைமைக்குத் கருதவில்லை. இறைவன், மன்னவன், காவலன் என்று அவர் ஆண்பால் ஈற்றில் மட்டுமே நாட்டுத் தலைமை வகிப்பவரைக் குறிப்பிட்டுள்ளார்.

'ஆளுவோர் பெண் கூறுவதைக் கேட்டு ஆட்சி புரிதலாகாது' எனும் கருத்தில், 'பெண் வழிச்சேறல்' எனும் தனி அதிகாரத்தை வள்ளுவர் வகுத்திருப்பது சிந்திக்-கத்தக்கது. "பெண்ணேவல் செய்தொழுகுதல் ஆண்மை"[17] என்றும் "பெண்ணேவல் செய்வார்"[18] என்றும் சுட்டிய வள்ளுவர் பெண்வழிச் செயல்படுவாரைக் கண்டிந்துள்ளார்.

வள்ளுவர் பெண் மைய அரசுக்கும் வாரிசுரிமை அரசான முடியாட்சிக்கும் எதிரானவர் எனலாம்.

குடியாட்சியையும் முடியாட்சியையும் புறக்கணிக்கும் வள்ளுவர் வலியுறுத்தும் புதிய ஆட்சிமுறை, 'அறவோர் அரசாட்சி முறை'யாகும்.

வள்ளுவர் தனது அரசியல் கோட்பாட்டில் பின்வருவோரைக் குறிப்பிட்டுக் கூறியுள்ளார். 1. கற்றவர், 2. அறிஞர், 3. சுற்றத்தார், 4. அமைச்சர், 5. படைஞர், 6.நண்பர், 7. சான்றோர், 8. பண்பாளர், இவர்களைத் தவிரப் 'பெரியார்' என்போரைச் சிறப்பாகச் சுட்டியுள்ளார். செருக்கு, சினம், காமம், கஞ்சத்தனம், நன்மையின் நீங்கிய மானம், அளவிறந்த உவகை எனும் ஆறுதீநெறி விலக்கி நன்னெறிச் செலுத்தும் பேரறிவுடையாரைத் துணை கொள்ள வேண்டும் என்றும் அவரை அவமதிக்காமல் அணைத்து ஒழுகவேண்டும் என்றும் 'பெரியாரைத் துணைக் கோடல்' எனும் அதிகாரத்திலும் 'பெரியாரைப் பிழையாமை' எனும் அதிகாரத்திலும் வலியுறுத்தியுள்ளார்.

இப் பெரியார், அறனறிந்து மூத்த அறிவுடையவராகவும் உற்ற நோய் நீக்கி வருமுன் காப்பவராகவும் வேண்டும் அறிவு, வயது முதலியவற்றால் ஆளுகிற தன்னைவிடப் பெரியவராகவும் பாவங்களும் நீதி அல்லனவும் அரசர் செய்தால் அஞ்சாது இடித்து உரைப்பவராகவும் குன்றை ஒத்தவராகவும் ஏந்திய கொள்கையராகவும் இறந்து அமைந்த சார்வுடையவராகவும் இருத்தல் வேண்டும் என விதிமுறைகளை வகுத்துள்ளார் வள்ளுவர்.

கல்வி, படைத்திறமை, உறவு, நட்பு முதலானவற்றைத் தகுதியாக்காமல் ஏந்திய கொள்கையையும் சார்பையும் மூப்பையும் பெரியாருக்குத் திருவள்ளுவர் தகுதிகளாகச் சுட்டியுள்ளார்.

இப்பெரியார் அரசனின் தீ நடத்தைகளைக் கண்டு வெறுப்பாராயின் அரசர் பதவி இழப்பார். இதனை, "வேந்தனும் வேந்து கெடும்"[19] என்று வள்ளுவர் குறிப்பிட்டுள்ளார்.

எனவே, 'பெரியார்' எனப்பெறும் 'அறவோர்' திருவள்ளுவர் வகுத்துள்ள அரசியல் கோட்பாட்டில் தலைமை இடம் வகிக்கும் ஆளுவோராக அமைந்துள்ளார் எனலாம். அறவோரது அரசியல் நிர்வாகம் குறித்து, வள்ளுவர் பல்வேறு குறட்பாக்களில் விளக்கியுள்ளார்.

அரசு, அறத்தின் அடிப்படையில் அமைய தூங்காமை, கல்வி, துணிவுடைமை ஆகிய மூன்று கணங்களும் அரசரிடம் நிலையாக இருக்க வேண்டும்; அறச்செயல் அல்லாதவற்றைக் கடிந்து அரசர் வீரம், நீதி தவறாது ஆட்சி செய்யவேண்டும் என ஏறத்தாழ 600 குறட்பாக்களின் வழியாக அரசியல் நிர்வாகம் பற்றிக் குறிப்பிட்டுள்ளார் வள்ளுவர்.

அரசுப் பணியாளர்களைக் கொண்டே அரசு நிர்வாகம் திறம்படச் செயலாற்றுகிறது. ஆக, அத்திறம் மிக்க அரசுப்பணியாளர்களுக்குச் சில தகுதிப்பாடுகள் உள்ளதாக வள்ளுவர் சுட்டியுள்ளார். அவை, 1.அன்பு, 2.அறிவு, 3.தோற்றம் என்பனவாகும். இவற்றுடன் கல்வி மற்றும் அறிவு ஆகியனவற்றையும் இணைத்துக் கொள்ளச் சொல்கிறார் வள்ளுவர். கல்வி என்பதைக் கற்றுத் தெரியவும் அறிவு என்பதைப் பொது அறிவு என்றும் பிரித்து எடுத்துரைத்துள்ளார்.

ஒருவரை ஒரு பணியில் நியமிக்கும் முன், அவரது குணத்தை நன்கறிய வேண்டும் என வள்ளுவர்,

"குணம்நாடிக் குற்றமும் நாடி அவற்றுள்
மிகைநாடி மிக்க கொளல்"[20]

என்ற குறட்பா வழிக் குறிப்பிட்டுள்ளார்.

ஒருவரின் தனித்துவ திறனை ஆய்ந்தறிந்து அவருக்கேற்ற தகுந்த பணியினை அவர்வசம் ஒப்படைக்க வேண்டும் எனத் திருவள்ளுவர்,

"இதனை இதனால் இவண் முடிக்கும் என்றாய்ந்
ததனை அவன்கண் விடல்"[21]

என்ற குறட்பாவில் தெரிவித்துள்ளார்.

இக்கருத்தையே பழமொழியும்,

"உற்றான் உறாஅன் எனல் வேண்டா ஒண் பொருளைக்
கற்றானை நோக்கியே கைவிடுக – கற்றான்
கிழவன் உரைகேட்கும்"[22]

என வழிமொழிந்துள்ளது.

பணியாளர்களுக்குப் பணியை ஒதுக்கீடு செய்வதையும் அவர்களை அப்பணிகளுக்குப் பொறுப்பு ஏற்கவைக்கும் நிலையையும் வள்ளுவர் வரையறுத்துள்ளார். பணியில் கடமையும் பொறுப்பும் ஒன்றாகவே சொல்லவேண்டுமென்ற நிர்வாகச் செயலை வள்ளுவர்,

"வினைக்குரிமை நாடிய பின்றை அவனை
அதற்குரியன் ஆகச் செயல்"[23]

என்ற குறள்வழிப் புலப்படுத்தியுள்ளார்.

நிர்வாகச் செயல்பாட்டில், பணியாளர் தேர்வு, பணி ஒப்படைப்பு போன்றவை அடிப்படைக் காரணிகளாக அமைகின்றன. அவற்றில் சில இன்றியமையாத கூறுகளை வரைவிலக்கணத்தோடு வள்ளுவர் விளக்கியுள்ளமையை அறியமுடிகிறது.

## பொது நிர்வாக முறைமைகளைப் புலப்படுத்தும் குறட்பாக்கள்

நிர்ணயித்த இலக்கினை அடைவதற்காகச் செய்யப்படும் அனைத்து செயல்களும் பொது நிர்வாகத்தினுள் அடங்கும். பொதுக் கொள்கையால் நிர்வகிக்கப்படும் ஒவ்வொரு செயல்பாடும் பொது நிர்வாகத்தின் பரப்பு எல்லைக்குள் உட்படும். பொதுநிர்வாகச் சட்டகத்தைப் பின்வருமாறு வகுத்துக் கொள்ளலாம்.

பொது நிர்வாகம்

↓

மக்களுக்குச் சேவை செய்தல்

↓

கொள்கைகள் வழியாக

↓

அ. திட்டமிடுதல்

ஆ. அமைப்பு

இ. பணியாளர்கள்

ஈ. வழிகாட்டல்

உ. ஒருங்கிணைப்பு

ஊ. அறிக்கை

எ. வரவு - செலவு

↓

அனைத்துப் பணிகளையும்
ஒருங்கிணைத்தல்

## அ. திட்டமிடுதல்

நிர்ணயிக்கப்பட்ட இலக்கினை அடைய என்ன செய்ய வேண்டும், அதனை எப்படிச் செய்ய வேண்டும் என்பதை முன்னரே மனத்தில் அல்லது எழுத்தால் வரைந்து கொள்வதே ‘திட்டமிடுதல்’ ஆகும்.

வள்ளுவர், ‘அங்க இயல்’ பகுதியில் வினைத்தூய்மை, வினைத்திட்பம், வினைசெயல்வகை ஆகிய மூன்று அதிகாரங்களில் திட்டமிடுதல் சார்ந்த நுட்பங்களைச் சுட்டியுள்ளார்.

"பொருள்கருவி காலம் வினையிடனொடு ஐந்தும்

இருள்தீர எண்ணிச் செயல்"[24]

என்ற குறட்பாவில் வள்ளுவர், 'தேவைப்படும் பொருள், ஏற்ற கருவி, தகுந்த காலம், செய்யத் தகுந்த செயல், அதற்கான இடம் ஆகிய ஐந்தினையும் தீர ஆலோசித்துப் பின்னரே காரியங்கள் செய்ய முயலவேண்டும்' என்று திட்டமிட்டு ஒரு காரியத்தைச் செய்தல் குறித்து விளக்கியுள்ளார்.

நீதிநெறி விளக்கம் நூல்,

"நல்லவை செய்யத் தொடங்கினும், நோனாமே

அல்லன அல்லவற்றின் கொண்டு உய்க்கும் - எல்லி

வியன்நெறிச் செல்வாரை ஆறு அலைத்து உண்பார்

செலவு பிழைத்து உய்ப்பபோல்"[25]

என்று, 'ஒவ்வொரு செயலையும் ஒருவர் மேற்கொள்ளும்போது முறையான மேற்திட்டத்தையும் உரியதுணையையும் தேடிக் கொண்ட பின்பே செய்ய வேண்டும்' என்ற கருத்தை வெளிப்படுத்தியுள்ளது.

நான்மணிக்கடிகை நூல்,

"பின்னவாம், பின் அதிர்க்கும் செய்வினை என்பெறினும்

முன்னவாம் முன்னம் அறிந்தார்கட்கு என்னும்

அவா ஆம், அடைந்தார்கட்கு உள்ளம் தவாவாம்

அவா இல்லார் செய்யும் வினை"[26]

என்ற செய்யுள் வழியாக, 'எண்ணித் துணியாதவர்களுக்குத் துன்பங்கள் ஒரு செயலைத் தொடங்கிய பின்தான் தெரியவரும்; எண்ணித் துணிபவர்க்குத் தொடங்கும் முன்பே தெரியும்' என்ற கருத்தைப் புலப்படுத்தியுள்ளது.

## ஆ. அமைப்பு

இலக்கை அடையும் நோக்கத்திற்காக ஒரு முறையான அமைப்பினை ஏற்படுத்துதல் இன்றியமையாததாகும்.

அரசியலில் உள்ள அமைப்பிற்குப் பெயர் 'ஆட்சி அதிகாரம்' என்று பெயர். இது அரசமைப்புச் சட்டத்தின் வழியாக இயங்குகிறது. இவ் அமைப்பினைக் கட்டுப்படுத்துவதும் செயல்படுத்துவதும் மன்னரின் நேர்மை சார்ந்து அமையும். இது குறித்து வள்ளுவர்,

> "இறைகாக்கும் வையகம் எல்லாம் அவனை
>
> முறைகாக்கும் முட்டாச் செயின்"[27]

என்று, 'தன் ஆளுகைக்குட்பட்ட உலகையெல்லாம் அரசர் காப்பாற்றுகிறார் என்றால் அத்தகைய அரசரையும் கூட, நீதிநெறி தவறாது நடத்துகிற ஆட்சிமுறை உடனிருந்து காப்பாற்றும்' என்ற கருத்துப் புலப்படக் கூறியுள்ளார்.

நேரிய ஆட்சி அமைப்பு குறித்து நீதி நெறி விளக்கம்,

> "ஒற்றின் தெரியா, சிறைப்புறத்து ஓர்தும் எனப்
>
> பொன் - தோள் துணையாத் தெரிதந்தும் குற்றம்

அறிவரிது என்று அஞ்சுவதே செங்கோண்மை சென்று

முறையிடினும் கேளாமை அன்று''[28]

என, 'ஒற்றா்களால் குடிமக்களின் குற்றம் குறைகளை முற்றும் அறிந்திட முடியாது என மறைவிடத்து இருந்து அறிந்து தெளிவடைவோம் என முடிவு செய்து, தானே நேரில் சென்று தம் தோள்கள் துணையாகக் கண்டறிந்து, குற்றங்களை நீக்கி அரசாளுவதும் குற்றங்களுக்காக அஞ்சுவதுமே நேரிய ஆட்சி ஆகும் என்ற கருத்தினைத் தெரிவித்துள்ளது.

அரசின் ஆட்சிக்கு உறுதுணையாகப் பல அமைப்புகள் தேவை. நாட்டின் பாதுகாப்பிற்கான அமைப்பு படை. அது சில வசதிகளுடன்தான் இயங்க முடியும். இன்றியமையாதது கோட்டை (அரண்). அத்துடன் இயற்கையாகவே மலையும் காடும் பாதுகாப்பாக இருத்தல் நலம்.

அரசு நடைபெறப் பொருள் வேண்டும். மக்கள் நல்வாழ்விற்கு வேண்டியன செய்யவும் பொருள் வேண்டும். அதைச் சேர்க்கவும், செலவிடவும் அமைச்சா் குழு தேவை. மக்களின் வழக்குகளில் நீதி வழங்க அவைப் பெரியோா் வேண்டும். அரசருக்கு ஆலோசனை கூற, ஊதியத்தை எதிா்பாராது அரசா் நலத்தில் அக்கறையுள்ள பெரியோா் தேவை. உட்பகையையும் வெளிப்பகையையும் அறிந்து நீக்க வேண்டிய அறிவு அரசருக்குத் தேவை. இவற்றைத் தக்க காலத்தில் அறிவிக்கும் ஒற்றா் படை வேண்டும்.

இத்தகு அமைப்புகளைச் சிறப்புற உருவாக்கி ஆள்பவரே, சிறந்த நிா்வாகமுறைச் சிந்தனை படைத்த அரசராக இருக்க இயலும்.

## இ. பணியாளர்கள்

பணியின் தன்மைக்குத் தகுந்த பணியாளர்களைத் தேர்ந்து பணியமர்த்துவதும் பணியாளர்களுக்கு அவர்கள் மேற்கொள்ளும் பணி குறித்த புரிதலை உருவாக்குவதும் அது குறித்துப் பயிற்சியளித்தல், பணியிடத்தை நிர்வகித்தல் போன்றனவும் இதனுள் அடங்கும்.

(இவை குறித்து வள்ளுவர் வகுத்துள்ள குறட்பாக்களை இந்த இயலின் முதல் பகுதியில் ஆய்வாளர் குறிப்பிட்டுள்ளதால் இவ்விடத்தில் அவற்றை மீண்டும் கூறாமல் தவிர்த்துள்ளார்.)

## ஈ. வழிகாட்டல்

திட்டமிட்டு எடுத்த முடிவுகளைச் செயல்வடிவமாக்க உதவுவதை வழிகாட்டல் எனலாம்.

அக்கால நிர்வாகமுறையில் ஒரு பெரும் பிரிவாகப் போர்வீரர்களை நிர்வகித்தலும் வழிநடத்தலும் இருந்துள்ளது. படை, படைவீரர்கள் குறித்து வள்ளுவர் 'படைமாட்சி', 'படைச்செருக்கு' ஆகிய இரண்டு அதிகாரங்களில் பல்வேறு கருத்துக்களைக் கூறியுள்ளார்.

போர் புரியத் திட்டமிட்டவுடன், அதனைச் செல்வனே செய்து வெற்றிபெற பல்வேறு வழிகாட்டல்களை வள்ளுவர் நல்கியுள்ளார்.

"ஒலித்தக்கால் என் ஆம் உவரி எலிப்பகை

நாகம் உயிர்ப்பக் கெடும்"[29]

என்ற குறட்பாவில், கடல்போலக் கூடிச் சத்தமிட்டாலும் எலிப்படை, பாம்பு மூச்சுவிட்டால் போதும் ஓடி ஒளிந்து கொள்ளும் என்றும் படையின் அளவு அல்ல; திறமைதான் இன்றியமையாதது என்றும் வள்ளுவர் வெளிப்படுத்தியுள்ளார்.

இக்கருத்தை உட்பொதித்துப் பழமொழி நூல்,

> "வன் பாட்டவர் பகைகொள்ளினும் மேலாயார்
> புன் பாட்டவர் பகை கோடல் பயம் இன்றே
> கண் பாட்ட பூங் காவிக் கானல் அம் தண் சேர்ப்ப
> வெண் பாட்டம் வெள்ளம் தரும்"[30]

என்ற பாடல் வழியாக, வலிமை வாய்ந்த பகைவரிடம் போர் தொடுத்தால் நேரும் துன்பங்களைவிட எண்ணிக்கையில் சிலராக இருப்போர் மேல் தொடுக்கும் போர் மிகுதியான துன்பம் தரும் என்ற கருத்தைக் கூறியுள்ளது.

வள்ளுவர் படைவீரர் வெற்றிபெற நல்லதொரு கருத்தினை வழிகாட்டலாகப் பின்வருமாறு கூறியுள்ளார்.

> "மறம்மானம் மாண்ட வழிச்செலவு தேற்றம்
> எனநான்கே ஏமம் படைக்கு"[31]

இக் குறட்பாவில், குறையாத வீரமும் குன்றாத மானமும் நல்ல வழியில் செல்லலும் நாணயமாக நடத்தலும் படைவீரர்க்குப் புகழ்தரும் எனச் சுட்டப்பெற்றுள்ளது.

இக்கருத்தை அடியொற்றிப் பழமொழி நூல்,

"கொடையும் ஒழுக்கமும் கோள் உள் உணர்வும்

உடையர் எனப்பட்டு ஒழுகி பகைவர்

உடைய மேற்செல்கிற்கும் ஊற்றம் இலாதார்

படையின் படைத் தகைமை நன்று"[32]

என்ற பாடல் வழியாகப் படைவீரர்கள் கொடை, நல்ஒழுக்கம், குறிக்கோள், உள் உணர்வு ஆகியனவற்றைப் பெற்றவராக இருத்தல் வேண்டும் என்ற கருத்தை வலியுறுத்தியுள்ளது.

## உ. ஒருங்கிணைப்பு

நிர்வாகத்தின் பல்வேறு நிலைகளின் இடையே தொடர்புகளை ஏற்படுத்துவதே 'ஒருங்கிணைப்பு' ஆகும்.

ஓர் அரசர் திறம்பட நாட்டை ஆளுவதற்கு அவருக்குக் கீழ் உள்ள பல்வேறு நிலையிலான நிர்வாக உறவுகளை ஒருங்கிணைத்துக் கொள்வது இன்றி அமையாதது.

அரசருக்குரிய தலையாய செல்வங்கள் பற்றி வள்ளுவர்,

"படைகுடி கூழ் அமைச்சர் நட்பரசன் ஆறும்

உடையான் அரசருள் ஏறு"[33]

என்ற குறட்பாவில் குறிப்பிட்டுள்ளார். இக்குறட்பாவில் சுட்டப்பட்டுள்ள வலிமை மிக்கபடை வரிசை, நல்லொழுக்கமிக்க குடிமக்கள், திரளான பொருள்வளம், திறமையான மந்திரிகள், அண்டை நாட்டரசர் நட்பு, நல்ல பாதுகாவல் ஆகிய ஆறும் அரசருக்கு இன்றியமையாதவை. இவற்றை ஒன்றோடு ஒன்று தொடர்புபடுத்தி ஒருங்கிணைத்தால் அவ் அரசு நிலைத்து நிற்கும்.

"கொடை அளி செங்கோல் குடிஆம்பல் நான்கும்

உடையானாம் வேந்தர்க்கு ஒளி"[34]

என்ற குறட்பாவழியாக, இல்லையென்று வருவோர்க்குத் தருவதும் அன்பு செலுத்துவதும் ஆட்சிமுறை வழுவாதிருப்பதும் குடிமக்களைப் பாதுகாத்தலும் ஆகிய நான்கு குணமும் உடையவரே அரசரில் சிறந்த அரசர் என்று வள்ளுவர் மொழிந்துள்ளார்.

ஆட்சிக்குட்பட்ட நிர்வாகச் செயல்பாடுகளுக்குள் தொடர்பு வலுப்பட்டு இருந்தால்தான் ஒருங்கிணைப்புச் சிறக்கும். ஒருங்கமைந்த நிர்வாகத்தால்தான் நிலையான ஆட்சியை உருவாக்க இயலும்.

அரசர் தன் நிர்வாகத்திற்குட்பட்டோரைத் தன் அன்பான கட்டுப்பாட்டில் வைத்திருக்க வேண்டும் என்பதனைத் திரிகடுகம்,

"கோல் அஞ்சி வாழும் குடியும் குடிதழீஇ

ஆலம் வீழ் போலும் அமைச்சனும் வேலின்

கடை மணிபோல் திண்ணியான் காப்பும் இம்மூன்றும்

படைவேந்தன் பற்று விடல்"[35]

என்ற பாடல் வழியாகத் தெரிவித்துள்ளது.

## ஊ. அறிக்கை

நிர்வாகம் யாருடைய கட்டுப்பாட்டின் கீழ் இயங்குகிறதோ, அவர்களுக்கெல்லாம் என்ன நடைபெற்றுக் கொண்டிருக்கின்றன என்று அவ்வப்போது தெரியப்படுத்துதலை 'அறிக்கை' எனலாம்.

அரசர் தன் நாட்டினுள் நிகழ்பவற்றையும் தன் நாட்டிற்கு வெளியே நிகழ்பவற்றையும் ஒற்றர் வழியாக அறிந்துகொள்வர். தன் நிர்வாகத்திற்கு உட்பட்டுள்ள பணியாளர்களின் செயல்பாடுகளை அமைச்சர்கள் வழியாகத் தெரிந்து கொள்வர். தேவைப்படின், அரசர் தாமே நேரில் சென்று களப்பணி புரிந்து அறிவதும் மாறுவேடம் பூண்டு கண்காணிப்பதும் உண்டு. 'அறிக்கை' பெரும்பாலும் செவி வழியாகவே பெறப்பட்டது. தேவை கருதிமட்டும் எழுத்துவழியாகப் பெறப்பட்டது.

இத்தகைய அறிக்கை குறித்த குறிப்பு திருக்குறளில் இல்லை. ஆனால், அவ் அறிக்கையின் மீதான அரசரின் மேல் நடவடிக்கைகளுக்கு முன் அரசர் செய்யவேண்டியன, விழிப்புடன் செயல்படவேண்டியன குறித்த குறிப்புக்கள் திருக்குறளில் உள்ளன.

> "எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும் அப்பொருள்
> மெய்ப்பொருள் காண்ப தறிவு"[36]

இக்குறட்பாக்கு உரைசெய்துள்ள சுப. அண்ணாமலை,

> "அரசியல் ஒரு சூதாட்டக் களம். சதிகளின் சதுரங்கம். சாணக்கியத்தின் தலைவிரிப்பைக் காணும் அரங்கம். சிறிதே ஏமாறினால் பேரிழப்பைச் சந்திக்க வேண்டும். ஆதலால், அரசர் இவற்றை உணர்ந்து கொண்டு, முறியடிப்பதற்கு என்றே உளவாளிகளை அமர்த்தியிருப்பார். அவர்கள் கொண்டு வரும் செய்திகளை அவை யார் சொன்னவையாக இருந்தாலும் அவற்றை அரசர் ஆராய்ந்து உண்மையை அறியவேண்டும்"[37]

என, அறிக்கைமீது நுண்ணிய கவனத்தை அரசா் செலுத்த வேண்டும் என்று வள்ளுவா் எடுத்துரைப்பதாகக் கூறியுள்ளாா்.

இக்கருத்தினைச் சிறுபஞ்சமூலமும் பின்வருமாறு சுட்டியுள்ளது.

> "தன் நிலையும் தாழாத் தொழில் நிலையும் துப்பு எதிா்ந்தாா்
> இன்நிலையும் ஈடு இவ் இயல் நிலையும் துன்னி
> அளந்து அறிந்து செய்வான் அரைசு அமைச்சன் யாதும்
> பிளந்து அறியும் போ் ஆற்றலான்"[38]

இதற்கு விளக்க உரையாக க.ப. அறவாணன்,

> "தன்னுடைய பொருளாதாரம் உட்பகை நிலைமை, நாட்டில் நடந்துவரும் தொழில்களின் நிலைமை, எதிரியின் நிலைமை, உலகியல் நிலைமை ஆகியவற்றை அளந்து அறிந்து செயல்படுபவரே அரசா்"[39]

என்று கூறியுள்ளாா்.

இனியவை நாற்பது நூலிலும் இத்தகு கருத்து காணப்படுகிறது.

> "ஒற்றினான் ஒற்றிப் பொருள் தெரியும் மாண்பு இனிதே
> முன்தான் தெரிந்து முறை செய்தல் முன் இனிதே
> பற்று இலனாய்ப் பல்லுயிா்க்கும் பாா்த்து உற்றுப் பாங்கு அறிதல்
> வெற்ற வேல் வேந்தா்க்கு இனிது"[40]

என்ற இப்பாடலுக்கு உரைசெய்துள்ள க.ப. அறவாணன்,

> "வேந்தரின் வெற்றிக்கு உரிய இனியவை வருமாறு ஒற்றர்களால் உரிய செய்திகளைத் திரட்டி முடிவு செய்தல், இருபக்கமும் முழுமையாக விசாரித்து அறிந்து தீர்ப்பு வழங்கல், பற்றற்று எல்லா உயிர்களுக்கும் பகுத்து அளித்தல்"[41]

என்று சுட்டியுள்ளார்.

## எ. வரவு - செலவு

அரசின் பொறுப்புக்கள் மூன்று ஆகும். அவை; 1. வருவாய் ஆட்சி (நாட்டின் வளர்ச்சியும் இதில் அடக்கம்), 2. நீதி ஆட்சி, 3. படை ஆட்சி என்பனவாகும்.

'வருவாய்' என்பது அரசாங்கத்திற்கு வரி, சுங்கம், தீர்வை முதலியவற்றின் வழியாக வருவது. நாட்டு மக்களின் தொகை, தேவை இவற்றுக்கு ஏற்ப அரசிற்கு வருவாய் வரவேண்டும். ஆனால், வளத்திலிருந்துதான் வரவேண்டுமாதலால், வளங்களைச் சரியாகத் தெரிந்து, பயன்படுத்தும் வழியையும் தெரிந்து கொள்ள வேண்டும். மக்களுக்கு உழைப்பு மிகுதியாக இருந்தால், வளங்களைக் கூட, மூலப்பொருளாக மற்ற நாட்டிலிருந்து வாங்கிக் கொள்ளலாம். மக்களின் வருமானம் பெருகினால்தான் அரசின் வருவாயும் பெருகும்.

மக்களின் வருவாயையும், மன்னரின் வருவாயையும் பாதுகாக்க வேண்டிய பெரும் பொறுப்பு மன்னரையே சாரும். வரவு - செலவுத் திட்டத்தில் இடையில் உள்ள இந்தப் பாதுகாவல்தான் தலைமையானது. அரசுப் பணம் அதிகார வர்க்கத்திற்கு ஊதியம் முதலியவற்றைக் கொடுப்பதற்கே செலவாகி விடாமல்

பார்ப்பதும் பாதுகாப்புத்தான். அரசே தொழில்களில் பணத்தை மூலதனமாகப் போடுவதும் பாதுகாப்பு ஆகும்; வருவாய் வரும் வழியுமாகும்; மக்களின் வருவாய்க்கு வழி செய்வதுமாகும்.

அரசரிடம் பாதுகாத்து வைக்கப்பட்ட பணத்தை அளவாக மக்களின் நல்வாழ்வு, கல்வி, பொது சுகாதாரம், பொது மருத்துவம், தொழில்கட்குக் கடனுதவி, ஊக்க உதவி, பஞ்சக் காலத்தில் உணவு வழங்கல், அரசின் பல்வேறு துறைகளின் ஊழியர், அலுவலர் ஊதியம், மக்களின் பொழுது போக்கு, கலை வளர்ச்சி, பரிசளிப்பு, விருது வழங்கல், அரசரின் பொழுதுபோக்கு முதலிய இன்றியமையாத செலவீனங்களுக்குச் செலவிட வேண்டும்.

இந்நான்குச் செலவீனங்களுக்கும் கொள்கைகள் வகுத்துக்கொள்ள வேண்டும். பொருளாதாரக் கொள்கையும் நிதிக் கொள்கையும் தொழிற் கொள்கையும் ஏற்றுமதி, இறக்குமதிக் கொள்கையும் மற்றும் பல இதரக் கொள்கைகளும் இன்றியமையாதவை. இவற்றை வள்ளுவர்,

> “இயற்றலும் ஈட்டலும் காத்தலும் காத்த
>
> வகுத்தலும் வல்ல தரசு”[42]

என, ‘பொருள் வரும் வழிகளை ஆராய்ந்து தோற்றுவித்து அவற்றை வளர்ப்பதும் வந்துசேர்ந்த பொருள்களைப் பாதுகாப்பதும் பாதுகாத்த பொருள்களைப் பயன்தர வகுத்த வழிகளில் செலவிடுவதும் அரசின் இயல்பாகும்’ என்று கருத்துத் தெரிவித்துள்ளார்.

இக்கருத்தினை அடியொற்றி நீதிநெறி விளக்கம்,

"குடி கொன்று இறை கொள்ளும் கோமகற்குக் கற்றா

மடி கொன்று பால் கொளலும் மாண்பே குடி ஓம்பிக்

கொள்ளுமா கொள்வோற்குக் காண்டுமே மாநிதியம்

வெள்ளத்தின் மேலும் பல"[43]

என்று 'குடிமக்களால் வரி செலுத்த முடியாதபடி வரிமேல் வரி விதித்து வாட்டும் அரசருக்கு அன்றாடம் சிறுகச் சிறுகக் கறந்து பெறும் பாலுக்கு மாற்றாக மொத்தமாகப் பாலைப் பெற்றுவிடப் பசுவைக் கொன்று விடுதலும் இயலக் கூடியதே. அவ்வாறு செயல்படாது மக்களைப் பல்லாற்றானும் காப்பாற்றி மக்களால் இயன்றவற்றைத் திரையாகப் பெறும் செங்கோல் அரசர்க்குக் கோடி கோடியாகக் கருவூலத்தில் பொருள் நிறையும்' எனப் பொருள் கூறியுள்ளது.

இதுகாறும் கண்டவற்றால் பொது நிர்வாகக் கூறுகளான திட்டமிடுதல், அமைப்பு, பணியாளர்கள், வழிகாட்டல், ஒருங்கிணைப்பு, அறிக்கை, வரவு-செலவு முதலானவை பற்றித் திருக்குறள் பகர்ந்துள்ளன பற்றியும் அதனை அடியொற்றிப் பிற நீதி நூல்கள் உரைத்துள்ளமை பற்றியும் தெளிந்தறிந்தோம்.

## தொகுப்புரை

ஓர் அரசின் செயல்பாட்டு முறையே 'பொதுநிர்வாகம்' ஆகும்.

ஒரு சமுதாயம் அரசியல் அடிப்படையில் ஒருமுகப்படுத்தப்படுகின்ற போது அதனை 'அரசு' என்றும் அதனைச் செயல்படுத்தும் இன்றியமையாதக் காரணியை 'அரசாங்கம்' என்றும் கூறலாம்.

குடியாட்சியையும் முடியாட்சியையும் புறக்கணிக்கும் வள்ளுவர் வலியுறுத்தும் புதிய ஆட்சிமுறை ‘அறவோர் அரசாட்சி முறை’ ஆகும்.

பொது நிர்வாகக் கூறுகள் சார்ந்த தகவல்களைப் பரவலாக ஏறத்தாழ 600 குறட்பாக்களின் வழியாக வள்ளுவர் கூறுவதாகக் க.ப. அறவாணர் குறிப்பிட்டுள்ளார்.

‘திட்டமிடுதல்’ சார்ந்த கருத்துக்களை மூன்று அதிகாரங்களிலும் ‘அமைப்பு’ சார்ந்த குறிப்புகளை ஓர் அதிகாரத்திலும், ‘பணியாளர்கள்’ சார்ந்த தகவல்களை நான்கு அதிகாரங்களிலும், ‘வழிகாட்டல்’ சார்ந்த கருத்துக்களை இரண்டு அதிகாரங்களிலும், ‘ஒருங்கிணைப்பு’ பற்றிய குறிப்புகளை இரண்டு அதிகாரங்களிலும், ‘அறிக்கை’ குறித்த செய்திகளை ஓர் அதிகாரத்திலும், ‘வரவு - செலவு’ சார்ந்த கருத்துக்களை இரண்டு அதிகாரங்களிலும் வள்ளுவர் குறிப்பிட்டுள்ளார்.

## அடிக்குறிப்புகள்

1. எஸ். விஜயன், பொதுநிர்வாகத்தின் கொள்கைகள், ப. 3.
2. இரா. பாஸ்கரசேதுபதி, பொது நிருவாகவியல், ப. 163.
3. L.D. White, introduction to the study of public administration, p. 43.
4. ஆர். தங்கராஜ், தற்கால அரசியல் முறைகள், ப. 2.
5. மேலது, ப. 30.
6. க.ப. அறவாணன், தமிழர் இலக்கியச் சமூகத் தளங்கள், ப. 60
7. கி.வா. ஜகந்நாதன் (ப.ஆ.), திருக்குறள் ஆராய்ச்சிப் பதிப்பு, ப. 315.
8. க.ப. அறவாணன், அற இலக்கியக் களஞ்சியம், ப. 746.
9. கி.வா. ஜகந்நாதன் (ப.ஆ.), மு.நூ., ப. 401.
10. மேலது, ப. 470.
11. க.ப. அறவாணன், மு.நூ., ப. 763.
12. மேற்கோள்: SM Diaz (Ed.,), Tirukkural (Vol- 1), P. 130
13. ஞா. மாணிக்கவாசகன் (உ.ஆ.), திருக்குறள் எளியஉரை - இனிய நடை, ப. 15.
14. மேற்கோள்: SM Diaz (Ed.,) Tirukkural (Vol-1), P. 130.
15. ஞா. மாணிக்கவாசகன், மு.நூ., ப. 135.
16. மேற்கோள்: SM Diaz (Ed.,), Tirukkural (Vol – 2), P. 926.
17. கி.வா. ஜகந்நாதன் (ப.ஆ.), மு.நூ.ப. 482.
18. மேலது, ப. 483.
19. ஞா. மாணிக்கவாசகன் (உ.ஆ.), மு.நூ., ப. 183.
20. கி.வா. ஜகந்நாதன் (ப.ஆ.), மு.நூ., ப. 293.

21. மேலது, ப. 300
22. க.ப. அறவாணன், மு.நூ., ப. 794.
23. கி.வா. ஜகந்நாதன் (ப.ஆ.), மு.நூ., ப. 300.
24. மேலது, ப. 376.
25. க.ப. அறவாணன், மு.நூ., ப. 438.
26. தி.சு. பாலசுந்தரம் (உ.ஆ), நான்மணிக்கடிகை, ப.28.
27. கி.வா. ஜகந்நாதன் (ப.ஆ.), மு.நூ., ப. 921.
28. க.ப.. அறவாணன், மு.நூ., ப. 748.
29. கி.வா. ஜகந்நாதன் (ப.ஆ.), மு.நூ., ப. 414.
30. க.ப. அறவாணன், மு.நூ., ப. 921.
31. கி.வா. ஜகந்நாதன், (ப.ஆ.), மு.நூ., ப. 416.
32. க.ப. அறவாணன், மு.நூ., ப. 913.
33. மேற்கோள்: SM. Diaz (Ed.,), Tirukkural (Vol – 1), P. 417.
34. மேலது, P. 419.
35. பு,சி. புன்னைவனநாத முதலியார் (உ.ஆ.), திரிகடுகம், ப. 70.
36. கி.வா. ஜகந்நாதன் (ப.ஆ.,), மு.நூ., ப. 254.
37. சுப. அண்ணாமலை, திருக்குறள் சிந்தனை, பொருட்பால் முதற்பகுதி, ப. 59.
38. எம். நாராயண வேலுப்பிள்ளை (ப.ஆ.), பதினெண் கீழ்க்கணக்கு நூல்கள், ப.149.
39. க.ப. அறவாணன், மு.நூ., ப. 734.
40. ச.வே. சுப்பிரமணியன் (ப.ஆ.), மு.நூ., ப. 174.
41. க.ப. அறவாணன், மு.நூ., ப. 739.

# இயல் மூன்று

# நிர்வாக மேலாண்மைச் சிந்தனைகள்

மேலாண்மை பற்றியும் நிர்வாகத்திற்கும் மேலாண்மைக்கும் இடையே உள்ள உறவுநிலைப்பற்றியும் மேலாண்மையின் சிறப்பு மற்றும் இன்றியமையாமை குறித்தும் திருக்குறளில் வெளிப்பட்டுள்ள மேலாண்மைச் சிந்தனை சார்ந்த கருத்துக்களையும் எடுத்துரைப்பதாக இந்த இயல் அமைகிறது.

## 'மேலாண்மை' - பொருள் விளக்கம்

ஒரு நிறுவனம் தான் நிர்ணயித்த பொதுக் குறிக்கோளைக் குறிப்பிட்ட காலத்திற்குள் இலாபகரமாகவும் வெற்றிகரமாகவும் ஒருங்கிணைந்து செயல்படுவதற்கு, வேண்டிய தகுதியும் திறமையும் வாய்ந்த பணியாளர்களை நியமித்து, அவர்களிடம் பொறுப்புகளையும் அதிகாரங்களையும் வழங்கி அவர்களிடமிருந்து கடினமான உழைப்பைக் கிரகிக்க மேற்கொள்ளும் நடவடிக்கையே 'மேலாண்மை' எனலாம்.

'மேனேஜ்மெண்ட் எக்ளோபல் பெர்ஸ்பிக்டிவ்' என்ற நூல், 'மேலாண்மை' குறித்துப் பின்வருமாறு கூறியுள்ளது.

> "Management: The process of designing and maintaining an environment in which individuals, working together in groups, efficiently accomplist selected aims"[1]

ஸ்டான்லி வான்ஸ் என்பார்,

"முன்கூட்டியே முடிவெடுக்கப்பட்ட குறிக்கோள்களை அடைவதற்கு மக்களுடைய நடவடிக்கையின் மீது கட்டுப்பாடு செய்வதும், முடிவெடுத்தலுக்கான செயல்பாடும் மேலாண்மை ஆகும்."[2]

என்று குறிப்பிட்டுள்ளார்.

பீட்டர்சன் மற்றும் விளாமென் ஆகியோர்,

"ஒரு குறிப்பிட்ட மனிதக் குழுவினுடைய நோக்கங்களை முடிவு செய்து, அலசியாராய்ந்து அதனைச் செயல்படுத்துவதன் வழியாக அந்நோக்கங்களை அடையும் நுணுக்கமே மேலாண்மை"[3]

என்று கூறியுள்ளனர்.

மேற்சுட்டப்பெற்றுள்ள வரையறைகளிலிருந்து, 'நிறுவனத்தின் பணியாட்களையும் வளங்களையும் கொண்டு, தகுந்த திட்டங்கள் வழியாகவும் ஒருங்கமைப்பு வழியாகவும் உரிய ஊக்குவிப்பு வழியாகவும் தகுந்த கட்டுப்பாட்டின்படியும் அந்நிறுவனத்தின் நோக்கங்களை அறுதியிட்டு, அவற்றை அடைய விழையும் ஒரு தனிப்பட்ட செயற்பாங்கே மேலாண்மை' என்ற கருத்தினைப் பெற இயலுகிறது.

## மேலாண்மையும் நிர்வாகமும்

நிர்வாகம் தாயென்றால் மேலாண்மை சேயாகும். நிர்வாகமின்றேல் மேலாண்மையில்லை. நிர்வாகப் பரப்பெல்லைக்கு உட்பட்டதே மேலாண்மை ஆகும். ஒரு நிறுவனத்தின் நோக்கங்களையும் இலக்குகளையும் அடைவதற்கான

வழிமுறைகளையும் நிர்வாகமே முடிவு செய்கிறது. நிர்வாகம் என்பது கொள்கை உருவாக்குதலாகும். ஒரு நிறுவனத்தில் கொள்கையை உருவாக்கும் பணியினை நிர்வாகம் செய்கிறது அக்குறிக்கோளை மேலாண்மை செயல்படுத்துகிறது. ஆகவே, நிர்வாகத்திற்கு உட்பட்டதே மேலாண்மையாகும்.

மேலாண்மை மற்றும் நிர்வாகம் ஆகிய இரண்டினையும் இணைத்தும் வேறுபடுத்தியும் மூன்று விதமான கருத்துக்கள் நிலவுகின்றன. அவை; 1.மேலாண்மையும் நிர்வாகமும் ஒன்று, 2. மேலாண்மையும் நிர்வாகமும் வேறுபட்டவை, 3. நிர்வாகம் மேலாண்மையின் ஒரு பகுதி என்பனவாகும்.

முதல் கருத்துடையோர், ‘மேலாண்மையும் நிர்வாகமும் ஒரே மாதிரியான பணி, கொள்கைகள் மற்றும் நோக்கங்களைக் கொண்டுள்ளன. ஆனால், இவை பயன்படுத்தப்படும் இடம்தான் வேறு. எனவே, இவ்விரண்டு சொற்களுக்கும் அதிக வேறுபாடு இல்லை’ எனக் கூறுகின்றனர்.

இரண்டாவது கருத்துடையோர், ‘நிர்வாகம் என்பது தீர்மானம் எடுப்பதில் ஈடுபடுகிறது. மேலாண்மை அம்முடிவுகளைச் செயல்படுத்துகின்றது. பெரிய நிறுவனங்களில் இவ்விரு பணிகளும் தனித்தனியே செயல்படுகின்றன’ எனக் குறிப்பிடுகின்றனர்.

மூன்றாவது கருத்துடையோர், ‘மேலாண்மை ஒரு முழுமைப் பணி. அதன் ஒரு பகுதி நிர்வாகப் பணி. நிறுவனத்தின் தலைமைப் பணியாளர்கள் தங்களது பெரும் பகுதியான நேரத்தை நிறுவனத்தின் கொள்கைகளை நிர்ணயம் செய்வதில் செலவிடுகின்றார்கள். பணிநிலை குறையக் குறைய பணியாளர்கள் அதிக அளவில்

மேலாண்மையில் பங்கு பெறுகின்றனர். நிறுவனத்தின் தலைமைப் பணியாளர்கள் நிர்வாகத்திலும் கடைநிலைப் பணியாளர்கள் மேலாண்மையிலும் பணியாற்றுகின்றனர்' என்று பகர்கின்றனர்.

பின்வரும் அட்டவணை நிர்வாகத்திற்கும் மேலாண்மைக்கும் இடைப்பட்ட வேற்றுமையை விளக்குகிறது.

| நிர்வாகம் | மேலாண்மை |
|---|---|
| மேல்நிலைப் பணி | கீழ்நிலைப் பணி |
| உரிமையாளர்களால் மேற்கொள்ளப்படுகிறது | பணியாளர்களால் மேற்கொள்ளப்படுகிறது |
| தீர்மானங்களை உருவாக்குகிறது | தீர்மானங்களைச் செயல்படுத்துகிறது. |

'மேலாண்மைக்கு உட்பட்டதே நிர்வாகம்' ஐரோப்பிய அணுகுமுறையாகும். 'நிர்வாகத்திற்கு உட்பட்டதே மேலாண்மை' என்பது அமெரிக்க அணுகுமுறையாகும். அமெரிக்க அணுகுமுறையிலான கருத்தாக்கமே பரவலாகப் பின்பற்றப்படுவதால், இவ் ஆய்வேட்டில் ஆய்வாளர் மேலாண்மையை நிர்வாகத்திற்கு உட்பட்டதாகவே கருதி, அக்கருத்தின் அடிப்படையிலேயே ஆய்வுக் கருத்துக்களை மொழிந்துள்ளார்.

## மேலாண்மையின் சிறப்பியல்புகள்

தொழிலகங்களில் பொருள் உற்பத்தியில் ஈடுபடும் தொழிலாளர்களையும் ஈடுபடுத்தப்படும் மூலங்களையும் திறம்பட பயன்படுத்தும் ஒரு விசைக்கருவிதான் 'மேலாண்மை' ஆகும். இது பின்வரும் சிறப்பியல்புகளைக் கொண்டுள்ளது.

- குறிப்பிட்ட இலக்கினை நிர்ணயித்து வாடிக்கையாளர் விரும்பும் பொருட்களைச் சிக்கனமாக உற்பத்தி செய்யத் தகுந்த திட்டங்களை அமைத்து, வழிகாட்டி கட்டுப்படுத்திக் குறிக்கோள்களை நிறைவேற்ற முயற்சி மேற்கொள்கிறது.
- வணிக அமைப்பு பணியாட்களைக் கட்டுப்படுத்திப் பணியார்வத்தை ஏற்படுத்தி, ஒழுங்கமைத்து, பணியார்வத்தைத் தூண்டி அவர்களது வாழ்க்கைத் தரத்தை மேம்பாடு அடையச் செய்கிறது. ஆகவே, மேலாண்மை தன் நோக்கங்களைப் பிறருடைய செயல் வழியாக அடையச் செய்து, சமுதாய முன்னேற்றம் அடையச் செய்கிறது.
- மேலாண்மையைப் பார்க்க இயலாத ஓர் ஆற்றல், மேலாண்மையின் செயல்பாட்டை நேரிடையாக அறிய முடியாது. ஆனால், செம்மையான செயல்பாட்டின் வழியாக உணர முடியும்.
- மேலாண்மை மனிதனின் அறிவு, ஆற்றல், திறமையை முறையான ஊக்குவிப்பு வழியாகப் பெருக்குகின்றது. அவர்களிடம் நம்பிக்கையை ஊட்டுகின்றது. அவர்களின் முழுத் திறமையையும் வெளிக்கொண்டு வருகின்றது.
- சிறந்த மேலாளர் தாமே எல்லாப் பணிகளையும் செய்ய இயலாது. ஆகவே, தான் செய்ய நினைப்பதைத் தன் கட்டுப்பாட்டின் கீழ் உள்ள பணியாளர்கள் வழியாகப் பணிகளை நிறைவேற்றச் செய்கிறார்.
- மேலாளர் பல துறைகளை ஏற்படுத்தி ஒவ்வொரு துறைக்கும் பணி முதல்வர்களைப் பணியில் அமர்த்தி ஆணை உரிமைகளை நிர்ணயம் செய்து பணி சிறக்க வழி வகுக்கிறது.

## மேலாண்மையின் இன்றியமையாமை

பணியைப் பணியாளர்கள் வழியாகச் செய்து முடிக்க உதவிசெய்யும் கலையே 'மேலாண்மை' எனலாம். பொருள் மற்றும் மனித சாதனங்களைத் திறமையாகப் பயன்படுத்தி வீண் செலவு, பொருள் சேதாரத்தைத் தவிர்த்து, பணியாளர்களைத் தேர்வு செய்து, பயிற்சி அளித்து, வழிகாட்டி, ஊக்குவித்து குறைந்த செலவில் உயர்ந்த உற்பத்தித் திறனைப் பெறும் நோக்கத்தில் அமைத்து இயங்க வைக்கிறது. இது பின்வரும் வகைகளில் இன்றியமையாததாக அமைகிறது.

- வியாபார நிறுவனம் முழு வெற்றி பெற பொருளாதார சாதனங்களைச் சிக்கமாகப் பயன்படுத்தி, தொழில் சூழ்நிலைக்கு ஏற்ப கொள்கைகளை வடிவமைத்து நோக்கம், குறிக்கோள் நிறைவேற மேலாண்மை உதவுகிறது.
- நிறுவனத்தின் முழு வெற்றிக்கு முதல் தேவை சரியான திட்டமாகும். மேலாண்மை இதனைத் தீர்மானிக்கிறது. குறுகிய கால, நீண்ட கால நோக்கங்களை மனத்தில் கொண்டு பொருளாதார, சமுதாய மற்றும் அரசியல் சூழ்நிலைகளைக் கணித்து, தேவையான நல்ல திட்டங்களை உருவாக்க மேலாண்மை மிகவும் பயன்படுகிறது.
- மேலாண்மை தொழில் சூழ்நிலையில் அதாவது நுகர்வோரின் விருப்பு, வெறுப்பு, பழக்க – வழக்கங்கள், உற்பத்திக் கொள்கை மாறுதல் ஆகிய மாற்றச் சூழ்நிலைக்கு ஏற்ப தொழிலை அமைத்துக் கொள்ள உதவுகின்றது.
- மேலாண்மை கொள்கைகளும், திட்டங்களும் நடைமுறைக்குப் பொருந்தி செயல்படுகின்றதா என்பதைத் தீவிரமாகக் கவனித்து தொழில்

நடவடிக்கைகளைக் கட்டுப்படுத்தி, ஏதாவது குறைபாடு காணப்பட்டால் அது தொடர்பான கொள்கைகளை மாற்றி அமைகின்றது.

- நிறுவனத்தின் திறமை அதன் பணியாளர்களின் தேர்ச்சி, நியமனம், திறமை, அனுபவம், ஒத்துழைப்பு, ஊக்கம் ஆகியவைகளைச் சார்ந்துள்ளது. ஆகவே, திறமையான மேலாண்மையால்தான் இதை நிறைவேற்ற இயலும்.
- வலுவான அமைப்பை உருவாக்க மேலாண்மையால்தான் முடியும். நல்ல திட்டமிட்ட அமைப்பு, ஒற்றுமை, தோழமை, பரஸ்பர உதவி ஆகியவற்றை ஏற்படுத்தி நன்கு வேலை செய்யும் சூழ்நிலையை ஏற்படுத்தித் தருகின்றது.
- தொழில் நுணுக்க வளர்ச்சிகளை முறையே ஒருங்கிணைத்து உற்பத்தியில் ஏற்படும் சிக்கல்களைத் தவிர்த்து உற்பத்தியைச் சிறப்பான முறையில் நடைபெற மேலாண்மை இன்றியமையாததாகிறது.

## மேலாண்மைத் தத்துவங்கள்

மேலாண்மையின் தந்தையான பிரான்ஸ் நாட்டின் தொழில் அதிபர் ஹென்றி ஃபாடல் என்பவர் கி.பி. 1909 மற்றும் கி.பி. 1908 ஆகிய ஆண்டுகளில் நிகழ்த்திய சிறப்புரையில் மேலாண்மைத் தத்துவங்களை மொழிந்துள்ளார். அவை;

1. பணிப்பகுப்பு
2. அதிகாரமும் பொறுப்பும்
3. ஒழுங்குக் கட்டுப்பாடு
4. ஆணைகளின் இசைவு
5. இயக்குதலின் ஒற்றுமை

6. நிறுவனத்தின் பொதுநலனுக்கு முதலிடம்
7. பணியாளர் ஊதியம்
8. அதிகார மையப்பாடு
9. அதிகார ஏணி
10. இட அமைவு
11. நேர்மை நெறி
12. நிலையான பணிக்காலம்
13. முனைப்பு
14. ஒற்றுமையே பலம்

என்பனவாகும்.

இவை எத்தகைய சூழ்நிலையிலும் பயன்படும் வகையில், சிறந்த நிர்வாகத்தை நடத்தவும் 'திறமையான மேலாளர்' என்ற பெயர் பெறவும் உதவும்.

## திருக்குறளில் மேலாண்மைச் சிந்தனைகள்

ஹென்றி ஃபாயல் என்பாரின் கருத்துக்களில் சிலவற்றை வள்ளுவர் தன் குறட்பாக்களின் வழிக் கூறியுள்ளமை எண்ணத்தக்கது. வள்ளுவர் காலச் சூழலில், அரசரே நிர்வாகியாகவும் மேலாண்மையாளராகவும் இருநிலைப் பதவிகளை வகித்துள்ளார். அவருக்குத் தேவையான நிர்வாக மற்றும் மேலாண்மை சார்ந்த நுட்பங்களை வள்ளுவர் தன் குறட்பாக்களின் வழியாக வகுத்தளித்துள்ளார்.

## அரசுப் பணியாளரைத் தேர்வு செய்தல்

அரசு, அரசரால் மட்டுமே நடைபெற இயலாது. செயல் செய்வார் பலர் வேண்டும். அரசின் துறை ஒவ்வொன்றுக்கும் பலர் வேண்டும். துறைத் தலைவரும், துணைவரும், செயல் வல்லாரும், பணியாளரும் எனப் பல நிலைகளில் (Strata) ஆட்கள் வேண்டும். இவருள் துறைத்தலைவரை, அமைச்சர் போன்றோரை அவர்களுக்குத் துணைவராக இருக்கத் தக்கவரை அரசர் தேர்ந்தெடுத்து, அவரிடம் துறைப் பொறுப்புகளை ஒப்படைக்க வேண்டும். அவர்கள் பின் செயல்வல்லாரையும் பணியாளரையும் தேர்ந்தெடுத்துக் கொள்வர். ஆக, தேர்ந்து எடுப்பது நம்பிக்கைக்குரியவர் என்று தெளிவு அடைந்து, பொறுப்பை ஒப்படைப்பதும் அரசருக்கும் அமைச்சருக்கும் கடினமான செயலாகும்.

செயலில் வெற்றி, செய்பவரால் வருவது. அவரது குடிப்பிறப்பாலோ, நம்பிக்கையினாலோ வருவதல்ல. அறிவாலும் ஈடுபடும் ஆர்வத்தாலும் உழைப்பாலும் தளராத ஊக்கத்தாலும் மட்டுமே வரக்கூடியது. வெற்றி இவற்றால் எல்லாம் வரும். ஆனால், அந்த வெற்றியின் பயன் நாட்டுக்கும் நாட்டுத் தலைவருக்கும் கிடைக்க வேண்டும் என்றால், செயல் செய்பவர் நாட்டுப்பற்றும் அதன் வெளி வடிவமாகிய அரச விசுவாசமும் உடையவராக இருக்க வேண்டும். தன் உயிரை விரும்பும் விருப்பத்தைவிட, இந்த விசுவாசம் அதிகமாகக் கொண்டிருக்க வேண்டும். அப்படிப்பட்டவரைத்தான் நம்பி, அரசாங்கச் செயல்களை ஒப்படைக்க வேண்டும். நாட்டு மக்களின் நல்வாழ்வே அரசைப் பொறுத்துத்தான் இருக்கின்றது.

அரசாங்கப் பணியில், துறைத்தலைவர், துணைவர் இந்தப் பொறுப்பில் உள்ளோர், அதாவது அமைச்சரும் துணையமைச்சரும், குடிமக்கள் வாழ்க்கையின்

ஊடும் பாவுமாய் அமைந்துள்ள அறம், பொருள், இன்பம் என்ற மூன்றையும் தத்துவ வடிவாக, நூல்களின் வழியாக அறிந்திருக்க வேண்டும். அவற்றையே நடைமுறை வடிவில் தன் அனுபவம், கேள்வியறிவு வழியாக அறிந்திருக்க வேண்டும். இந்த மூன்றும் அரசினால் பாதுகாக்கப்பட வேண்டியவை. ஆதலால், இவற்றை இந்த மூன்றிலும் அவர்களுக்கு நடுநிலைமை வாய்ந்த சிந்தனை இருக்க வேண்டும். இது அவர்களின் செயல் வெற்றிக்கு அடிப்படையாக அமையும்.

அவர்களை ஏதாவது ஒரு செயலில் ஈடுபடுத்திக் கடமையைப் பெரிதாக மதிக்கிறார்களா அன்றி, உயிருக்குப் பயந்து கடமையில் பிடிப்பின்றி இருக்கிறார்களா என்று சோதித்தறிய வேண்டும். அவர்கள், தன் உயிருக்கு அஞ்சாமல், அறம், கடமை போன்றவற்றிலிருந்து பிறழாமல் உழைப்பவர்களிடம் அரசாங்கப் பணிப் பொறுப்பை ஒப்படைக்கலாம் என்று வள்ளுவர் பின்வரும் குறட்பா வழிக் கூறியுள்ளார்.

> "அறம்பொருள் இன்பம் உயிர்அச்சம் நான்கின்
> திறம்தெரிந்து தேறப் படும்"[4]

இக் குறட்பாக்கு உரை செய்துள்ள ஞா. மாணிக்கவாசகன்,

> "அறம், பொருள், இன்பம், ஆண்மை ஆகிய நான்கிலும் ஒருவன் பெற்றிருக்கின்ற தகுதியும் திறமும் அறிந்தே அவன் தெரிந்துணரப் படுவான்"[5]

என்று குறிப்பிட்டுள்ளார்.

இக் கருத்தினை அடியொற்றிப் பழமொழி நூல்,

"உறுமகன் ஆக ஒருவனை நாட்டி

பெறு மாற்றம் இன்றி பெயர்த்தே ஒழிதல்

சிறுமைக்கு அமைந்தது ஓர் செய்கை அதுவே

குறுமக்கள் காவு நடல்"[6]

எனப் பாடல் வகுத்துள்ளது. இப் பாடலுக்கு உரை செய்துள்ள க.ப. அறவாணன்,

> "தன்னிடத்தில் கீழ்வேலை செய்வதற்காக ஒருவனைப் பற்றிச் சரியாக விசாரித்து அறியாமல் வேலைக்கு அமர்த்திவிட்டு அவன் செய்த குற்றம் என்ன என்று அவனிடம் சொல்லாமல் அதற்குரிய பதிலை அவனிடம் சொல்லாமலும் அவனை வேலையை விட்டே நீக்கிவிடுதல் சிறுமைக் குணம் உடைய செயலாகும். அது குழந்தைகள் கூட்டாஞ்சோறு சமைத்தலைப் போலப் பொய்யாக மரங்களை ஓரிடத்து வைத்துச் சோலை என்று தமக்குள் பேசிக் கொள்ளுவதும் பின்னர் அதனை இடம் மாற்றி நட்டுச் சோலை என்று சொல்லிக் கொள்ளுதலும் போன்ற செயலாகும்"[7]

என்று குறிப்பிட்டுள்ளார்.

அரசுப் பணிக்கு ஒருவரை அமர்த்த வேண்டுமெனில், அவர் அரசின் நல்ல பெயரைக் கெடுக்கக் கூடிய அளவில் அல்லது குடிமக்கள் அரசை வெறுக்கக் கூடிய அளவில் குற்றம் செய்யமாட்டார் என்பதை மூன்று வகையில் முன்னதாகவே விசாரித்தோ, சோதித்தோ தெரிந்து கொண்டுதான் அமர்த்த வேண்டும்.

முதலாவது, இப் பணிக்குத் தேர்ந்தெடுக்கப்படுபவர், நல்ல குடியில் பிறந்திருக்க வேண்டும். 'நல்ல குடி' என்பது, சமுதாய வாழ்வு நடைபெறவும் அரசின் நோக்கங்கள் நிறைவேறவும் ஒரு தனியாள் செய்ய வேண்டிய கடமையை உணர்ந்து செய்துவருபவர் நல்லகுடி. அத்தகையோர் தொடர்ந்து பிறந்த குடும்பத்தில் பிறந்தவரின் மனத்தில் குற்றவிதை ஒன்றுமே இருக்காது. குடிமைப் பண்புகளுள் சிறந்தவை ஆகிய நடுநிலையில் (Balance), பழியஞ்சும் பண்பும் (Restraint) அவர்களிடம் இயற்கையாகவே இருக்கும். எனவே, அவர்கள் அறியாமல் குற்றம் செய்வார்கள் என்பது இல்லை.

இரண்டாவது கல்வி, கேள்வி, பழகும் சூழல் என்பவற்றால், குற்றம் என்று நெஞ்சு அறிந்தவற்றைச் செய்யாதவர்களாக அவர்கள் இருக்க வேண்டும். மனம் ஒருவேளை குற்றம் செய்ய முனைந்தாலும் அறிவால் எண்ணி, அதிலிருந்து விலகத் தெரிந்தவர்களாக இருக்க வேண்டும்.

மூன்றாவது, தமக்கு நெருக்கமானவர் குற்றம் செய்யும்போது, பாசம் காரணமாகத் தடுக்காமலிருந்தால், தனக்குப் பழிவருமே என்று அஞ்சுபவராக இருக்க வேண்டும்.

இம்மூன்று வகையிலும் குற்றம் புரியாத ஒருவரைத்தான் அரசுப் பணிக்கு அமைச்சராகவோ, அலுவலராகவோ அமர்த்த வேண்டும் என வள்ளுவர்,

"குடிப்பிறந்து குற்றத்தின் நீங்கி வடுப்பரியும்
நண்உடையான் கட்டே தெளிவு"[8]

என்ற குறட்பா வழித் தெரிவித்துள்ளார். இக்குறட்பாவிற்கு,

"நல்ல குடிப்பிறப்பும் குற்றமின்மையும் பழிபாவமும் செய்ய அஞ்சுகின்ற தன்மையும் உடையவரையே துணையாகக் கொள்ள வேண்டும்"[9]

என்று ஞா. மாணிக்கவாசகன் பொருளுரை செய்துள்ளார்.

மேற்சுட்டப்பெற்றவற்றின் வழியாக அரசுப் பணியாளர்களைத் தேர்வு செய்தலில் உள்ள நுட்பங்களை அறிய இயலுகிறது.

## பணியாளருக்குரிய அதிகாரமும் பொறுப்பும்

ஒருவர் செய்யும் முடிவுகள், மற்றொருவரின் செயலை நெறிப்படுத்தும் சக்தியுடையதாக இருக்குமேயானால் அதற்கு 'அதிகாரம்' என்று பெயர். 'பொறுப்பு' என்பது, அவ் அதிகாரத்தை ஏற்று நடத்தும் கடமையுணர்வே ஆகும். இது அதிகாரத்தின் ஒரு பகுதி ஆகும். அதிகாரமும் பொறுப்பும் இணைந்தே செயல்பட வேண்டும். அவை, இரண்டும் ஒரு நிறுவனத்தின் இரு கண்கள் ஆகும். ஒரு பணியாளருக்கு அதிகாரத்திற்கு ஏற்ப பொறுப்பும் பொறுப்பிற்கேற்ற அதிகாரமும் வழங்குவது அந்த நிறுவனத்தின் வளர்ச்சிக்கு இன்றியமையாததாகும்.

அக்காலத்தில் அரசர், மற்றவர்களைப் பணிக்கும்போது மேலாளராகவும் மக்களுக்காகத் தொண்டாற்றும் போது பணியாளராகவும் திகழ்கின்றார். ஆதலால், இவ்விரு நிலையிலும் அரசர் மேற்கொள்ள வேண்டியவை பற்றியும் அதற்குரிய தகுதிப்பாடுகள் குறித்தும் வள்ளுவர் சில குறட்பாக்களை யாத்துள்ளார்.

இன்று செயல்பட்டால்தான், நேற்றைய கடமைகளை நிறைவேற்ற முடியும். இன்று திட்டமிட்டால்தான் நாளை வாழ முடியும். எடுத்த முடிவைச் செயலாக்குவது விரைந்து நடைபெற வேண்டும். தொய்வு, சோம்பல்,

நீட்டிப்பு போன்றவை தடைக்கற்களாக அமைந்துவிடும். ஆணை பிறப்பித்தல், ஆள் அமர்த்துதல், பணி வழங்கல், செய்தமை மேற்பார்த்தல் இத்தனையும் விரைந்து நடைபெற வேண்டும். இதற்கென அமைச்சர்கள் இருந்தாலும் அரசனிடம் விரைவு இல்லை என்றால், அவர்களும் கடமையைச் செய்வதில் காலம் தாழ்த்துவர்.

கல்வி என்பது ஆராய்ச்சி. நாளைய திட்டம், எதிர் காலத்திட்டம் இரண்டிற்கும் ஆய்வு தேவை. அரசன் நாட்டில் கல்வி வளர்ப்பது மட்டுமின்றித் தானும் அரசியல் ஆராய்ச்சியில் இருக்க வேண்டும். புதிய நூல்களைக் கற்க வேண்டும். அரசுப் பொறுப்பு உள்ளவரை இது தொடர வேண்டும். நாட்டு வளர்ச்சிக்கான புதிய முடிவுகளை மேற்கொள்ள இது உதவும்.

எனவே, விரைந்து செயலாக்கம் (fast execution), ஆராய்ச்சி (Research), முடிவு மேற்கொள்ளல் (Decision making) என்ற மூன்றையும் அரசர் செய்ய வேண்டும்.

இதனை வள்ளுவர்,

> "தூங்காமை கல்வி துணிவுடைமை இம்மூன்றும்
> நீங்கா நிலன் ஆள்பவற்கு"[10]

என்று குறிப்பிட்டுக் காட்டியுள்ளார். இக் குறட்பாவிற்கு,

> "சுறுசுறுப்பும் கல்வியறிவும் துணிவும் மண்ணாளும் அரசர்க்கு எந்நாளும் இருக்க வேண்டிய பண்புகளாகும்"[11]

என ஞா. மாணிக்கவாசகன் பொருளுரைத்துள்ளார்.

அரசின் பொறுப்புகளும் மக்களுக்கு அதன் உதவிகளும் உரிய காலத்தில் உரிய அளவு நிறைவேற்றப்பட வேண்டும்; செயல்பட வேண்டும். பல துறைகளிலும் உள்ள அதிகாரிகளே அரசரிடம் கொள்கையை மட்டும் ஆலோசித்து அவர் ஆணை பெற்று இவற்றைச் செய்யவேண்டும்.

அவர்கள் அரசருக்கு நிலைமையை அறிவிக்காமல் இருந்தாலோ, அவருடைய ஆணையை நிறைவேற்றாமல் இருந்தாலோ, நிறைவேற்றுவதில் பாரபட்சம், மெத்தனம் காட்டினாலோ, நேர்மையின்றி நடந்தாலோ மக்களுக்குத் துன்பம் ஏற்படும்.

மக்கள் தன்னிடம் வந்து முறையிடுவதற்கு அரசன் ஒவ்வொரு நாளும் போர்க் காலம் தவிர, நேரம் ஒதுக்க வேண்டும். எவ்வளவு அலுவல் நெருக்கடி, ஆலோசனை இருந்தாலும் மக்களின் குறைகளைச் செவி கொடுத்துக் கேட்க வேண்டும். இவற்றைச் செய்துவிட்டால் அவ் அரசருடைய ஆட்சி சிறக்கும். இதனைத் திருக்குறளில்,

> “காட்சிக் கெளியன் கடுஞ்சொல்லின் அல்லனேல்
> மீக்கூறும் மன்னன் நிலம்”[12]

என வள்ளுவர் குறிப்பிட்டுள்ளார். இக்குறட்பாவில் இடம் பெற்றுள்ள ‘மீக்கூறும் மன்னன்’ பற்றிய குறிப்பு,

> “நகுதக் கனரே நாடு மீக் கூறுநர்”[13]

எனப் புறநானூற்றில் இடம்பெற்றுள்ளமை குறிப்பிடத்தக்கது.

'இனிய பண்புடையவரே தலைவராய் ஆதல் சிறப்பு' என்ற கருத்திற்கு ஏற்ப நாலடியார்,

> "இன்னார் இனையர் எமர் பிறர் என்னும் சொல்
> என்னும் இலர் ஆம் இயல்பினால் துன்னி
> தொலை மக்கள் துன்பம் தீர்ப்பாரே யார் மாட்டும்
> தலைமக்கள் ஆகற்பாலார்"[14]

என்று குறிப்பிட்டுள்ளார். இப்பாடலுக்கு உரையாக க.ப. அறவாணன்,

> "பெரியோர் தம்மிடம் வந்து அடைந்தவரை வருத்தமிலாமல் ஓம்புவர். சிறியோர் சில நாள்கூட ஓம்பார். இத்தன்மையர் இவ்வளவினர், எம் உறவினர், பிறர் என்று சொல்லி வேற்றுமை பாராட்டாது வறுமையுற்ற மனிதரது துன்பத்தைத் தீர்ப்பவரே அனைவராலும் பாராட்டப்பெறும் தலைவர் ஆகுவதற்கு உரியார்"[15]

என்று கூறியுள்ளார்.

இதுகாறும் சுட்டப்பெற்றவற்றால், பணியாளராகவும் மேலாளராகவும் தேர்ந்த நிர்வாகியாகவும் விளங்கும் அரசருக்குரிய இலக்கணங்களை வள்ளுவர் குறள் வழி அறிய முடிந்தது.

## ஒழுங்குக் கட்டுப்பாடு

தன் பணியாளரிடம் ஒழுங்கையும் கட்டுப்பாட்டையும் எதிர்பார்க்கும் மேலாளர் தன்னிடமும் அவை இருக்குமாறு வாழவேண்டும். வள்ளுவர், அரசருக்குரிய

(மேலாண்மை நிலையில்) ஒழுங்குக் கட்டுப்பாடு குறித்து மூன்று குறட்பாக்களின் வழியே எடுத்துரைத்துள்ளார். அவை முறையே, 'அறிவுடைமை', 'குற்றம் கடிதல்', 'பெரியாரைத் துணைக் கோடல்' ஆகிய அதிகாரங்களில் அமைந்துள்ளன.

அரசருக்கு எத்தனையே விருப்புகள் இருக்கலாம். ஆனால், அரசாங்க நடைமுறை பற்றிய சிக்கல்களில் ஆலோசகர்களுடன் கலந்து ஆலோசித்தோ, ஆலோசிக்காமலோ, அவர் தன் விருப்பம் என்பதற்காக ஒன்றைச் செய்யத் துணியக் கூடாது. அது நாட்டுக்கு நன்மை, அறநெறிப்பட்டது என்றால்தான் செய்ய வேண்டும். பிற நாட்டுடன் பகை கொள்வதுகூட, தன் நாட்டின் நன்மைக்காக என்று பகை கொள்ள வேண்டுமே தவிர, தன் வெறுப்பினால் பகை கொள்ளக் கூடாது.

நாட்டு மக்களிடம் வரி பெறுவதிலிருந்து உள்ளாட்சிப் பொறுப்பில் செய்யும் எத்தனையோ செயல்கள் வரை அரசர் தன் விருப்பப்படிச் செயலாற்றக் கூடாது. அறநெறிக்கு ஏற்றவையும், நீதியறிந்த பெரியோர் ஒப்புக் கொள்ளக் கூடியவையுமான செயல்களையே செய்ய வேண்டும். அரசரின் விருப்பம் எவ்வளவு மேலோங்கியிருந்தாலும், அது தீய வழியில் இருந்தால் அதை ஒதுக்கி, மனத்தை நன்மையின் பக்கம் திருப்பக் கூடியது, அவருக்குப் பயன்படுத்தும் அறிவு செம்மையாக இருந்தால், அதுவே ஆகும். அது இல்லை எனில், அவர் தன் ஆணவத்தாலேயே அழிவார். பயன்படும் அறிவு எவ்வளவு சேர்ந்திருந்தாலும் அதைத் தன் விருப்பப்படியே திருப்பிப் பயன்படுத்துவார் ஆதலால், அரசர் தன் அறிவின் துணையோடு ஒழுங்குக் கட்டுப்பாட்டைத் தன்னளவில் பேணுதல் வேண்டும். இதனை வள்ளுவர்,

"சென்ற இடத்தால் செலவிடா தீதொரீஇ

நன்றின்பால் உய்ப்ப தறிவு"[16]

என்ற குறட்பாவில் சுட்டியுள்ளார். இக் கருத்திற்குத் துணையாக ஓரம்போகியார் அகநானூற்றில்,

> "விழையா உள்ளம் விழையும் ஆயினும்
> என்றும் கேட்டவை தோட்டி ஆக மீட்டு ஆங்கு
> அறனும் பொருளும் வழாமை நாடி
> தற்தகவு உடைமை நோக்கி மற்றுஅதன்
> பின்ஆ கும்மே முன்னியது முடித்தல்"[17]

என பாடல் அடிகளில் கருத்துத் தெரிவித்துள்ளார்.

பலராலும் வணங்கப்படும் தலைமை நிலையில் அரசர் இருப்பதே, அவருக்கு அகம்பாவத்தை உண்டாக்கும். செல்வமும் அதிகாரமும் தன் கட்டளையைப் பிறர் செய்து முடிப்பதும் அகம்பாவத்திற்குத் தூபம் போடும். பிறர் புகழ்தல் அவருடைய அகம்பாவத்தை மேலும் வளர்க்கும். ஆதலால், அரசர் அகம்பாவத்தை மிகக் கருத்தாக ஒதுக்க வேண்டும். தன்னை மையமாக வைத்தே எதையும் எண்ணும் மனித இயல்பு, அரசராக உள்ளவரிடம் பெரும் பூதமாக வளர்ந்து விடும். 'தன்னை யாரும் எதுவும் செய்ய முடியாது. தன்னால் எதுவும் செய்ய முடியாது' என்று நினைப்பது 'அகம்பாவம்' ஆகும்.

இக்குணம் அரசருக்கு உள்நாட்டு ஆட்சியிலும் வெளிநாட்டு உறவிலும் தீமை செய்யும். சான்றோர், அறிஞர், அமைச்சர் ஆகியோரின் அறிவுரைகளைப் புறந்தள்ள வைக்கும். பகைவரின் வலிமையைக் குறைத்து மதிப்பிடச் செய்யும். உணர்ச்சி வசப்பட்டுப் போரில் இறங்கி அழிந்து போவார்.

அரசர் நாட்டுக்குத் தலைவர் என்பதாலேயே, தான் நினைத்ததை எல்லாம் செய்யக் கூடாது. அவ்வாறு செய்வதே தனக்குப் பெருமை என்ற உயர்வு மனப்பான்மை அவருக்கு வரக் கூடாது. அவர் அரசர் என்பதால் அவரது எந்த முடிவுக்கு யாரும் கட்டுப்படுவர். ஆனால், அறிஞர்கள் அவருக்கு அறிவுரை கூறுவர். அவற்றை ஏற்று நடந்தால் ஆட்சி சிறக்கும். அரசருக்குரிய இக்கட்டுப்பாட்டை வள்ளுவர்,

> "வியவற்க எஞ்ஞான்றும் தன்னை நயவற்க
> நன்றி பயவா வினை"[18]

என்ற குறட்பாவில் தெரிவித்துள்ளார். இக் குறட்பாவிற்கு,

> "தான் எவ்வளவு உயர்ந்த நிலையை அடைந்த தன்னைத்தானே உயர்ந்தவனாக நினைப்பதைச் செய்யாதே, அப்போலி மதிப்பால் நன்மை தராச் செயல்களையும் செய்யாதே"[19]

என்று க.ப. அறவாணன் உரை செய்துள்ளார்.

அரசசபையில் உள்ள பெரியோர் பாராட்டுரையாகவோ, பசப்புரையாகவோ, முகமனாகவோ எதையும் சொல்லமாட்டார்கள். அரசரின் செயல் தவறு என்றால், அஞ்சாமல் எடுத்துக் கூறுவர். அவற்றைக் கேட்கும் மன்னர் கோபம் கொள்ளாமல், சொல்பவர் தன்னைவிட அறிவு முதிர்ந்தவர், தீமை இல்லாதவர், நாட்டுப்பற்றுடையவர், நம் நன்மைக்காகவே சொல்வர் என்று கருத வேண்டும். அவர்தம் கருத்துக்களை ஏற்று, தன் முடிவில் தக்க மாறுதல்களைச் செய்யவேண்டும்.

> "தன்னைத் திருத்திக் கொள்பவன் தொடர்ந்து முன்னேறுவான். ஆணவத்தால் பிடிவாதம் பிடிப்பவன் விரைந்து அழிவான்"[20]

என்று சுப. அண்ணாமலை கூறுவது சிந்திக்கத் தக்கது.

இக் கருத்தினை வள்ளுவர்,

"இடிக்கும் துணையாரை ஆள்வாரை யாரே

கெடுக்கும் தகைமை யவர்"[21]

என்ற குறட்பாவில் வெளிப்படுத்தியுள்ளார்.

இத்தகைய துணையார் குறித்து,

"இடிக்கும் கேளிர் நும்குறை ஆக

நிறுக்கல் ஆற்றினோ நன்றுமன் தில்ல"[22]

எனக் குறுந்தொகைப் பாடல் அடிகளும்,

"மேல் நின்று மெய் கூறும் கேளிர் போல்"[23]

என்று கலித்தொகைப் பாடல் அடியும் சுட்டியுள்ளன.

அத்தகையோரது அறிவுரைகள் எத்தன்மையவை என்பதனை,

"இனியவர் என் சொலினும் இன்சொல்லே இன்னார்

கனியும் மொழியும் கடுவே"[24]

என்ற நீதிநெறி விளக்கத்தின் பாடல் அடிகளால் உணர இயலுகிறது.

அரசன் தன் சுய அறிவினாலும் அறிஞரின் வழிப்பெற்ற அற உரைகளாலும் ஒழுங்குக் கட்டுப்பாட்டுடன் திகழவேண்டும் என்பதனை இவற்றின் வழி அறிய முடிகிறது.

### நிறுவனத்தின் பொது நலனுக்கு முதலிடம்

பணியாளர்கள் தங்களது சுய நலன் மறந்து, நிறுவனத்தின் பொது நலனுக்குப் பாடுபடவேண்டும். அறியாமையாலும் சோம்பல் காரணமாகவும் சுய கட்டுப்பாடு இல்லாமல் இக் கோட்பாடு பின்பற்றப்படாமல் போகக்கூடும். ஆனால், மேற்பார்வையாளரின் திறமையாலும் அனுபவத்தாலும் செயல்படும் விதத்திலும் சிறந்த ஒப்பந்தத்தின் அடிப்படையிலும் இக்கோட்பாடு செயல்படக்கூடும்.

'மேலாண்மையாளராகச் செயல்படும் அரசன் தன் சுய நலனைப் புறந்தள்ளி தன் நிறுவனமான அரசு சிறக்க மக்களின் நலத்தை மனத்தில் கொண்டு செயலாற்ற வேண்டும்' என்ற கருத்தினை வள்ளுவர் சில குறட்பாக்கள் வழிக் கூறியுள்ளார்.

அரசின் கூட்டம், தண்டனை, வளர்ச்சித் திட்டம் ஆகியவை அவற்றின் இலட்சியம் எப்படியிருந்தாலும் செயற்படுத்தப்படும் பொழுது, குடிமக்களின் வாழ்க்கை நடைமுறைக்கு அப்பட்டமான உண்மை நிலைமைக்கு ஏற்ற முறையில் செயல்கள் மேற்கொள்ளப்பட வேண்டும்.

'அரசு' என்பது, மக்களின் பொது நன்மைக்காக, பாதுகாப்பிற்காகச் செயல்படுவதாகும். ஆகவே, நாட்டு மக்களின் வாழ்க்கை என்ற பரந்துபட்ட முறையில் அனைவரையும் தழுவிய முறையில் அரசியல் சிந்தனை இருக்க வேண்டும். இதற்கு அரசரே பொறுப்பு. நன்மைகள் அனைவருக்கும் கிடைக்கச் செய்ய வேண்டும் என்ற உணர்வு அரசருக்கு இருக்க வேண்டும்.

மக்கள் வாழும் இயற்கைச்சூழல், அவர்களுக்கு உள்ள நெருக்கடிகள், அவர்களின் பொதுவான விருப்பங்கள், வரலாறு, மரபு, பண்பாடு, சமயம் இவை அனைத்தின் பின்னணியிலும் மக்கள் தம் வாழ்வைச் சந்திக்கும் போது, நடைமுறை

நிலைமைகள் உருவாகுகின்றன. அரசர் அவற்றை அறிந்து அவற்றிற்குத் தக்கவாறு சட்டங்களை வகுக்க வேண்டும். வளர்ச்சித் திட்டங்களை உருவாக்கிச் செயல்படுத்த வேண்டும். இதனை வள்ளுவர்,

> ''எவ்வவ துறைவ துலகம் உலகத்தோ
>
> டவ்வ துறைவ தறவு''[25]

என்ற குறட்பா வழிப் பகர்ந்துள்ளார். இக் குறட்பாவுக்கு உரை செய்துள்ள பிரதாப்,

> ''உலகத்து உயர்ந்தவர் எவ்வழியில் செல்கின்றார்களோ அதே வழியில்
>
> நாமும் செல்ல வேண்டும். அவ்வாறு செல்வதே அறிவுடைமையாகும்''[26]

எனக் குறிப்பிட்டுள்ளார். உலகத்து உயர்ந்தவர்கள் பொதுநலனுக்காவே சிந்தித்தார்கள், செயல்பட்டார்கள். அதுபோல அரசரும் செயல்பட வேண்டும் என்பது இக்குறட்பாவின் உட்கருத்து ஆகும்.

## நேர்மை நெறி

அரசின் நடைமுறை குடிகளுக்கு அறத்தில், நேர்மையில் நம்பிக்கை ஊட்ட வேண்டும். முன் மாதிரியாக இருக்க வேண்டும். சட்டத்தை விதிக்கும் தகுதி அப்போதுதான் அதற்கு உண்டு எனலாம்.

தகுதியில்லாதவர் கையில் சட்டம் வெறும் மரச்சட்டம்தான். அப்போது நாட்டில் குற்றம் பெருகுவதைத் தடுக்க முடியாது. நேர்மையான அதிகாரிகள் தொல்லைக்கு உள்ளாவர். தீயவரை இரும்புக்கரம் கொண்டு ஒடுக்க வேண்டும். ஆனால், அவர் ஒழிந்துவிடும்படிச் செய்யக் கூடாது. சிறையில் அவர்கள் திருந்த ஆவன செய்ய வேண்டும்.

ஒரு நாட்டின் எல்லை, பொருளாதாரம், வளர்ச்சி என்பனவற்றில் அடுத்த நாடு தலையிட்டு, ஊடுருவினால் அதன் பெருமையே தாழ்ந்துவிட்டது என்று கருத வேண்டும். அதனை எதிர்த்துப் போர் புரிய முயல வேண்டும்.

அரசரின் நேர்மை உள்ளாட்சியைப் பாதுகாக்கும். இதனைத் திருக்குறளில் இறைமாட்சி அதிகாரத்தில் உள்ள குறட்பா எடுத்தியம்பியுள்ளது.

> "அறன் இழுக்கா தல்லவை நீக்கி மறன் இழுக்கா
> மானம் உடைய தரசு"[27]

இக் குறட்பாவிற்குக் க.ப. அறவாணன்,

> "அறநெறிகளிலிருந்து விலகாமல், அறத்திற்கு மாறானவை தன் நாட்டின்கண் நிகழாமல் நீக்கி வீரம் வழுவாத மானம் உடையதே நல்லரசு ஆகும்"[28]

என உரைவகுத்துள்ளார்.

வள்ளுவர் 'குற்றம் கடிதல்' என்ற அதிகாரத்திலும் அரசரின் நேர்மை நெறி குறித்து எடுத்துரைத்துள்ளார்.

பெண்களிடமோ, சுகபோக வசகதிகளிலோ, கலைகளிடமோ பெருவிருப்பு கொண்டு ஒரு சாராருக்கு மட்டும் மதிப்பும் சலுகையும் அளிக்கக் கூடாது. அரசரின் மோகம் சமநீதியை அழித்துவிடும். இதனைப் பின்வரும் குறட்பாவழி வள்ளுவர் மொழிந்துள்ளார்.

> 'இவறலும் மாண் பிறந்த மானமும் மாணா
> உவகையும் ஏதம் இறைக்கு"[29]

இக் குறட்பாவிற்கு உரைசெய்துள்ள ஞா. மாணிக்கவாசகன்,

> “இல்லை என்போர்க்குக் கொடுத்துதவாமலிருப்பதும் போற்றத்தக்க தன்மானம் இல்லாதிருப்பதும் புகழுக்குரிய பெருமை அடையாதிருப்பதும் தலைவருக்கு இருக்கக் கூடாத குணங்கள் ஆகும்”[30]

எனக் கூறியுள்ளது. இதன் பொருளாகக் க.ப. அறவாணன்,

> “அன்பினால் உருவான நட்பு, நெகிழ்ந்தும் நீங்குதலும், கற்பு என்னும் பெருந்தெப்பத்தைக் காம வெறி பற்றிக் கைவிடுதலும் உயிர் நட்பில் ஒருபக்கச் சார்பு கொண்டு நடுவுநிலைமை நீங்குதலும் குற்றத்தைக் கொண்டு வரும் பகைகள் ஆகும்”[32]

என்று பகர்ந்துள்ளார். ஆக, அரசர் நேர்மை நெறி தவறாது மக்கள் பணியாற்ற வேண்டும் என்பது வள்ளுவர் கருத்தாக உள்ளது.

மேற்சுட்டப்பெற்ற ஐந்து தலைப்புகளின் கீழ் வள்ளுவர் குறிப்பிட்டுள்ள மேலாண்மைச் சிந்தனைகளை அறிய இயன்றது.

## தொகுப்புரை

நிறுவனத்தின் பணியாட்களையும் வளங்களையும் கொண்டு, தகுந்த திட்டங்கள் வழியாகவும் ஒருங்கமைப்பு வழியாகவும் உரிய ஊக்குவிப்பு வழியாகவும் தகுந்த கட்டுப்பாட்டின்படியும் அந்நிறுவனத்தின் நோக்கங்களை அறுதியிட்டு அவற்றை அடைய விழையும் ஒரு தனிப்பட்ட செயல்பாங்கே ‘மேலாண்மை’ ஆகும்.

நிர்வாகத்திற்கு உட்பட்டதே மேலாண்மை ஆகும். நிர்வாகம் தீர்மானம் எடுப்பதில் ஈடுபடுகிறது. மேலாண்மை அம் முடிவுகளைச் செயல்படுத்துகிறது.

ஹென்றி ஃபாயல் என்பவர் மேலாண்மைத் தத்துவங்களாக 14 கருத்துக்களை முன் மொழிந்துள்ளார். அவற்றுள் ஐந்தினை வள்ளுவர் தன் குறட்பாக்களின் வழி மொழிந்துள்ளார்.

தன் உயிருக்கு அஞ்சாமல், அறம், கடமை போன்றவற்றிலிருந்து பிறழாமல் உழைப்பவர்களிடம் அரசாங்கம் பணிப் பொறுப்பை ஒப்படைக்கலாம் என்றும், அவர் நற்குடியில் பிறந்திருக்க வேண்டும், அறிவு நிரம்பப் பெற்றிருக்க வேண்டும், பழி – பாவங்களுக்கு அஞ்சுபவராக இருக்க வேண்டும் என்றும் விதிமுறைகளை வள்ளுவர் வகுத்துள்ளார்.

மேலாளராக விளங்கும் அரசர் விரைந்து செயலாக்கம், ஆராய்ச்சி, முடிவு மேற்கொள்ளல் ஆகிய மூன்றினையும் கைக்கொள்ள வேண்டும் என்கிறார் திருவள்ளுவர்.

அரசர் தன் அதிகாரத்தை நேர்மையான நெறியில் பயன்படுத்தித் தன் பொறுப்புணர்ந்து மக்கள் பணியாளராகத் தானும் செயலாற்றித் தனக்குக் கீழ் பணியாற்றுவோரையும் அந்நெறியில் செயலாற்ற வழி வகுக்க வேண்டும் என்று வள்ளுவர் சில குறட்பாக்கள் வழிப் பகர்ந்துள்ளார்.

## அடிக்குறிப்புகள்

1. Heinz welhrich & Harold Koontz, management A Global Perspective, P. 4.
2. மேற்கோள்: வி. சண்முகம், மேலாண்மைத் தத்துவம், ப. 19.
3. மேற்கோள்: க. வெங்கடேசன், மேலாண்மைத் தத்துவங்கள், ப. 6.
4. கி.வா. ஜகந்நாதன் (ப.ஆ.), திருக்குறள் ஆராய்ச்சிப் பதிப்பு., ப. 291.
5. ஞா. மாணிக்கவாசகன் (உ.ஆ.), திருக்குறள் எளியஉரை - இனிய நடை, ப. 104.
6. ச.வே. சுப்பிரமணியன் (ப.ஆ.), பதினெண் கீழ்க்கணக்கு நூல்கள், ப. 111.
7. க.ப. அறவாணன், அற இலக்கியக் களஞ்சியம், பக். 791-792.
8. கி.வா. ஜகந்நாதன் (ப.ஆ.), மு.நூ., ப. 292.
9. ஞா. மாணிக்கவாசகன் (உ.ஆ.), மு.நூ., ப. 104.
10. கி.வா. ஜகந்நாதன் (உ.ஆ.), மு.நூ., ப. 231.
11. ஞா. மாணிக்கவாசகன் (உ.ஆ.), மு.நூ., ப. 80
12. கி.வா. ஜகந்நாதன் (ப.ஆ.), மு.நூ., ப. 234.
13. ச.வே. சுப்பிரமணியன் (ப.ஆ.), சங்க இலக்கியம் மூலமும் உரையும், ப. 446.
14. தி.சு.பாலசுந்தரம் (உ.ஆ.), நாலடியார்,ப.83.
15. க.ப. அறவாணன், மு.நூ., ப. 733.
16. கி.வா. ஜகந்நாதன் (ப.ஆ), மு.நூ., ப. 253.
17. ச.வே. சுப்பிரமணியன் (ப.ஆ.), சங்க இலக்கியம் மூலமும் உரையும், ப. 278.
18. கி.வா. ஜகந்நாதன் (ப.ஆ.), மு.நூ., ப. 261.
19. க.ப. அறவாணன், மு.நூ., ப. 777.
20. சுப. அண்ணாமலை, திருக்குறள் சிந்தனை பொருட்பால் முதற்பகுதி, ப. 95.

21. கி.வா. ஜகந்நாதன் (ப.ஆ.), மு.நூ., ப. 266.

22. ச.வே. சுப்பிரமணியன் (ப.ஆ.), சங்க இலக்கியம் மூலமும் உரையும், ப. 82.

23. மேலது, ப. 317.

24. க.ப. அறவாணன், மு.நூ., ப. 857.

25. கி.வா.ஜகந்நாதன் (ப.ஆ.), மு.நூ., ப. 255.

26. பிரதாப் (உ.ஆ.), திருக்குறள் பன்முகஉரை, ப. 121.

27. கி.வா. ஜகந்நாதன் (ப.ஆ.), மு.நூ., ப. 233.

28. க.ப. அறவாணன், மு.நூ., ப. 732.

29. கி.வா. ஜகந்நாதன் (ப.ஆ.), மு.நூ., ப. 258.

30. ஞா. மாணிக்கவாசகன் (உ.ஆ.), மு.நூ., ப. 80.

31. ச.வே. சுப்பிரமணியன் (ப.ஆ.), பதினெண் கீழ்க்கணக்கு நூல்கள், ப. 142.

32. க.ப. அறவாணன், மு.நூ., ப. 777.

# இயல் நான்கு

# திருக்குறளில் நிர்வாகப் பணிகளும் மேம்பாட்டு உத்திகளும்

நிர்வாகப் பணிகளுள் முதன்மையான ஐந்து பிரிவுகளாகிய செயலூக்கமளித்தல், தலைமை, மேற்பார்வையிடுதல், தகவல்தொடர்பு, ஒருங்கிணைத்தல் ஆகியன பற்றி வள்ளுவர் மொழிந்துள்ளவை குறித்தும், மேம்பாட்டு உத்திகளுள் தலையாயதான நான்கு பிரிவுகளாகிய பலம், பலவீனம், வாய்ப்பு, எதிர்ப்பு ஆகியன பற்றித் திருவள்ளுவர் பகர்ந்துள்ளவை பற்றியும் இந்த இயல் விளக்குவதாக அமைகிறது.

## நிர்வாகப் பணிகள்

நிர்வாகப் பணிகள் பல இருப்பினும் அவற்றுள் தலையாயதாகக் கருதத்தக்கன ஐந்தாகும். அவை 1. செயலூக்கமளித்தல், 2. தலைமை, 3. மேற்பார்வையிடுதல், 4. தகவல் தொடர்பு, 5. ஒருங்கிணைத்தல் என்பனவாகும். இவை பற்றி வள்ளுவர் கூறியுள்ளமை பற்றி இனிக் காண்போம்.

## செயலூக்கமளித்தல்

ஒருவர் தனக்கு அளிக்கப்பட்ட பணிகளைச் செய்ய விருப்பம் கொள்ளுதலும், பணிமேற்கொள்ள முன்வருதலும் அவருடைய மனப்பான்மை, மனநிறைவு, நன்னடத்தை ஆகியவற்றைப் பொறுத்து நிகழக் கூடியனவாகும்.

இவற்றை முறையான தொடர்புகள், ஊக்கத்தொகைகள், சிறப்பாக நடத்துவது, மனிதநேய அடிப்படையில் பணியாளர்களிடம் அணுகுவது ஆகியவைகளின் வழி

ஊக்கமளித்து செயல்படச் செய்யலாம். ஊக்கமளித்தல் இருவகைப்படும். அவை 1. தனக்குத்தானே ஊக்கமளித்தல், 2. பிறரால் தனக்கு ஊக்கமளித்தல் என்பனவாகும்.

ஊக்கத்தின் இன்றியமையாமை குறித்த கருத்துக்களை வள்ளுவர் 'ஊக்கமுடைமை' என்ற அதிகாரத்தில் தெரிவித்துள்ளார்.

உள்நாடு மற்றும் வெளிநாடு ஆகிய இரண்டு பகுதிகளிலிருந்தும் அரசருக்கு 'அறைகூவல்' வந்து கொண்டே இருக்கும். அவற்றைத் துணிவுடன் எதிர்கொள்ள வேண்டும். தளர்ச்சி இல்லாத இந்த மன எழுச்சியே ஊக்கம். தன்னம்பிக்கையால் பிறப்பது ஊக்கம். அரசரிடம் ஊக்கம் இருந்தால் போருக்குரிய சாதனம் அனைத்தும் வந்து அமையும். ஊக்கம் இல்லை எனில் எத்தகைய சாதனம் இருந்தும் பயனில்லை. அதனை வள்ளுவர்,

"உடையர் எனப்படுவ தூக்கம் அஃதில்லார்
உடைய துடையரோ மற்று"[1]

என்ற குறளில் தெரிவித்துள்ளார். இக்கருத்தினைக் கொன்றை வேந்தன் என்ற அறநூல்,

"ஊக்கம் உடைமை ஆக்கத்திற்கு அழகு"[2]

எனச்சுட்டியுள்ளது. ஊக்கமின்மையால் வரும் கேடு குறித்து வள்ளுவர்,

என்று குறட்பாவில் குறிப்பிட்டுள்ளார். இக்குறட்பாவிற்குச் சிறப்புரை வழங்கியுள்ள சுப.அண்ணாமலை,

"ஓர் அரசர் அரசை இழந்தாலும் பகைவரிடம் நாட்டை இழந்தாலும், உள்நாட்டில் மக்கள் நல்வாழ்விற்காக மேற்கொள்ளும் முயற்சியில் தோல்வி அடைந்தாலும் சதியாளர் அரசையும் தன்னையும் வீழ்த்தச் சதி செய்தாலும் ஊக்கம் குறையாமல், முயன்றால் இழந்தவற்றைத் திரும்பிப் பெறலாம். திட்டங்களை வெற்றியுடன் செயற்படுத்தலாம் சதிகாரரின் சூழ்ச்சியை முறியடிக்கலாம். அவ்வாறு இன்றி, தோல்வியும் இழப்பும் கண்டவுடன் மனம் தளர்ந்துவிட்டால் அத்தளர்ச்சியே அவனுக்குப் பகையாகும். தன்னம்பிக்கையும் ஊக்கமும் உடையவனால் அடையமுடியாத செல்வம் இல்லை"[4]

என்று எடுத்துக்காட்டியுள்ளார். வள்ளுவர் கருத்திற்கு வலு சேர்க்கும் வகையில் பழமொழி நூல்,

"வீங்கு தோள் செம்பியன் சீற்றம் விறல் விசும்பில்
தூங்கும் எயிலும் தொலைத்தலான் ஆங்கு
முடியும் திறத்தால் முயல்க தாம் கூர் அம்பு
அடி இழப்பின் இல்லை அரண்"[5]

எனக் குறிப்பிட்டுள்ளது.

இத்தகு சிறப்பு மிக்க ஊக்கத்தைத் தன் பணியாளர்களுக்கு அளிப்பதன் வழியாக அவர்களிடமிருந்து சிறந்த உழைப்பினை மேலாளர் பெற இயலும். இதற்கு ஏற்ப வள்ளுவர் 'சுற்றம் தழா அல்' அதிகாரத்தில் சில கருத்துக்களை மொழிந்துள்ளார்.

ஒன்றைக் கொடுப்பது போல் உறவு உண்டாக்குவது வேறு ஒன்றும் இல்லை எனலாம். பணியாளர்கள் தத்தமது திறமைகளைப் பணியில் காட்டும் பொழுது அரசர் அவர்களைப் பாராட்டிப் பரிசு வழங்கவேண்டும். ‘பரிசு அளிப்பதைவிட இனியது பாராட்டிப் பேசும் பேச்சு’ என்பதனை வள்ளுவர்,

> “கொடுத்தலும் இன்சொலும் ஆற்றின் அடுக்கிய
>
> சுற்றத்தால் சுற்றப் படும்”[6]

என்ற குறட்பா வழித் தெரிவித்துள்ளார். அரசரின் இத்தகைய அணுகுமுறைகள் பணியாளருக்கு நல்லதொரு ஊக்கியாக அமையும்.

எத்தகையோருக்கு எத்தகைய ஊக்கத்தை அளிக்க வேண்டும் என்பதற்கு வள்ளுவர் இலக்கணம் வகுத்துள்ளார்.

அரசர் தன் சுற்றத்தாரில் ஒவ்வொருவரையும் அவரவர் தகுதி, திறமை இந்த இரண்டிற்கும் ஏற்ப மதிக்க வேண்டும். மரியாதை செய்ய வேண்டும். ஒவ்வொருவரின் தகுதியையும் திறமையையும் வேறு பிரித்து அறியவும் தரம் பிரித்துக் காணவும் மதிப்பிட்டு உணரவும் அதற்குத் தக்கவாறு பாராட்டும் பரிசும் பட்டமும் அளிக்கவும் அரசருக்குத் தெரிந்திருத்தல் வேண்டும்.

தகுதி, திறமை உடையவர் மற்றவரோடு சேர்த்துச் சமமாகப் பாராட்டுப் பெற்றுச் சிறப்புப் பெற விரும்பமாட்டார். தன்னுடைய திறமையைச் சரியாக மதிப்பிட்டு அறிய வேண்டும் என்றுதான் விரும்புவார்.

திறமை மிக்கவர் அரசரால் பாராட்டப்பெறவில்லையானால், அவர் தன் பணியில் நீடிக்க விரும்பமாட்டார். நிலைத்திருக்க வேண்டுமானால் எல்லோருக்கும் அவ்வப்போது தகுதிக்கும் திறமைக்கும் தக்கபடி சிறப்புச் செய்ய வேண்டும். இக்கருத்தினைத் திருவள்ளுவர்,

"பொதுநோக்கான் வேந்தன் வரிசையா நோக்கின்
அதுநோக்கி வாழ்வார் பலர்"[7]

என்ற குறட்பா வழிப் புலப்படுத்தியுள்ளார்.

பணியாளர்களுக்குச் செயலூக்கம் அளித்தல் பற்றி மேற்சுட்டப் பெற்றுள்ள குறட்பாக்கள் வழி அறிய முடிகிறது.

## தலைமை

நிறுவனங்களின் வெற்றி, இலக்குகளை அடைவது, குறிக்கோள்களை நிறைவேற்றுவது ஆகிய அனைத்திற்கும் தலைமை தாங்குதல் தவிர்க்க இயலாதது. தலைமை தாங்குதலின் வழியாக மனித ஆற்றல் பலன்களாக மாற்றம் அடைகிறது.

## 'தலைமை' – வரையறை

தலைமை என்பதற்கு பல்வேறு அறிஞர்கள் வெவ்வேறு விதங்களில் வரையறை அளித்துள்ளனர். டேவிஸ் என்பார்,

"தலைமை தாங்குதல் என்பது, வரையறுக்கப்பட்ட நோக்கங்களை உற்சாகத்துடன் சென்றடைவதற்கு மனிதர்களை இயக்கும் திறனே ஆகும்"[8]

என்று குறிப்பிட்டுள்ளார். பீட்டர் டிரக்கர் என்பவர்,

> “நண்பர்களை உருவாக்கவோ, மனிதர்களை அதாவது நிறுவன ஊழியர்களைத் தன் வசப்படுத்தவோ இல்லை. மாறாக, மனிதர்களை மேலும் உயர்த்துவதற்காக, அவரது திறமை மற்றும் தரங்களை உயர்த்துவதற்காக ஏற்பட்டதே தலைமை”[9]

எனச் சுட்டியுள்ளார். கூண்ட்ஸ் மற்றும் ஓடோனல் என்பார்கள்,

> “நிர்வாகத் தலைமை என்பது, சிறந்த தொடர்பு கொள்ளுதலின் வழியாக உள் உறவுகளை மேம்படுத்துதல் சிறந்த இலக்குகளை அடைய ஊக்கம் அளித்தல்”[10]

என்று தெரிவித்துள்ளார்.

இவ் அறிஞர்களது வரையறைகளின் வழியாகத் தலைமை என்பதனைத் ‘திட்டங்களுக்கும் அவற்றைச் செயல்டுத்துதலுக்கும் இடையேயான தொடர்புச் சங்கிலிதான் திட்டங்களைப் பணியாளர்களுக்குத் தெளிவுபடுத்துதல், அவர்தம் எண்ணங்களைக் கேட்டறிதல், அவர்களை ஊக்கப்படுத்துதல் ஆகியவற்றைக் கொண்டு நிறுவனத்தை அதன் வெற்றி இலக்கை நோக்கி அழைத்துச் செல்வதாகும்’ என்று பொருள் கொள்ளலாம்.

## தலைமையின் பண்பு நலன்கள்

தலைமை தாங்குதல் என்ற செயல்பாடு பின்வரும் அடிப்படைப் பண்புகளைக் கொண்டுள்ளது.

- தலைமை தாங்குதல் என்பது, ஒருவரின் தனிப்பட்ட திறமை. இந்தத்திறமை பின்பற்றுபவர்களை ஊக்குவித்து தலைமையுடன் இருக்கச் செய்கிறது.
- தலைவர் என்பவர், தன் தலைமை தாங்கும் திறனைப் பயன்படுத்தித் தன்னைச் சுற்றியிருப்பவர்களின் செயல்பாடுகளை முறைப்படுத்தி இலக்குகளை அடையச் செய்கிறார்.
- தலைவர் என்பவர், தனிப்பட்ட நபர்களின் மீது தன் ஆளுமைத் திறனைப் பயன்படுத்தி, ஒரு குறிப்பிட்ட முறையில் செயல்பட வைக்கிறார்.
- தலைவருக்கும் பின்பற்றுபவருக்கும் இடையேயான உறவு இலக்குகளை நோக்கி முன்னேற வழிவகுக்கிறது.
- பின்பற்றுவர்களின் செயல்முறைகளைத் தொடர்ந்து கண்காணிப்பது தலைமையின் ஒரு குணம்.
- ஒரு குறிப்பிட்ட சூழ்நிலையில் தலைமை தாங்குதல் பயன்படுத்தப்படுகிறது. அந்தச் சூழ்நிலையில் பல்வேறு காரணிகள் தலைமை தாங்குதலின் தரத்தைப் பாதிக்கச் செய்துவிடும்.
- தலைமை என்பது அடிப்படையிலேயே தனிமனிதனின் பண்பு. இப்பண்பு மற்றவர்களைத் தன்னிடம் இருக்க ஊக்கப்படுத்துவது ஆகும்.
- தலைமையைச் செயலாக்கப்படும் பொழுது, தனிப்பட்ட நபர்களின் நடத்தையைப் பாதிக்கச் செய்வதோடு மட்டுமல்லாது அவர்களுடைய நோக்கங்களையும் பூர்த்தி செய்வது ஆகும்.

- தலைமை மற்றும் தலைமையைப் பின் பற்றுவோர் உறவு என்பது, இரு தரப்பினரின் பொதுவான நோக்கங்களின் செயற்பாடுகள் அடிப்படையில் அமைந்தது ஆகும்.
- தனி நபரின் குறிப்பிட்ட வழியில், நோக்கில் செயல்படுத்தும் விதமே தலைமையின் முயற்சியாகும்.
- தலைமை என்பது, பிறரின் நடத்தையைப் பாதிக்கின்ற, தொடர்ந்து செயல்படுத்தப்படுகின்ற செயற்பாட்டுப் பணியே ஆகும்.
- குறிப்பிட்ட சூழ்நிலைகளைப் பொறுத்தே தலைமையின் பணி அமையும். சூழ்நிலைகளுக்குத் தகுந்தாற்போல்தான் தலைமையின் பணி திறமைக்கு அறைகூவலாக அமையும்.

ஒரு நிறுவனம் வெற்றிகரமாகச் செயல்படக் காரணமாக அமைவது தலைமைதாங்குதல் சிறப்புடன் இருப்பதேயாகும். பெரும்பாலான நிறுவனங்களில் மேலாளர் என்பவரே தலைவர். அவரது வழிநடத்துதல் இன்றி நிறுவனத்தின் செயல்பாடுகள் பயனுள்ளதாக இருக்க முடியாது. நிறுவனம் என்பது ஒரு குறிப்பிட்ட நோக்கங்களுக்காக, மனிதர்களை உறுப்பினர்களாகக் கொண்டு இயங்கும் ஓர் அமைப்பு. இந்த உறுப்பினர்கள் ஒரு தலைவரால் முறையாக இயக்கப்பட வேண்டும்.

திருவள்ளுவர் காலச் சூழலில் தலைவர் என்பவர் அரசரே. படை, வருவாய், அமைச்சு, நீதி ஆலோசனைக்குழு, கோட்டை, கொத்தளம் எல்லாம் இருப்பினும் அரசருக்குத் தலைமைப் பண்பு இருக்கவேண்டியது முதன்மையானதாகக் கருதப்பட்டது.

பொருள் வாழ்க்கை என்பது, செயல் வாழ்க்கை. குடிகள் செயல் செய்வதற்கு வழி வகுத்து, வாய்ப்பு அளித்து, துணை செய்வது, பயன் கிடைக்கச் செய்து,

பாதுகாப்புக் கொடுத்து, வளர்ச்சிக்கு வழிகாட்டி நடத்தி வைப்பது அரசரின் பொறுப்பு. இப்பொறுப்பினைச் செவ்வனே நிறைவேற்ற அரசருக்குத் தலைமைப் பண்பு தலையாயதாகும்.

தலைமைப்பண்பு என்பது, பல செயற்பண்புகளின் அளவிலான இணைப்பு ஆகும். முதலில் ஆளுமைப் பண்பாக ஒருவரின் மனத்தில் அமையும். அதற்குச் செயல்வடிவம் தரும்போது செயற்பண்பாக – ஒரு பண்பே பல செயற்பண்புகளாக வெளிப்படும். இத்தலைமைப் பண்பு குறித்து வள்ளுவர்,

> "அஞ்சாமை ஈகை அறிவூக்கம் இந்நான்கும்
>
> எஞ்சாமை வேந்தற் இயல்பு"[11]

என நான்குப் பண்புகளின் இன்றியமையாமையையும் அவை அரசர்க்கு இயல்பாகவே அமைந்திருத்தல் வேண்டும் என்பதையும் வலியுறுத்தியுள்ளார்.

இத்தகு தலைமைப் பண்பு இல்லாத அரசரின் நிலையினைப் பற்றித் திருவள்ளுவர் 'வெருவந்த செய்யாமை' அதிகாரத்தில்,

> "இனத்தாற்றி எண்ணாத வேந்தன் சினத்தாற்றிச்
>
> சீறின் சிறுகும் திரு"[12]

என்ற குறட்பா வழிப் புலப்படுத்தியுள்ளார்.

இக்குறட்பாவிற்கு உரைசெய்துள்ள சுப. அண்ணாமலை,

> "அரசு ஒருவர் பொறுப்புத்தான். ஆனால், பலர் இழுக்கும் பாரவண்டி. அரசர் அந்தப் பலரின் தலைவர். அறிவுடை அமைச்சர், ஆலோசனை

கூறும் பெரியோர், துறை ஒவ்வொன்றிலும் வல்ல அறிஞர், செயல் தலைவர் ஆகியோரே அந்தப் பலர். அரசர் அவர்களிடம் ஆலோசனை கலந்து, அவர்களும் அரசியற் கடமை உடையவர் என்பதை உணர்ந்து அவர்களிடமும் நம்பிக்கை வைத்து, மதித்து அவர்கள் கூறும் அறிவுரைகளைத் தானும் எண்ணிப் பார்த்து, செய்வதற்கு எண்ணிய காரியத்தின் சாதக-பாதகங்கள் அத்தனையையும் ஆராயவேண்டும். நல்லது என்றாலும் பொருத்தமானதா என்று நோக்கிச் சிந்தித்து முடிவு செய்த பின்னர்தான் செயலில் இறங்கவேண்டும். பொருத்தம் என்பது நாட்டின் மரபு, பழக்கவழக்கம், பொதுவான நம்பிக்கை, காலம், இடம், செய்யப்படுவோரின் சூழ்நிலை, குணம்- இவற்றையெல்லாம் பொறுத்தது. இவ்வாறு செய்யாவிட்டால், அரசன் மேற்கொண்ட செயல் தோல்வியை, எதிர்ப்பை, தீமையை, கசப்புணர்வை, பகையை உண்டாக்கிவிடும். அந்த வேண்டாத விளைவைப் பார்த்து அரசர் அமைச்சர்கள் மீது கோபம் கொண்டால், அறிவுரை கூறுவோரை மனம் நோகச் செய்தால் அத்தகைய சூழல் அரசரை, அரசாட்சியை அழிக்கும்"[13]

என்று குறிப்பிட்டுள்ளார்.

இவற்றின் வழியாக அரசருக்குரிய தலைமைப் பண்பின் இன்றியமையாமையை உணரமுடிகிறது.

## மேற்பார்வையிடுதல்

மேற்பார்வை என்பது, நிறுவனத்தில் நாள்தோறும் நடக்கின்ற செயல்பாடுகளைக் கண்காணிப்பதாகும். மேற்பார்வையின் தன்மையும் நோக்கங்களும் மேற்பார்வையிட வேண்டிய பணிகள், மனிதர்கள் மற்றும் அதற்கான அளவுகோல் ஆகியவைகளைப் பொறுத்தே அமையும்.

'மேற்பார்வை' குறித்துப் பல்வேறு அறிஞர்கள் விளக்கம் அளித்துள்ளனர். ஹென்றி ரீனிங் என்பார்,

> "மேற்பார்வையிடுதல் என்பது அதிகாரத்துடன் பிறரது பணிகளை இயக்குவதே ஆகும்"[14]

என்று சுட்டிக் காட்டியுள்ளார்.

டெர்ரீ ஃபிராங்கிளின் என்பவர்,

> "நிறுவனத்தின் நிர்ணயிக்கப்பட்ட இலக்குகளை நோக்கிப் பணியாளர்களை இயக்கும் நடவடிக்கைகளே மேற்பார்வை"[15]

என்றும், ஜே.எம். ஃப்னர் என்பார்,

> "பாரம்பரிய வரிசைக் கிரமப்படி, தலைவனிலிருந்து தொடங்கி உயர்கல்வி, மேலதிகாரி, துணை அதிகாரிகள், இணை அதிகாரிகள் பிரிவுகளின் தலைமைகள், தலைமைகளின் உதவியாளர்கள், கீழ்மட்ட பணியாளர்கள் என ஒரே நேர்கோட்டில் செயல்படுவது மேற்பார்வை"[16]

என்றும் தெரிவித்துள்ளார்கள்.

எம். வில்லியன்சன் என்பவர்,

> "பணியாளர்கள் அதிகாரிகளின் உதவியுடன் நிறுவனத்தின் தேவைகளைத் தங்கள் முழுமையான அறிவினைப் பயன்படுத்தி மனநிறைவுடன் நிறைவேற்றுவதே மேற்பார்வை"[17]

எனக் கூறியுள்ளார்.

இவர்களது கூற்றுக்களிலிருந்து மேற்பார்வை என்பது, 'இயக்குதல், ஊக்கப்படுத்துதல், தலைமை தாங்குதல், ஒருங்கிணைத்தல் ஆகிய நான்கு அங்கங்களைக் கொண்டது' என்றும் 'அவை நான்கும் ஒன்றையொன்று சார்ந்தவை' என்றும் அறிய முடிகிறது.

மேற்பார்வையாளர்களது இன்றியமையாத பணி, பணியாளர்களை வேலை செய்யவைத்தல் ஆகும். அதிகாரத்தைப் பயன்படுத்தி வேலை வாங்குவது மேற்பார்வையாளரது பொறுப்பு எனினும் அது மட்டுமே போதுமானதல்ல. பணிகள் சிறப்பான முறையில் நிறைவேற்றப்பட பணியாளர்களிடையே ஆர்வமும் ஊக்கமும் உருவாக்கப்பட வேண்டும். ஆதலால், மேற்பார்வையாளர் மனித நேயத்துடன், அன்புடன் பணியாளர்களை அணுகி, பணியாளர்களின் பிரச்சனைகளை நீக்கி அவர்களது நலன் விரும்பி அவர்களை வழி நடத்த வேண்டும். இத்தகு மேலாளர் தேடல், தேரல், கூறல் ஆகிய நான்கும் செய்யவல்லவராக இருக்கவேண்டும் என்பதனை வள்ளுவர் 'அமைச்சு' என்ற அதிகாரத்தில் வலியுறுத்தியுள்ளார்.

## தேடல்

எவ்வகை வளர்ச்சித் திட்டத்தை மேற்கொள்வதாயினும் அதில் செய்யும் செயல்களுக்கு வழிமுறை வகுப்பதில், அமைச்சர் பல அளவீடுகளை நடத்திப் பார்த்து, பல கருத்தரங்குகளை நடத்தி, எத்தனை வழிமுறைகளுக்கு வாய்ப்பு உண்டோ அத்தனையையும் அறியவேண்டும். இது 'தேடல்' ஆகும்.

## தேரல்

குறைந்த நிதி முதலீட்டில், குறுகிய காலத்தில், குடிமக்களின் மிகுந்த நல்லெண்ணத்துடன், ஒத்துழைப்புடன் முடிந்து அதிகப் பயனைத் தரத்தக்க வழிமுறையைத் தேர்ந்தெடுக்க வேண்டும். தேர்ந்தெடுப்பதில் தன் விருப்பம், தனக்கு வேண்டியவர்களின் நெருக்கம், அரசரின் விருப்பம், சொந்தமுறையில் தனக்கும் தன்னைச் சார்ந்தவர்கட்கும் வரக்கூடிய நன்மை இவற்றைக் கொண்டு தேர்ந்தெடுத்தார் என்று அணுவளவும் ஐயம்கொள்ள இடம்வைக்கக் கூடாது. இது 'தேரல்' ஆகும்.

## செயல்

தேர்ந்தெடுத்த வழிமுறையில், மயிரிழையும் தவறாமல் செய்து முடித்தல், காலவாரியாகச் செயல் அறிக்கை எழுதுதல், வரவு - செலவுக் கணக்கு வைத்தல், விலையாக, கூலியாகத் தரப்படவேண்டிய தொகைகளை மீதமின்றிக் கொடுத்தல், ஒவ்வொரு கட்டத்திலும் செய்த செயலை உறுதி செய்து, மேலே செய்தல் இவை போன்றவற்றை உள்ளடக்கியது 'செயல்' ஆகும்.

**கூறல்**

செயல் முடிந்தபின், அதைப் பற்றி ஒருங்கிணைந்த முடிவான அறிக்கை எழுதி, மன்னருக்கும் அமைச்சா் அவைக்கும் அளித்து, விளக்கம் கூறுதல், அவா்கள் எழுப்பும் ஐயங்களுக்கு விளக்கம் கூறுதல். இது 'கூறல்' அல்லது 'அறிக்கை சாற்றல்' ஆகும்.

இந்நான்கும் மேலாளா்க்கு உரியன என்பதை வள்ளுவா்,

"தெரிதலும் தோ்ந்து செயலும் ஒருதலையாச்
சொல்லலும் வல்ல தமைச்சு"[18]

என்று குறட்பாவில் தெரிவித்துள்ளாா். இக்கருத்தினை அடியொற்றிச் சிறுபஞ்சமூலம் நூலில் காாியாசான்,

"தன்னிலையும் தாழாத் தொழில்நிலையும் துப்பெதிா்ந்தாா்
இன்னிலையும் ஈடில் இயல்நிலையும் - துன்னி
அளந்தறிந்து செய்வான் அரசமைச்சன் யாதும்
பிளந்தறியும் பேராற்ற லான்"[19]

என்று குறிப்பிட்டுள்ளாா். இதற்கு இணையான கருத்தினைத் திாிகடுகம்,

"அறிவும் தம்மை அடைய ஒழுகுதல்
எய்வது எய்தாமை முன்காத்தல் வைகலும்
மாறு ஏற்கும் மன்னா்நிலை அறிதல் இம்மூன்றும்
வீறு சால் பேர் அமைச்சா் கோள்"[20]

என்று சுட்டிக் காட்டியுள்ளது.

மேற்சுட்டப்பெற்றவையால், மேலாளராக அரசர் விளங்கினாலும் அமைச்சர் திகழ்ந்தாலும் அவர்கள் தனக்குக் கீழ் பணியாற்றுவோரை எவ்விதம் பணிபுரியச் செய்யவேண்டும் என்பதை உணரமுடிகிறது.

## தகவல் தொடர்பு

தகவல் தொடர்பு என்பது, ஒருவர் உள்ளத்தில் உள்ள கருத்தைப் பேச்சு, எழுத்து, சைகை (உடல்மொழி) வழியாக மற்றவர் உள்ளத்துக்குக் கொண்டு சேர்ப்பதாகும்.

நிறுவனங்களில் தகவல் தொடர்பு பல்வேறு நிலைகளில் செயல்பட்டு வருகிறது. மேலிடத்திலிருந்து கீழ்நிலைக்கும் கீழ்நிலையிலிருந்து மேலிடத்திற்கும் சார்பு நிலைகளிலும் நிறுவனத்திற்கு வெளியிலிருந்து உள்ளேயும் உள்ளே இருந்து வெளியேயும் பல்வேறு நிலைகளில் தகவல் தொடர்பு பல்வேறு விளைவுகளை ஏற்படுத்துகிறது.

## மேலாண்மைத் தகவல் அமைவு

தகவல்களை ஒழுங்குபடுத்தி உரிய படிவத்தில், உரிய வடிவத்தில் தகவல்கள் தேவைப்படுவோருக்கு உரிய நேரத்தில் கிடைக்கச் செய்வது ‘மேலாண்மைத் தகவல் அமைவு’ ஆகும்.

நிறுவனத்திலுள்ள பணப்பதிவேடு, ஊதியப்பட்டியல், வாடிக்கையாளர் பட்டியல்கள், சரக்குப் பதிவேடு, சரக்குப் பட்டியல்கள், கொள்முதல் பட்டியல்கள் முதலிய பல்வேறு ஆவணங்களை ஒழுங்குபடுத்தி அவற்றிலிருந்து தரவுகளைத் தரவுத்

தளத்தில் பதிவு செய்து, பின்னர் வேண்டியவாறு தகவல்களைப் பெற உதவுவது மேலாண்மைத் தகவல் அமைவின் பணி ஆகும். பலவகையான முடிவுகளை மேற்கொள்வதற்கும் தகவல்கள் அடிப்படைத் தேவையாகும். இவற்றை உடனுக்குடன் பெறுவதற்கு ஏதுவாக மேலாண்மைத் தகவல் அமைவு உதவுகிறது.

## தகவல் தொடர்புச் சிக்கல்கள்

தகவல் தொடர்பில் ஈடுபடும் (பேசுபவர், கேட்பவர்) இருவரும் ஒத்துழைத்தால்தான் தகவல்தொடர்பு முழுமை பெறும். பொதுவாக, ஒருவருக்கு வெற்றி, மற்றொருவருக்குத் தோல்வி என்ற நிலை தகவல் தொடர்பில் இல்லை. வெற்றி என்றால் இருவருக்குமே வெற்றிதான். தோல்வி என்றால் இருவருக்குமே தோல்விதான்.

தகவல் தொடர்பில் ஏற்படும் சிக்கல்களைப் பின்வருமாறு குறிப்பிடலாம்.

- தெளிவில்லாத தகவல் தொடர்பு தவறான அனுமானங்களை ஏற்படுத்தும்.
- முழுமையில்லாத அரைகுறைத் தகவல் தவறான அனுமானத்திற்கு வழி செய்துவிடும்.
- கால வேறுபாடும் இடவேறுபாடும் தகவலைச் சரியாகப் புரிந்து கொள்வதில் சிக்கலை ஏற்படுத்துகின்றன.
- பண்பாட்டு வேறுபாடு தகவல் பெறுவதில் தவறான அனுமானத்தை ஏற்படுத்துகிறது.
- தகவல் கொடுப்பவரும் தகவல் பெறுபவரும் தகவலில் முழுமையான ஈடுபாடு காட்ட வேண்டும்.

- புலன்களின் செயலிழப்பு தகவல் தொடர்புக்குத் தடையாகிறது.
- ஒலி வேறுபாடு சொல்லுக்கான பொருளை மாற்றிவிடும்.
- குறிப்புமொழி அல்லது சங்கேத மொழி தெரியாவிட்டாலும் தகவல் தொடர்பு சிக்கலாகிவிடும்.
- தகவல் தொடர்பில் நீண்ட சங்கிலித் தொடர் இருக்குமானால் தகவல் திரிந்து போவதற்கு வாய்ப்பு ஏற்படும்.
- மொழிபெயர்ப்புச் சிக்கல்கள் அனைத்துமே தகவல் தொடர்புச் சிக்கல்கள் தான்.

வள்ளுவர் குறிப்பிட்டுள்ள தகவல்தொடர்பு சார்ந்த கருத்துக்களைத் 'தூது' அதிகாரத்தின் வழி அறிய முடிகிறது. இவ் அதிகாரத்தில் உள்ள நான்கு குறட்பாக்கள் தகவல் தொடர்பு வெற்றிகரமான அமைய வழி கூறியுள்ளன.

"அன்பறி வாராய்ந்த சொல்வன்மை தூதுரைப்பார்க்

கின்றி யாமையாத மூன்று"[21]

என்ற குறட்பாவில் அன்புடைமை, அறிவுடைமை, ஆராய்ந்து சொல்கின்ற சொல் திறமை ஆகிய மூன்றும் தகவல் தொடர்பில் இன்றியாமையாதவை என வள்ளுவர் மொழிந்துள்ளார். இக்கருத்தினை அடியொற்றி ஏலாதி நூல்,

"மாண்டு அமைந்தார் ஆய்ந்த மதிவனப்பே வன்கண்மை

ஆண்டு அமைந்த கல்வியே சொல்ஆற்றல் பூண்டு அமைந்த

காலம் அறிதல் கருதங்கால் தூதுவர்க்கு

ஞாலம் அறிந்த புகழ்"[22]

எனக் குறிப்பிட்டுள்ளது. இம்முத்திறமை குறித்து கோ.சுரேஷ்,

> “சொல்வன்மைக்கு உரம் இடுவது, அரசியல் நூல் அறிவும் அத்துறையில் அனுபவமும் பொது அறிவும் வேற்றரசரின் அவையில் வினவப்படுகின்ற வினாக்களுக்கு அறிவு மிக்க தூதன்தான் தக்கபடி விடை சொல்லமுடியும் மேற்கோள் காட்டுவது அணித்தரமான பேச்சுக்கு ஆணி ஆகும். நாட்டு வரலாற்றை அறிந்த தூதனே, மேற்கோள் காட்டி முன்னோர் கையாண்ட பழக்கம் இது, அறிஞர் போட்ட பாதை இது என்று கூறமுடியும். அதனால், காரியத்தைச் சாதிக்கவும் முடியும் சொல்வன்மை என்பது வெறும் சொல் அலங்காரம் அல்ல. நூலறிவு மட்டுமன்றி, நுட்பமான அறிவுடன் சிக்கலை ஆராய்ந்து பார்த்துத் தெளிந்த அறிவும் வேண்டும்”[23]

எனச் சுட்டிக்காட்டியுள்ளார்.

சொல்ல வேண்டியவற்றை வகை முறையாகத் தொகுத்து, அவற்றில் தீயவற்றை நீக்கி, கேட்பவர் மகிழ நல்லவற்றைச் சொல்வதே தூதின் சிறப்பாகும் என்பதனை வள்ளுவர்,

> “தொகச் சொல்லித் தூவாத நீக்கி நகச் சொல்லி
> நன்றி பயப்பதாம் தூது”[24]

என்ற குறட்பா வழித் தெளிவுபடுத்தியுள்ளார். தகவல் தொடர்பில் வகை-தொகைப்படுத்திக் கூறுவது இன்றியமையாயதாகும். இக்கருத்துக் குறித்து ப.மருதநாயகம்,

"மலர்கள் ஆயிரம் வகை வாரியாகத் தொகுத்து வைத்தால், பார்வைக்கும் அழகு, படிப்பினையும் ஆகும். தூதுவர் பல காரியங்களைச் சொன்னால் உடன் படமாட்டான் வேற்றரசன். ஆனால், அவற்றுக்குக் காரணம் இவை என்று, ஒன்று இரண்டைச் சுட்டிக் காட்டினால், செயல் உவர்ப்பாக இருந்தாலும் காரணம் சரியானதே என்று செயலுக்கு இசைவான். பேச்சைத் தொடங்கத் தெரிந்தவருக்கு முடிக்கவும் தெரியவேண்டும். தூதர் முழுமையாகத் தன் அரசரின் கருத்தைச் சொல்ல வேண்டும். ஆனால், சுருக்கமாகப் பேசவேண்டும்"[25]

என்று கருத்துத் தெரிவித்துள்ளார். இக்கருத்திற்கு ஒப்பாகப் புறநானூற்றின்

"உயவைக் கொடியின் வாடிய மருங்குதல்
உயவல் ஊர்தி பயலைப் பார்ப்பான்
எல்லி வந்து நில்லாது புக்குச்
சொல்லிய சொல்லோ சிலவே அதற்கே
ஏணியும் சீப்பும் மாற்றி
மாண்வினை யானையும் மணிகளைந் தனவே"[26]

என்ற அடிகளைக் காண இயலுகிறது.

கற்க வேண்டியதைக் கற்று, எவர்க்கும் அஞ்சாது, சொல்ல வேண்டியவற்றைப் பிறர் கருத்தில் பதியுமாறு சொல்லிக் காலத்தை அறிந்து, அதற்கேற்றபடி நடந்து கொள்கின்றவனே தூதுவன் ஆவான். பிறர் கருத்தில் பதியுமாறு தகவலைச் சொல்வது தகவல் தொடர்பின் சிறப்பாகும். இதனை வள்ளுவர்,

"கற்றுக்கண் அஞ்சான் செலச்சொல்லிக் காலத்தால்

தக்க தறிவதாம் தூது"[27]

என்ற குட்பாவில் குறிப்பிட்டுள்ளார். இது குறித்து ப.முருகன்,

"தன் அரசர் எண்ணிய காரியம் இப்போது நடக்கவில்லை, நடக்க முடியாது என்றால், அதற்கு உரியகாலம் வரும் என்று பொறுமையைக் கடைப்பிடிக்க வேண்டும். ஒரு முறைக்கு இரண்டு முறை, மூன்றுமுறை வந்து பேச்சு நடத்த நேர்ந்தாலும் காரியம் வெற்றிபெற வேண்டும் என்று செயலைத் தள்ளிவைத்துச் செய்பவரே அறிவுடைய தூதுவர். பேச்சைத் தொடங்கத் தெரிந்த தூதருக்கு அதை எங்கே நிறுத்துவது என்றும் தெரிந்திருக்க வேண்டும்"[28]

எனக் கூறியுள்ளார்.

ஆக, தகவலாளி அன்பு, அறிவு, ஆராய்ச்சி இம்மூன்றும் நிரம்பப் பெற்றவராகவும் தகவலை வகை-தொகை செய்து வழங்க வல்லவராகவும் கேட்போர் மனத்தில் பதியும் வண்ணமும் பிழையின்றிக் குறைவின்றிப் பேசவும் தெரிந்திருக்க வேண்டும் எனத் திருக்குறள் வழி அறியமுடிகிறது. நிர்வாகத்தில் தகவல் பரிமாற்றம் நிகழும் போது, அத்தகவலைப் பரிமாறும் இருதரப்பினரும் (தகவல் அளிப்பவர், தகவல் பெறுபவர்) மேற்சுட்டப்பெற்றவற்றை நினைவில் கொண்டால் தகவல் பரிமாற்றம் வெற்றியடையும்.

## ஒருங்கிணைத்தல்

எந்த ஒரு நிறுவனத்திற்கும் அதன் லட்சியங்களை, இலக்குகளை அடைவதற்குச் சீரான, முறையான, ஒரே தன்மை கொண்ட நடவடிக்கைகள் இன்றியமையாதது.

நிறுவனத்தின் அனைத்து நடவடிக்கைகளும் திட்டமிட்டபடி நடைபெறுவதற்கு நிறுவனத்தின் பல்வேறு பகுதிகள், பிரிவுகள், மனிதர்கள், முடிவுகள் அனைத்தும் ஒரே நூலில் கட்டிய மாலையாக அமைதல் வேண்டும்.

'ஒருங்கிணைத்தல்' என்பது, அனைத்தையும் ஒருமைப்படுத்துதல் ஆகும். ஒருங்கிணைத்தல் இல்லாத நிறுவனத்தில் காலவிரையம், வீண் செலவு, உற்பத்தியில் பின்னடைவு போன்றன ஏற்பட வாய்ப்பு உள்ளது.

எனவே, ஒரு நிறுவனம் முறைப்படியும் சிக்கனமாகவும் சிக்கல்கள் இன்றியும் செயல்பட ஒருக்கிணைத்தல் தேவையாக உள்ளது.

வில்லியம் நியூமன் என்பார்,

> "ஒருங்கிணைத்தல் என்பது, பொது நோக்கத்தை அடைவதற்காகப் பணியாளரிடையே செயலொற்றுமையை ஏற்படுத்துவதாகும்"[31]

என்று கூறியுள்ளார். ஹென்றி ஃபாயல் என்பவர்,

> "அமைப்பின் நடவடிக்கைகளுக்கிடையே இணக்கத்தை ஏற்படுத்திப் பணி நிறைவேற்றத்திற்கு உதவும் வேலையே ஒருங்கிணைத்தல்"[32]

என்று சுட்டிக் காட்டியுள்ளார்.

இவ்விருவரது வரையறைகளிலிருந்து, 'பலதரப்பட்ட பணியாளர்களின் கூட்டுச் செயல்பாடே ஒருங்கிணைத்தல்' என்ற கருத்தினை அடைய முடிகிறது.

வள்ளுவர், மக்கள் கூடிவாழ்தல் பற்றி 'ஒப்புரவறிதல்' என்ற அதிகாரத்தில் குறிப்பிட்டுள்ளார். அதனைப் பணியாளர்கள் ஒரு நிறுவனத்தில் கூடிப் பணியாற்றுதலுக்கு ஒப்புமைப்படுத்திப் பார்க்க வாய்ப்பு உள்ளது.

வள்ளுவர் காலச்சூழலில் 'அரசு' என்ற நிறுவனத்தில் அரசருக்குக் கீழ் பணியாற்றும் அனைத்துத் தரப்பினரும் ஒன்றுகூடிப் பணியாற்றினால் அரசாட்சி நிலைபெறும். 'கூடி வாழ்தலே சிறப்பு'என்பதனை வள்ளுவர்,

> "புத்தேள் உலகத்தும் ஈண்டும் பெறல்அரிதே
> ஒப்புரவின் நல்ல பிற"[33]

குறட்பாவில் தெரிவித்துள்ளார். இக்குறட்பாவிற்கு உரைசெய்துள்ள ஞா.மாணிக்கவாசகன்,

> "பிறர்க்கு உதவி செய்கின்ற நல்ல பண்போடு கூடி வாழ்வதைப் போன்ற
> சிறப்பு வேறு எந்த உலகத்திலும் எதிலும் இல்லை"[34]

என்று குறிப்பிட்டுள்ளார். இதனை ஒத்த கருத்தினை முதுமொழிக் காஞ்சி நூல்,

> "ஒப்புரவு அறிதலின் தகு வரவு இல்லை"[35]

என்று சுட்டியுள்ளமை இங்கு நினைவு கூறத்தக்கது.

## மேம்பாட்டு உத்திகள்

ஒரு நிறுவனம் செம்மையாகச் செயல்பட ஆராய்ந்து, அறிந்து செய்யும் முறையினைப் பின்பற்றுவர். அம்முறைப்படி பலம், பலவீனம், சக்தி, திறமை, தக்க தருணங்கள், அச்சுறுத்தல்கள் ஆகியவற்றைச் சுய மதிப்பீடு செய்து அறிந்து, அவற்றை நீக்கித் திறம்படச் செயலாற்ற வேண்டும். இதனை மேம்பாட்டு உத்திகள் எனலாம்.

மேம்பாட்டு உத்திகளை நான்கு வகையாகப் பகுக்கலாம். அவை 1. பலம், 2.பலவீனம், 3. தக்க தருணம், 4. அச்சுறுத்தல் என்பனவாகும்.

### பலம்

'பலம்' என்பது, எதிர்காலம் சிறப்புற அமையவேண்டி சிறந்த கல்வியறிவையும் நிதிவசதியையும் முன்கூட்டியே பெற்றிருத்தலாகும். இதுகுறித்து வள்ளுவர், 'வினைத் திட்பம்' என்ற அதிகாரத்தில் குறிப்பிட்டுள்ளார். மேற்சுட்டப்பெற்ற இரண்டினையும் பெற்று எதிர்காலத்தில் சிறப்புற வாழ வழிவகை செய்யவல்லதாகத் 'தன்னம்பிக்கை'யைக் கருதுகிறார் திருவள்ளுவர். இதனை,

> "எனைத்திட்டம் எய்தியக் கண்ணும் வினைத்திட்டம்
> வேண்டாரை வேண்டா துலகு"[36]

என்ற குறட்பாவில் வள்ளுவர் சுட்டியுள்ளார். இக்குறட்பாவிற்கு உரை செய்துள்ள மு.வரதராசன்,

“மனத்திண்மை, மதித்திண்மை, அறிவுத்திண்மை, வினைத்திண்மை ஆகியன அகத் திண்மைகளாம். கருவித் திண்மை, இடத்திண்மை, காலத்திண்மை படைத்திண்மை ஆகிய புறத்திண்மைகளாம். இவை எல்லாம் இருந்தும் மெய்ம்முயற்சியாகிய புறத்திண்மை இல்லையேல் பயனில்லை”[37]

என்று குறிப்பிட்டுள்ளார்.

‘அரசு’ என்ற நிறுவனம் செம்மையாகச் செயலாற்ற அதன் நிர்வாகியான அரசருக்கு முக்குணங்கள் இன்றியமையாதன என வள்ளுவர் பின்வரும் குறட்பாவில் தெளிவுபடுத்தியுள்ளார்.

“தூங்காமை கல்வி துணிவுடைமை இம்மூன்றும்
நீங்கா நிலன் ஆள்பவர்க்கு”[38]

(இக்கருத்தினை இவ்ஆய்வின் மூன்றாவது இயலில் பணியாளருக்குரிய தகுதிப்பாடுகள் குறித்துக் குறிப்பிடும்போது ஆய்வாளர் சுட்டியுள்ளார். அதே கருத்து, இப்பகுதியில் பணியாளரின் பலமாகக் கருதப்படும் முக்குணங்கள் பற்றிக் குறிப்பிட எடுத்தாளப்பெற்றுள்ளது. அவ் இயலில் விரிவாகக் குறிப்பிட்டுள்ளதால், இப்பகுதியில் சுருங்கக் கூறியுள்ளார் ஆய்வாளர்.)

நிறைவான நிதிப்பாதுகாப்போடு ஒரு நிறுவனம் செயலாற்றினால் அந்நிறுவனம் பலம் வாய்ந்ததாகக் கருதப்படும். இது பற்றி வள்ளுவர்,

"குன்றேறி யானைப்போர் கண்டற்றால் தன்கைத்தொன்

றுண்டாகச் செய்வான் வினை"[39]

என்ற குறட்பாவில் சுட்டியுள்ளார். இதற்குச் சிறப்புரை வகுத்துள்ள ஞா.மாணிக்கவாசகன்,

"குன்றின் மேலெறி நின்று யானைப் போரைப் பயமின்றியும் பாதுகாப்புடனும் நன்றாகக் காணுவது போன்று சிறப்பானது தன் கைமுதல் கொண்டு செய்யப்படுகின்ற காரியம் ஆகும்"[40]

என்று குறிப்பிட்டுள்ளார். இக்கருத்திற்கு இணையான கருத்தினை நாலடியார் நூலில்,

"ஈட்டலும் துன்பம் மற்று ஈட்டிய ஒண் பொருளைக்

காத்தலும் ஆங்கே கடுந் துன்பம் காத்த

குறைபடின் துன்பம் கெடின துன்பம் துன்பக்கு

உறைபதி மற்றைப் பொருள்"[41]

என்ற பாடல் அடிகளில் காணமுடிகின்றது.

## பலவீனம்

நிறுவனப் பணியாளர்களின் பலவீனத்தை நிர்வாகி கண்டுணர்ந்து, அவற்றைச் சீர்செய்தால்தான் நிறுவனம் வளர்ச்சிப் பாதையில் தொடர்ந்து செயல்படும். வள்ளுவர் எதிர்காலம் குறித்த விழிப்புணர்வோடு மக்கள் எப்போதும் இருக்க வேண்டும் என்பதனை,

"வருமுன்னர்க் காவாதான் வாழ்க்கை எரிமுன்னர்

வைத்தூறு போலக் கெடும்"[42]

என்ற குறட்பா வழிச் சுட்டியுள்ளார். இக் கருத்தினை மனத்துள் கொண்டு, நிறுவன எதிர்காலத்தைக் கருத்தில் கொண்டு, பணியாளர்தம் பலவீனங்களைப் பட்டியலிட்டு, அவற்றைக் களைய நடவடிக்கைகள் மேற்கொள்ள வேண்டும்.

மேற்சுட்டப்பெற்ற குறட்பாவினைத் தழுவி, சுப.அண்ணாமலை,

"வாழ்வில் எல்லாவற்றையும் முன்னதாகவே செய்வதற்கு முன்பாகவே-சிந்திக்கும் பழக்கத்தைக் கைக்கொண்டால், எதிர்வரக்கூடிய தொல்லையை, துன்பத்தை, ஆபத்தை, இழப்பை முன்னதாகவே அறிந்து, தவிர்க்கவோ, விலக்கவோ, வெல்லவோ முடியும்"[43]

என்று கருத்துக் கூறியுள்ளார்.

இக்கருத்தினை அரசு நிர்வாகத்திற்குப் பொருத்திக் காட்டிய கோ.சுரேஷ், "அரசனிடம் அல்லது அரசு நடைமுறையில்-வரிவிதிப்பு, சட்ட ஒழுங்கு நிலைநிறுத்தல், நீதியாட்சி, பாதுகாப்பு கல்விமுறை முதலியவற்றில்-ஒரு குற்றம் உண்டாகுமானால், அது நாட்டையே பாதிக்கும். அதனால், அரசிற்கும் அரசருக்கும், அழிவு வரும். ஆள முடியாத நிலைவருமானால் அதுவே அரசழிவு அன்றோ? வெல்லமுடியாத பகை வந்து சூழ்ந்தால்தான் அரசு அழியும் என்பது இல்லை. விலக்க மறந்த குற்றம் வந்து சூழந்தாலும் அரசு அழியும். அரசு பல அமைப்புகளோடு பெரிதாக, ஆடம்பரமாக அமைந்திருக்கலாம். அதை அழிக்கப்

பெரியகுற்றம் உண்டாக வேண்டும் என்பதில்லை. ஆகவே, குற்றம் வரும் முன்பு, அதனால் கேடு வரும் முன்பு அதைத் தவிர்க்க வேண்டும்''[44]

என்று சுட்டிக்காட்டியுள்ளார்.

ஆக, வருங்கால விழிப்புணர்வு இன்மையையே மிகப்பெரிய பலவீனமாக வள்ளுவர் கருதுகிறார். நிர்வாகி, தன் நிறுவனத்தின் வருங்கால நலன் குறித்துச் சிந்தித்து செயல்படாவிட்டால் அது, அந்நிறுவனத்தின் பின்னடைவுக்கு வழிவகுத்துவிடும்.

## தக்க தருணம்

நிர்வாகிகள் எதனையும் தக்க தருணத்தில், நல்ல வாய்ப்பில் செய்வர். தருணம் பாராமல் செய்யும் எச்செயலும் எப்போதும் வெற்றிதராது.

''உடல்நோயை அளக்கும்கோல் உடலே என்பது போல, திட்டம் பற்றிய சிந்தனையே, அதன் கால அளவை அறிவிக்கும் அறிகுறி''[45]

எனக் குறிப்பிட்டுள்ளார் ப.மருதநாயகம்.

வாய்ப்பைப் பயன்படுத்திக்கொள்ளுதல் குறித்து ப.முருகன்,

''சிந்தனைக்கு முன் ஏற்பாடு, செய்தி தொகுத்தல், செயல்பற்றிய அறிவு, அறிஞர், நிதிநிலை, ஆள்பலம், மக்கள் மனப்போக்கு, உதவும் சக்திகள், எதிர்க்கும் சக்திகள்-இவை பற்றிய செய்திகளைத்

தொகுத்து, இந்தப் பின்னணியில் அந்தச் செயலைக் செய்வது அரசுக்கும் மக்களுக்கும் நன்மையா என்று சிந்திக்க வேண்டும். சிந்தனையிலேயே நாள் போக்கக் கூடாது. 'செய்யலாம்; அல்லது தள்ளிப் போடலாம் என்ற முடிவை விரைந்து மேற்கொள்ள வேண்டும். பின்னர் செய்தித் தொகுப்பு, சிந்தனை ஆகியவை செய்யக்கூடாது. செயல்திட்டம் உடனே வகுக்க வேண்டும். அரசருக்கும் ஆலோசனை அவைக்கும் மக்களில் தொடர்பு உடையவர்க்கும் தெரிவித்து, இசைவுபெற்று, செயலை உடனே தொடங்க வேண்டும்''[46]

எனக் கூறியுள்ளார். காலப் பயன்பாட்டின் இன்றியமையாமை பற்றி ஆர்.கே.திருவேங்கடசாமி,

"காலம், இடம், சூழ்நிலை, துணை இவற்றின் பொருத்தம் பார்த்தே, செயலைச் செய்ய முடிவு செய்யப்பட்டமையால், இந்தக் காலத் தாழ்ச்சியில் அந்தச் சாதகநிலை மாறிவிடக் கூடும். மாறிய சூழ்நிலையும் செயல் செய்யப்பட்டால் எதிர்பார்த்த நன்மைக்கு மாறாகத் தீமையே விளையும் செய்வதாக முடிவு செய்யப்பட்ட வளர்ச்சித் திட்டம், கிடப்பில் போடப்பட்டால், இந்த எதிர்ப்புச் சக்திகள் அத்திட்டத்தை மேற்கொள்ளாதபடி தடைசெய்யக் கூடும். விழிப்புடன் இருந்து, சுற்றுப்புறத்தை அறியும் அறிவே செயல்-திட்டத்தின் அமைப்புக்குக் கால பரிமாணத்தையும் செயல் தொடங்க வேண்டிய காலத்தையும் முடிவு செய்ய வல்லது''[47]

என்று சுட்டியுள்ளார்.

இக்கருத்துக்கள் சுருக்கமாகத் திருக்குறளில்,

> "சூழ்ச்சி முடிவு துணிவெய்தல் அத்துணிவு
>
> தாழ்ச்சியுள் தங்குதல் தீது"[48]

என்ற குறட்பா வழிக் கூறப்பட்டுள்ளன. வாய்ப்புகள் நம்மைத் தேடிவரும்வரை காத்திருத்தல் சிறப்பு என்பதனை,

> "ஒல்லும்வாய் எல்லாம் வினைநன்றே ஒல்லாக்கால்
>
> செல்லும்வாய் நோக்கிச் செயல்"[49]

என்ற குறட்பாவில் தெளிவுபடுத்தியுள்ளார். இக்குறட்பாவிற்குச் சிறப்புரை செய்துள்ள சுப.அண்ணாமலை,

> "சூழ்நிலையைப் பார்த்திருந்து, வாய்ப்பாக வரும்போது செயல் செய்ய வேண்டும். வாய்ப்பு இல்லையேல், அதை உண்டாக்கத்தக்க ஒன்றைச் செய்யவேண்டும். செயலைச் செய்துவிட வேண்டும் என்ற ஆர்வத்தால், மக்களின் உறவு-அரசுடன் அவர்களுக்கு உள்ள உறவு-கெடும் வண்ணம் எதையும் செய்யக் கூடாது. செயலுக்கு அவர்களின் பரவலான முழு ஆதரவும் ஒத்துழைப்பும் கிடைக்கவில்லையே என்று வருந்தக் கூடாது. 'நல்ல செயல்தான்' என்றாலும் காலமும் சூழ்நிலையும் பார்த்துச் செய்தால்தான் எண்ணிய பயன் கிடைக்கும் வலிந்து செய்தால் தீமைதான் விளையும். ஆதலால், மக்களின்

ஆதரவு முழுமையாகக் கிடைக்கும் வகையில் எடுத்துச் சொல்லிக் கொண்டிருக்கவேண்டும். காலம் கனியும் வரை காத்திருக்க வேண்டும்”[50]

என்று குறிப்பிட்டுள்ளார்.

ஆதலால், நிர்வாகிகள் எச்செயலைச் செய்யவும் தக்க தருணத்தை, வாய்ப்பை எதிர்நோக்கி இருப்பர் என்பது தெளிவாகுகிறது.

## அச்சுறுத்தல்

பணியாளர்களுக்குப் பணியிடச் சூழல்களிலும் நிர்வாகிகளுக்குப் போட்டி நிறுவனங்களின் வழியாகவும் பல்வேறு அச்சுறுத்தல்கள் தொடர்ந்து வந்தவாறு இருப்பது இயல்பு. இவற்றை எதிர்கொண்டு தன் பணியைச் செவ்வனே மேற்கொள்வதில்தான் வெற்றி அடங்கியிருக்கிறது. அச்சுறுத்தல்களை எதிர்கொள்வது குறித்து வள்ளுவர், ‘இடுக்கண் அழியாமை’ என்ற அதிகாரத்தில் பல்வேறு கருத்துக்களைக் கூறியுள்ளார்.

“வெள்ளத் தனைய இடும்பை அறிவுடையான்
உள்ளத்தின் உள்ளக் கெடும்”[51]

என்ற குறட்பாவில்,

“வெள்ளம் போல் துன்பம் தொடர்ந்து பெருகிவரினும் அறிவுடையோர் மனத் திண்மையால் அத்துன்பத்தைப் பொறுத்துக் கொள்வார். வந்த துன்பமும் தொலையும்”[52]

என்ற கருத்தினை வெளிப்படுத்தியுள்ளார். இதனை நாடாளும் அரசர்க்குப் பொருத்திப் பார்த்தல் தகும்.

துன்பத்தை வெல்வது, துன்பத்துக்கான காரணத்தை - மூலத்தை – முறியடிப்பதில் இல்லை. ஒன்றாக வந்தாலும் எல்லாத் திசையிலும் இருந்து வந்தாலும் அதை எதிர்கொள்ளும்போது, அந்த மோதலை எந்த மனநிலையுடன் சந்திக்கிறோம் என்பது தான் வெற்றி அல்லது தோல்வியைத் தீர்மானிக்கிறது. எந்த வலிமையும் இல்லாதபோது அல்லது பற்றாக் குறையாக உள்ளபோது, மன்னன் தன் மனவலிமையால் மட்டும், துன்பத்தின் மோதலை ஏற்று, அந்தக் கணத்தில் மனம் தளராமல், ஊக்கம் குன்றாமல் - மனிதன் என்ற ஆண்மையை விட்டுக் - கொடுக்காமல் நின்றுவிட்டால், எதிர்வருவது எவ்வளவு துன்பம் என்றாலும் வென்று விட்டார் என்றே பொருள். இதனை வள்ளுவர்,

> "அடுக்கி வரினும் அழிவிலான் உற்ற
>
> இடுக்கண் இடுக்கண் படும்"[53]

என்ற குட்பாவில் சுட்டியுள்ளார்.

ஆசை, விருப்பம், கடமை இவற்றுள் எதன் காரணமாக ஒரு செயலைச் செய்தாலும் அதில் துன்பமும் கலந்தே இருக்கும். செயல் அல்லது பொறுப்பின் தன்மைக்கு ஏற்றபடி துன்பம் குறைவாக அல்லது கூடுதலாக இருக்கும். மனிதர்கள் இடையே செய்ய வேண்டியிருப்பதால் மனத்துன்பமும் இருக்கும். இவை செயலின், பொறுப்பின் பகுதியாக உள்ளவை. இவை இல்லாமல் செயல் அல்லது பொறுப்பு நிறைவேற்றம் சாத்தியமில்லை.

அரசப் பதவியில் இன்ப போகமும் உண்டு; பொறுப்பின் காரணமாக, எண்ணில்லாத துன்பங்களும் உண்டு. இந்த இன்பத்திலிருந்தும் துன்பத்திலிருந்தும் நீங்கி வாழ வள்ளுவர்,

"இன்பம் விழையான் இடும்பை இயல்பென்பான்

துன்பம் உறுதல் இலன்"[54]

என்ற குறட்பாவில் வழி கூறியுள்ளார். இக்குறட்பாவிற்குச் சிறப்புரை செய்துள்ள சுப.அண்ணாமலை,

> "உள்ளம் இன்பத்தை அனுபவிப்பது வேறு, இன்பமே நாட்டமாக இருப்பதுவேறு உள்ளதற்குமேல் இன்னும் இன்னும் என்று தேடி அடைவது வேறு. அரசர் தனக்கென எப்பொருளைத் தேடினும் அதனை அடைந்துவிடுவார். ஆனால், அந்த இன்பத் தேடல், அவன் பதவியின் மற்றொரு பக்கமான துன்பத்தை, இடர்ப்பாட்டை வெறுக்கச் செய்யும். இன்பம் வரும் என்றால், மேற்கொண்ட செயலையே விட்டுவிட, பொறுப்பைத் தட்டிக் கழிக்கச் செய்யும். அதேபோல, தனக்கு உள்ள இடர்ப்பாடுகளைத் துன்பங்களை அனுபவித்துக் கொண்டே, அரசப் பொறுப்பை நிறைவேற்ற வேண்டியிருக்கும். நிலையை எண்ணிக்கொண்டே இருந்தால், எண்ணம் சுமையாகும். செயல் தடைப்பட்டுப் போகும். அனுபவிக்கக் கூடிய இன்பத்தில் மனம் செல்லாது. ஆகவே, துன்பத்தை, தேன் எடுப்பவர்போல், கல் உடைப்பவர் போல், இளைஞரிடம் பழகுபவர் போல் தன் பதவிக்கு இயல்பானது என்று

நினைக்க வேண்டும். இன்பத்தை விரும்புவதும் இல்லை, துன்பத்தை விலக்குவதும் இல்லை என்று இருந்தால் அவரே அரசச் செயலைத் தொடர்ந்து செய்ய முடியும்''[55]

என்று குறிப்பிட்டுள்ளார்.

ஆக, அச்சுறுத்தல்களைத் திறம்பட எதிர்கொள்வோரே நிலைத்து வாழ இயலும் என்பது புலனாகிறது.

## தொகுப்புரை

செயலூக்கமளித்தல், தலைமை, மேற்பார்வையிடுதல், தகவல் தொடர்பு, ஒருங்கிணைத்தல் இவ்ஐந்தும் நிர்வாகப் பணிகளுள் தலையாயன.

செயலூக்கமளித்தல் சார்ந்த கருத்துக்கள், திருக்குறளில் 'ஊக்கமுடைமை' என்ற அதிகாரத்தில் மிகுதியாகக் கூறப்பட்டுள்ளன.

தலைமை என்பது, 'திட்டங்களுக்கும் அவற்றைச் செயல்படுத்துதலுக்கும் இடையேயான தொடர்புச் சங்கிலிதான். திட்டங்களைப் பணியாளர்களுக்குத் தெளிவுபடுத்துதல், அவர்தம் எண்ணங்களைக் கேட்டறிதல், அவர்களை ஊக்கப்படுத்துதல் ஆகியவற்றைக் கொண்டு நிறுவனத்தை அதன் வெற்றி இலக்கை நோக்கி அழைத்துச் செல்வதாகும்'.

திருவள்ளுவர் காலச் சூழலில் தலைவர் என்பவர் அரசரே, படை, வருவாய், அமைச்சு, நீதி ஆலோசனைக்குழு, கோட்டை, கொத்தளம் எல்லாம் இருப்பினும் அரசருக்குத் 'தலைமைப் பண்பு' இருத்தல் முதன்மையானதாகக் கருதப்பட்டது. இது குறித்து, ஆறுக்கும் மேற்பட்ட குறட்பாக்களில் வள்ளுவர் கருத்துத் தெரிவித்துள்ளார்.

மேற்பார்வை என்பது, இயக்குதல், ஊக்கப்படுத்துதல், தலைமை தாங்குதல், ஒருங்கிணைத்தல் ஆகிய நான்கு அங்கங்களைக் கொண்டது என்றும் அவை நான்கும் ஒன்றையொன்று சார்ந்தவை என்றும் அறியமுடிகிறது. மேற்பார்வை குறித்து, 'அமைச்சு', என்ற அதிகாரத்தில் வள்ளுவர் பல்வேறு கருத்துக்களை எடுத்துரைத்துள்ளார்.

அன்புடைமை, அறிவுடைமை, ஆராய்ந்து சொல்கின்ற சொற்திறமை ஆகிய மூன்றும் தகவல் தொடர்பில் இன்றியமையாதவை என வள்ளுவர் மொழிந்துள்ளார்.

பலதரப்பட்ட பணியாளர்களின் கூட்டுச் செயல்பாடே 'ஒருங்கிணைத்தல்' ஆகும். இதுகுறித்து, 'ஒப்புரவறிதல்' என்ற அதிகாரத்தில் வள்ளுவர் விளக்கம் அளித்துள்ளார்.

மேம்பாட்டு உத்திகளைப் பலம், பலவீனம், தக்க தருணம், அச்சுறுத்தல் என நான்காகப் பகுக்கலாம்.

'பலம்' குறித்து 'வினைத்திட்பம்' என்ற அதிகாரத்தில் வள்ளுவர் குறிப்பிட்டுள்ளார். தன்னம்பிக்கையே பலம் என்பது திருவள்ளுவர்தம் கருத்தாக உள்ளது.

எதிர்காலம் குறித்த விழிப்புணர்வு இன்றி இருப்பதையே வள்ளுவர் பலவீனமாகக் கருதுகிறார்.

நல்லதொரு வாய்ப்பிற்காகக் காத்திருத்தலையும் வாய்ப்பினை நன்முறையில் பயன்படுத்திக் கொள்ளுதலையும் 'தக்க தருணம் பார்த்தல்' என்ற செயல் நுட்பத்திற்குள் வள்ளுவர் பொருத்தி உரைத்துள்ளார்.

அச்சுறுத்தல் பற்றி, 'இடுக்கண் அழியாமை' என்ற அதிகாரத்தில் வள்ளுவர் பலவாறு மொழிந்துள்ளார்.

நிர்வாகப் பணிகள் மற்றும் மேம்பாட்டு உத்திகள் குறித்து வள்ளுவர் குறிப்பிட்டுள்ள கருத்துக்களை அக்கால அரசு செயல்பாடுகளின் வழியும் பிற்கால நீதிநூல்கள் வழியும் தற்கால நிறுவனச் செயல்பாடுகளின் வழியும் ஒப்பிட்டு இவ்இயலில் கூறப்பட்டுள்ளன.

## அடிக்குறிப்புகள்

1. கி.வா.ஜகாந்தன், (ப.ஆ.), திருக்குறள் ஆராய்ச்சிப் பதிப்பு, ப. 338.
2. ந.மு. வேங்கடசாமி நாட்டார் (உ.ஆ.), கொன்றை வேந்தன், ப. 21.
3. கி.வா.ஜகந்நாதன் (ப.ஆ.), மு.நூ.,ப.339.
4. சுப.அண்ணாமலை, திருக்குறள் சிந்தனை, பக்.348-349.
5. ச.வே.சுப்பிரமணியன், (ப.ஆ.), பதினெண் கீழ்க்கணக்கு நூல்கள், ப.104.
6. கி.வா.ஜகந்நாதன் (ப.ஆ.), மு.நூ., ப.304.
7. மேலது, ப.307.
8. இரா.பாஸ்கரசேதுபதி, பொது நிருவாகவியல், ப.80.
9. மேலது, ப.81.
10. எஸ்.விஜயன், பொது நிர்வாகத்தின் கொள்கைகள், ப.18.
11. கி.வா.ஜகந்நாதன் (ப.ஆ.), மு.நூ., ப.232.
12. மேலது, 326.
13. சுப. அண்ணாமலை, மு.நூ., பக்.305-306.
14. இரா.பாஸ்கரசேதுபதி, மு.நூ.,ப.86.
15. எஸ்.விஜயன், மு.நூ.,ப.102.
16. இரா.பாஸ்கரசேதுபதி, மு.நூ., ப.87.
17. எஸ்.விஜயன், மு.நூ.,ப. 103.
18. கி.வா.ஜகந்நாதன் (ப.ஆ.), மு.நூ.,ப.358.
19. ச.வே.சுப்பிரமணியன் (ப.ஆ.), ப. 149.
20. பு.சி. புன்னைவனநாத முதலியார் (உ.ஆ.), திரிகடுகம், ப. 37.

21. கி.வா.ஜகந்நாதன், (ப.ஆ.), மு.நூ.,ப. 379.
22. தி.சு. பாலசுந்தரம், (உ.ஆ.), ஏலாதி, ப. 32.
23. கோ.சுரேஷ், வள்ளுவரும் வாழ்வியலும், ப.81.
24. க.வா.ஜகந்நாதன் (ப.ஆ.), மு.நூ.,ப.380.
25. ப.மருதநாயகம், ஒப்பில் வள்ளுவம், ப.93.
26. ச.வே. சுப்பிரமணியன் (ப.ஆ.), சங்க இலக்கியம் மூலம் முழுவதும், ப.487.
27. கி.வா.ஜகந்நாதன் (ப.ஆ.), மு.நூ.,ப. 381.
28. ப.முருகன், திருவள்ளுவரின் பொருளியல் சிந்தனை, ப.30.
29. கி.வ.ஜகந்நாதன் (ப.ஆ.), மு.நூ.,ப.383.
30. ஆர்.கே.திருவேங்கடசாமி, வள்ளுவத்தில் நீர்வளமும் வாழ்வியலும், ப.36.
31. எஸ். விஜயன், மு.நூ.,ப.18.
32. இரா.பாஸ்கரசேதுபதி, மு.நூ.,ப.20.
33. கி.வ.ஜகந்நாதன் (ப.ஆ), மு.நூ.,ப.133.
34. ஞா.மாணிக்கவாசகன், (உ.ஆ.), திருக்குறள் எளியஉரை-இனியநடை,ப. 44.
35. பு.சி. புன்னைவனநாத முதலியார் (உ.ஆ.), முதுமொழிக்காஞ்சி, ப. 38.
36. கி.வ.ஜகந்நாதன் (ப.ஆ.), மு.நூ.,ப.374.
37. மேற்கோள் க.ப.அறவாணன், மு.நூ.,ப.431.
38. கி.வ.ஜகந்நாதன், (ப.ஆ.), மு.நூ.,ப.233.
39. மேலது, ப.412.
40. ஞா.மாணிக்கவாசகன், மு.நூ.,ப.155.
41. தி.சு. பாலசுந்தரம், (உ.ஆ.) நாலடியார், ப. 33.
42. கி.வ.ஜகந்நாதன் (ப.ஆ.), மு.நூ.,ப.260.

43. சுப.அண்ணாமலை, மு.நூ.,ப.476.

44. கோ.சுரேஷ், மு.நூ., ப.80.

45. ப.மருதநாயகம், ஒப்பில் வள்ளுவம், ப.116.

46. ப.முருகன், திருவள்ளுவரின் பொருளியல் சிந்தனை, ப.21.

47. ஆர்.கே.திருவேங்கடசாமி, மு.நூ., ப.128.

48. கி.வ.ஜகந்நாதன் (ப.ஆ.), மு.நூ.,ப.374.

49. மேலது, ப.375.

50. சுப.அண்ணாமலை, மு.நூ.,ப.477.

51. கி.வ.ஜகந்நாதன் (ப.ஆ.), மு.நூ.,ப.351.

52. ஞா.மாணிக்கவாசகன், (உ.ஆ.), மு.நூ.,ப.128.

53. கி.வ.ஜகந்நாதன், (ப.ஆ.), மு.நூ., ப.353.

54. மேலது, ப.354.

55. சுப. அண்ணாமலை, மு.நூ., பக். 404-405.

## இயல் ஐந்து

# திருக்குறளும் தொழில் நிர்வாகமும்

திருவள்ளுவர் காலத்தில் உழவுத்தொழில் செம்மையுற்றுப் பரவியிருந்தது. உழவுத்தொழில், அது நிகழும் களமான 'நிலம்', அதில் நிகழ்த்தப்படும் 'உழைப்பு', அதனால் விளையும் 'பொருள்' அல்லது 'செல்வம்' குறித்து முதலில் இவ் இயலில் சுட்டப்பட்டுள்ளன. அவற்றின் தொடச்சியாகத் தொழில் நிர்வாகக் கூறுகள் குறித்த வள்ளுவரின் கருத்துக்கள் வகை – தொகை செய்யப்பட்டு விளக்கப்பட்டுள்ளன.

### நிலவளம்

தற்கால பொருளியலார் நிலத்தை, மூலதனம் உண்டாக்குவதற்குரிய ஏதுப் பொருட்களில் ஒன்றாக (காரணிகளாகக்) கொள்வர். மேனாட்டில் தோன்றிய வணிகவாதத்தினரும் இயற்கை வாதத்தினரும் நிலத்தைப் பொன் போல் போற்ற வேண்டும் என்றனர்.

தொன்மைப் பொருளியலின் தந்தை எனப் பாராட்டப்படும் ஆடம்ஸ்மித் உள்ளிட்ட புதுமலர்ச்சியாளர் அனைவருமே உற்பத்தி பெருக்கத்திலும் மூலதனம் உருவாக்குவதிலும் நிலம் இன்றியமையாத இடத்தை வகிக்கிறது என எடுத்துரைத்துள்ளனர்.

திருக்குறள் பொருட்பாலின் தொடக்கத்திலேயே, 'இறைமாட்சி' என்ற அதிகாரத்தின் முதல் குறளில் படை, குடி, கூழ், அமைச்சு, நட்பு, படை, அரண் முதலிய ஆறு செல்வங்களையுடையவன் அரசருள் ஏறு போன்றவன் என்ற கருத்தினைக் குறிப்பிட்டுள்ளார் வள்ளுவர்.

இக்குறளுக்கு உரை வகுத்த பழைய உரையாசியர்கள், ‘குடி என்பது குடியுள்ள நாட்டினை’ என்றே பொருள் காண்கின்றனர். அதனால்தான் ‘நாடு’ என்ற தலைப்பில் தனியே நிலத்தின் வளத்தையெல்லாம் எடுத்துக்கூறிப் பொருள் ஆக்கத்திற்கு அது எங்ஙனம் துணை நிற்கின்றது என்று விரிவாக எடுத்துரைத்துள்ளார் வள்ளுவர்.

தமிழகத்தில் பண்டைக் காலம் முதல் செல்வத்தைத் ‘திருமகள்’ என்றும், கல்வியைக் ‘கலைமகள்’ என்றும் நிலத்தை ‘நிலமகள்’ என்றும் சிறப்பித்துக் கூறி இறைவியாக வழிபடும் மரபு உண்டு. நிலத்தின் சிறப்பு பழமொழிகளிலும் பின்வருமாறு குறிப்பிடப்பட்டுள்ளன.

> “பூமி திருத்தி உண்; நிலத்தை வைத்து வாழ்”[1]

> “மண்ணை நம்பினவரும் மன்னனை நம்பினவரும்
> வீண் போக மாட்டார்கள்”[2]

> “நிலம் பொட்டல் அல்ல; தலைதான் பொட்டல்”[3]

இத்தகு சிறப்புமிக்க நிலத்தினைத் தொல்காப்பியர், தொல்காப்பியம் பொருளதிகாரத்தில் அகத்திணை இயலில் நான்காகப் பாகுபாடு செய்து இலக்கணம் வகுத்துள்ளார்.

> “மாயோன் மேய காடுறை உலகமும்
> சேயோன் மேய மைவரை உலகமும்
> வேந்தன் மேய தீம்புனல் உலகமும்

முல்லை குறிஞ்சி மருதம் நெய்தல் என்று

சொல்லிய முறையால் சொல்லவும் படுமே"[4]

இந்நூற்பாவின் தொடர்ச்சியாக, நிலத்தின் அடிப்படையிலேயே முதல், கரு, உரி என்ற மூன்றினையும் எடுத்துக் கூறுகின்றார். இது, நிலத்தின் அடிப்படையில்தான் அங்குத் தோன்றும், மக்களின் வாழ்க்கை முறையும் பண்பாடும் அமைகின்றது என்பதனை எடுத்துக்காட்டுகிறது.

நிலத்திலே தோன்றுவன கருப்பொருள். மக்களுடைய நாகரிகப் பண்பாக அமைவன உரிப்பொருள். பண்டைத் தமிழர் பொருளியல் வாழ்வின் அடித்தளமே நிலத்தின் மீதே காட்டப்பட்டது.

மேனாட்டுப் பொருளியல் நூல்கள் பல பொருள் உற்பத்தி அல்லது மூலதனம் உருவாவதற்குக் காரணமாக அமைகின்ற 'நிலம்' குறித்து,

> "இறைவன் தந்த கொடை 'நிலம்' சிலர் இதனை உண்மையான செல்வம்"[5]

என்பார்கள்.

> "பிறவெல்லாம் தோன்றி மறையலாம். அளவில் பெருகலாம்; சுருங்கலாம். இதுமட்டும் தன் பரப்பில் அளவில் என்றுமே ஒரே அளவில் இருந்து கொண்டு நாளுக்கு நாள் மக்கள்தொகை பெருகப்பெருக, விலை மதிக்க முடியாத ஒரு பொருளாக மாறிவிடும்"[6]

என்றும் கூறுவர்.

திருக்குறள் உரையாசிரியர்களான மணக்குடவரும் பரிப்பெருமாளும் நிலத்தைப் பொருளின் பகுதியாகிய 'நாடு' என்றே பொருள் கொள்கின்றனர்.

திருவள்ளுவர் 'நிலம்' என்பதை 'நாடு' என்றே குறிப்பிடுகின்றார். வள்ளுவர் கோனாட்சி நிலவிய காலத்தில் வாழ்ந்ததால், அரசருக்குப் பெருமை தேடித்தந்த நாட்டின் இலக்கணமே பாடுதற்கு ஏற்றது எனக் கொண்டு, நாட்டையே ஓர் அதிகாரத்தில் விளக்கிக் கூறுகின்றார்.

வள்ளுவர் ஒரு நாட்டை வெறும் பொருளியல் கண்ணோட்டத்தோடு மட்டும் காணவில்லை. உலகத்தில் பண்புடையாளரும் சான்றோர்களும் இருக்க வேண்டும் என நினைத்தார். மக்கள் வயிறு நிறைய உண்டு வாழ வேண்டும்; அதற்கு நிலம் நிறைய விளைய வேண்டும். உழவினை மேற்கொள்ளத்தக்கதாக நீர்வளமும், நிலவளமும் கொண்டு செழிப்பாக இருக்க வேண்டும் என்றும் வற்றாத நீர் - மலைநீர், ஊற்று நீர், மழைநீர் இருக்க வேண்டும் என்றும் மேல்நாட்டார் கூறுவது போல நிலம் செழிப்பாக இருக்க வேண்டும் என வள்ளுவர் வலியுறுத்தியுள்ளார்.

உலக மக்களின் வாழ்க்கையில் இன்றியமையாத தேவைகள் மூன்று அவை; 1.உணவு, 2. உடை, உறையுள் என்பனவாகும். அவற்றுள் உணவு, உடை இரண்டும் வேளாண்மை சார்ந்தன. இம்மூன்றிலும் இன்றியமையாதது உணவு. ஆதலால், வள்ளுவர் முதலில் உணவு குறித்து கருத்துத் தெரிவித்துள்ளார். குறைவில்லாத செல்வம் படைத்தவர்கள் நாட்டில் இருக்க வேண்டும். அப்போதுதான் உழவுத் தொழிலில் உற்பத்தியால் ஆன பொருள் கொண்டு, தொழில் வளம் பெருகவும் செல்வம் பெருகவும் வாய்ப்பு உண்டு என்பது வள்ளுவர் கருத்தாகும். அதுமட்டுமின்றி,

மக்கள் மனம் பண்பட்டுச் சிறந்த சான்றோர்களாக விளங்க வேண்டும் என்பது அவர்தம் வேட்கை. இம்முறையில் நல்ல விளைச்சல், செல்வர், தக்கார் என்ற மூன்றும் கொண்டு திகழ்வதே சிறந்த நாடாகும் என்பதனைத் திருவள்ளுவர்,

"தள்ளா விளையுளும் தக்காரும் தாழ்விலாச்

செல்வமும் சேர்வது நாடு"[7]

என்ற குறட்பா வழிச் சுட்டியுள்ளார். இக்குறட்பாவில் இடம் பெற்றுள்ள 'தள்ளா விளையுள்' என்பதில் குறிப்பாக, 'தள்ளா' என்ற சொல்லுக்கு மணக்குடவர், பரிப்பெருமாள் போன்ற பழைய உரையாசிரியர்கள் 'தப்பாத விளைச்சலைத் தரும் நிலங்கள்' என்றே பொருள் காண்கின்றனர்.

தப்பாமல் விளைவதற்கு முதற்காரணமாக இருப்போர் உழைப்பினை நல்கும் உழவர் என்று உழவர் பெருமக்களைப் பரிமேலழகர் கருதுகிறார். விளைவு குறையாமல் இருக்க நிலத்தின் வளமும் தேவை; நிலத்தின் வளத்துடன் நீர்வளமும் தேவை. உழவுக்கு நீர் வேண்டும் என்பதற்காகத் தான் நம்முன்னோர்,

"நீரகம் பொருந்திய ஊரகத்திரு"[8]

என்று பழமொழியின் வழியாகக் கூறியுள்ளனர்.

நிலம் என்று பொதுப்படையாகக் கூறப்பட்டாலும் நிலத்தின் மீது உள்ள அடர்ந்த காடு, வானுற உயர்ந்த மலை, மலையிலிருந்து கீழிறங்கி ஓடிவரும் ஆறுகள், அவை சென்று சேரும் கடல், இவை தவிரக் காட்டிலே கிடைக்கும் பொருளும் மலைபடு பொருளும் கடல்தரு வளமும் நிலத்தின் கீழ் உள்ள கனிவளமும் நிலம் தரும் செல்வங்களாகும்.

பழங்காலத்தில் நாடுகள் சிறுசிறு நாடுகளாகப் பிரிக்கப்பட்டு அரண் அமைக்கப்பட்டு அரணுக்குள் பாதுகாவலாக அரசர் இருந்துவந்தார். அதனால், அரணையும் நாட்டுடன் சேர்த்து பேசுவது மரபாக இருந்தது. அதுவும் பொருள் படைத்தற்குக் காரணியாக அமைந்தது சிந்திக்கத்தக்கது.

## நீர்வளம்

> "நீரின்றி யமையாது லகெனின் யார் யார்க்கும்
> வானின்ற மையாது ஒழுக்கு"[9]

என்ற குறட்பாவில் நீர், மழையின் வழியாகப் பெறப்படுவது என்பதனைத் திருவள்ளுவர் வலியுறுத்தியுள்ளார்.

. தேவையான அளவு மழை பெய்த நிலையிலேயே உழவுத் தொழில் நடைபெற்று மக்களுக்கு வேண்டிய உணவு, உடை, உறையுள் போன்றவற்றுக்கு வேண்டிய பொருள்களை உற்பத்தி செய்ய இயலும். இதனால், மக்கள் பசியும் பிணியும் இன்றிச் செழிப்புற வாழ்வர். இச்சூழலே மக்கள் ஒழுக்கம் தவறாது வாழ்வதற்கு ஏற்றது. தவறாத மழைப் பொழிவும் ஒழுக்கமும் உடன்பட்ட பொருள்களாகக் கூறப்பட்டுள்ளன. திருக்குறளுக்குப் பின்னர் தோன்றிய பல கவிதைகளும் இக்கருத்திற்கு உடன்பாடான கருத்துக்களை வலியுறுத்தியுள்ளன.

உலக உயிர்கள் யாவும் வாழவும் வளரவும் மழை தவறாது பெய்தல் வேண்டும். தவறாத மழை முதற்பொருள், இரண்டாவது தவறாத ஒழுக்கம். இவ்வுலகத்தில் நீரே முதலில் தோன்றியது. இதனைத் தொடர்ந்தே நிலம் தோன்றியது.

உயிர்கள் முதலில் நீரிலேயே உற்பத்தியாயின என்பது அறிவியல் உண்மை. 'நீரின்றி அமையாது உலகு' என்ற சொற்றோடர் உயிர்கள் நீரில் உற்பத்தியாகி வளர்ந்து பெருகின என்ற உண்மையினை உள்ளடக்கியது. அதாவது, நீரிலேயே உயிர்கள் முதலில் தோன்றின. நீர் இல்லையெனில் உயிர்கள் தோன்றியிருக்க இயலாது என்பதனை இவ்வடி உணர்த்துகின்றது.

திருக்குறள் பாயிரத்தில் கடவுள் வாழ்த்துக்குப் பின் 'வான்சிறப்பு' என்ற அதிகாரத்தை வள்ளுவர் அமைத்தது, உலக மக்கள் அறம், பொருள், இன்பம் முதலியவற்றைத் துய்ப்பதற்கு மழை இன்றியமையாதது என்ற உண்மை கருதியே ஆகும்.

'வான்சிறப்பு' என்ற அதிகாரத்தில் மழையை அமிழ்து என்று வர்ணித்தது வள்ளுவத்தின் தனிச்சிறப்பாகும். உலக உயிர்கள் அனைத்தும் வாழ்வதற்கு மழை அடிப்படை என்பதனால் மழையை அமிழ்து என்று போற்றினார்கள். அமிழ்து உண்டவர் இறவார். ஆனால், உலக உயிர்கள் இறப்பவை. உலக உயிர்களை அழியாது பரப்பது மழை. மழையே தாவரங்களும் பயிர்கள் வளர்வதற்கு ஆதாரமானது. ஆகவே, தனை அமிழ்து என்றது முற்றிலும் பொருத்தம் உடையதேயாகும். இக்கருத்தின் அடிப்படையில் சிலப்பதிகாரத்தில்,

"மாமழை போற்றுதும் மாமழை போற்றுதும்"[10]

என்ற அடி உலகு நிலைத்திருப்பதற்கும் ஏதுவான் மழையை வழிபடுவது, மழைபற்றித் திருக்குறள் மொழிந்துள்ள கருத்தினை ஒத்துள்ளது.

உயிர்களுக்கு வேண்டிய உணவினை நல்குவது தாவரங்களும் பயிர்களும் ஆகும். இவை செழித்து வளர மழை வேண்டும். நீரானது உயிர்களின் உடல்களில் ஒன்றியுள்ளதுடன், பயிர்களும் விலங்குகளும் வாழ்வதற்கு அடிப்படையாகும். மழைநீர், மண்துகள்களின் இடைவெளியை நிறைத்து அங்குள்ள காற்றினை வெறியேற்றியதும் மண் பூரிப்படையும். இதனையடுத்து நிலத்தின் அடிப்பகுதிக்கு நீர் செல்லுவது குறைந்து நிலப்பரப்பின் மீது நீர் செறியும். அவ்வாறு செறிந்த நீர், நிலச் சரிமானத்தினூடே பாய்ந்தோடி ஓடை, குட்டை, குளம், ஏரி, ஆறு முதலியவற்றை அடையும், பெய்த மழையின் ஒரு பகுதி.

நிலத்தின் ஆழ்ந்த பகுதியினை அடைந்து நிலநீராகின்றது. இந்நிலநீர் கிணறுகளின் வழியாகப் பருகுவதற்கும் பயிர் விளைவதற்கும் பயன்படும். நிலப்பரப்பு, பயிர், நீர்நிலை, கடல் முதலியவற்றிலிருந்து நீர் ஆவியாகி முகில் வடிவாக வளிமண்டலத்தை அடைகிறது. இதனை வள்ளுவர்,

> "துப்பார்க்கு துப்பாய துப்பாக்கித் துப்பார்க்குத்
> துப்பாய தூஉம் மழை"[11]

போன்ற குறட்பாவில் தெரிவித்துள்ளார். ஆகவே, மழைநீர், மண்ணினுள்ளும் நிலத்தின் அடியிலும் உயிர்கள், பயிர்களின் உடலில் இருந்தும் பிரிக்கவொண்ணாத உயிர்ப்பொருளாகி, மீண்டும் வளிமண்டலத்தை அடைகின்றது. இது நீர்மஇயல் சுழற்சி என்ற அறிவியல் உண்மையினைப் புலப்படுத்தியுள்ளது.

இவ்வதிகாரத்தின் மூன்றாவது குறட்பாவில், 'பெய்யவேண்டிய காலத்தில் மழை பெய்யாது ஒழியின், உயிர்கள் பசியினால் வாடும்' எனக் கூறப்பட்டுள்ளது. நிலப் பரப்பினைவிட மூன்று மடங்கு பரவி விரிந்துள்ள கடல்நீர் பல உயிர்கள் வாழ்வதற்கு

நிலைக்களன்களாக இருந்தும் கடல்நீர் பயிர் வளர்ச்சிக்கு உதவாது. எனவே, கடலில் இருந்து உருவாகும் மேகம் - மழை ஆகியவையே உயிர்களுக்கு உறுதுணை என வலியுறுத்தப்பட்டுள்ளது.

மழைபொழிவது குறையுமானால் உழவுத் தொழில் நடைபெறாது; உயிர்கள் துன்புறும் என்று நான்காவது குறளில் நவிலப்பட்டுள்ளது. மழைவளம் குன்றியபோது, மக்கள் நலம் கெடும். மழைவளம் பெருகிய போது மக்கள் பன்நலம் பெறுவர் என்பதால் மழையினது இன்றியமையாமை தெளிவாகிறது.

மேகம் துளிப்பது நின்றால் புல்லும் வளராது என்றமையால் மழையின்றேல் மிகவும் சிறிய பயிரான புல் முதல் அனைத்துப் பயிர்களும் வளரா என்று உணர்த்தினார். ஆறாவது குறளில் உள்ள விசும்பு என்பது மேகத்தைக் குறிப்பதாயிற்று. மழைத்துளி, பனித்தூள், நுண்ணிய துளிகள், தூறல் என்றும் மழைத்துளியின் விட்டத்தின் அடிப்படையில் வகைப்படுத்தப்படும். சிறு குழந்தை தொடர்ந்து அழுவதனை – விசும்புதல் என்பது போல, நுண்ணிய மழைத்துளிகள் விழுவது ‘விசும்பு’ எனப்பட்டது. இக்குறளில் உள்ள விசும்பு என்பது மழைத்துளி வகைப்பாட்டு அறிவியல் உண்மையாகும்.

ஏழாவது குறளில் பரப்பும், ஆழமும் ஒருங்கே அமைந்த கடலின் பேரளவு விளக்கப்பட்டுள்ளது. மழைபொழிவது குறையுமானால் இம்மாபெரும் கடலின் அளவு குறைந்து, கடல்வாழ் உயிரினங்களின் பெருக்கமும் கடலில் இருந்து பெறப்படும் மணி, முத்து, கிளிஞ்சல், சங்கு, மீன் முதலியவையும் குறையும். கடல்நீர் ஆவியாகி மேகம் உண்டாகி மழை பெய்வதற்கு உதவுவது. இத்தகைய கடலுக்கும் மழை தேவை என்பது தெளிவு. கடலின் பரப்பு மிகுந்திருப்பதற்கு ஏற்ப அங்கு பெய்யும் மழையும் மிகுதி.

எழிலி என்று மேகம் குறிப்பிடப்படுகின்றது. நூல் மேகம் (Cirrus), அடுக்குமேகம் (Stratus), குவிந்த மேகம் (Cumulus), கார்மேகம் (Nimbus) என மேகம் நான்கு வகைப்படும். நூல்மேகத்தில் நீர்திவலைகள் குறைவு, நீர்த்துளிக்ள செறிவதனைப் பொறுத்து அடுக்கு மேகம் ஆகி, குவிந்த மேகமாகிப் பின்னர் அது முதிர்ந்து கார் மேகம், அதாவது எழிலியாக உருவாகும். கார்மேகம் நீர்த்துளிகள் மிகுந்து நிலப்பரப்புக்கு அண்மையில் இயங்குவது; குளிர்ந்த காற்றுப்பட்டதும் இதிலுள்ள நீர்த்திவலைகளின் எடை கூடுதலானதும் விழுந்து பெருமழை பெய்யும். இம்மேகம் தடித்துக் கறுத்துக் காண்போர் மருளும் வண்ணம் உள்ளது. ஆயினும், மிகுந்த மழை பொழிந்து நாடும் மக்களும் செழிப்பெய்துவார் என்பது கருதி இதனை எழிலி என்று கூறியது குறிப்பிடத்தக்கது.

கடற் பரப்பிலிருந்து ஆவியான நீர், வான வெளியில் வெப்பம் மிகுந்த பகுதியினை நோக்கி நகரும்போது மேகத்திலுள்ள நீர்த்திவலைகளின் பருமனும், எடையும் மிகுந்து மேகம் முதிரும். மழை பொழிவதில் கடலினது பங்கும், மேகத்தின் பங்கும் நெருங்கிப் பிணைந்துள்ளது இதனால் விளங்கும்.

பல குறட்பாக்களில் மழை பொழிவதனையும் அதன் இன்றியமையாமையினையும் இயம்பியபின், மழை பொய்த்தகாலை நிகழும் விளைவுகளை விளக்குகின்றார். மக்கள் கடவுளை வழிபடுதற்கு அவர்கள் வளமும், நலமும் பெற்றிருத்தல் வேண்டும். மழை பொய்த்தபோது மக்கள், பசி, பட்டினியினால் வாடி வறுமை நிலவும் நிலையில் வறியவர்களுக்கு ஈவதும், கடவுளை வழிபடுவதும் அரிதாகும்; தவம் செய்வதும், தவத்தால் உயர்ந்த பெரியோர்களுக்கு உதவும் அறச்செயல்களும் நடைபெறாது.

இவ்வதிகாரத்தில் மழை பெய்வதனை ‘வான் சிறப்பு’ என்றே கூறப்பட்டுள்ளது. வானிலிருந்து மழையானது பலவிட்டமுள்ள துளிகளாக மழைத்துளி, ஆலங்கட்டி மழை, பனித்தூள், நுண்துளிகளான தூறல் என்றவாறு பொழிகின்றது. இமயமலையின் உயர்ந்த பகுதியல் பஞ்சு போலப் பனிப்பொழிவு நிகழும். எனவே, வானவெளியிலிருந்து விழும் நீர்த்துளிகள் வடிவங்கள் அனைத்தையும் உள்ளடக்கியவாறு இதற்கு ‘வான்சிறப்பு’ என்று பெயரிட்டது வள்ளுவரின் ஆழ்ந்த அறிவியல் புலமைக்குச் சான்றாகும்.

விண் இன்று பொய்ப்பின், புயல் என்னும் வாரி வளங்குன்றிக்கால், விசும்பின் துளி வீழின் அல்லால், தடிந்தெழிலிதான் நல்தாகி விடின், வானம் வறக்கு மேல், வானம் வழங்காதெனின் என்றும் ஆறு குறள்களில் மழை பொய்ப்பது, குன்றுதல், துளிவிழாதது, மேகம் நல்காமை, வறளுதல், வானம் வழங்காமை ஆகிய சொற்கள் இடம்பெறுகின்றன.

உலகின் ஒவ்வொரு பகுதியிலும் மழை பொழியும் அளவு, தீவிரம், காலநீட்சி என்பவை நிலவுலகில் அது அமைந்துள்ள பாங்கினால் அமையும். சான்றாகத் தமிழ்நாட்டின் ஆண்டு சராசரி மழை 900 மி.மீ. ஆகும். தொடர்ந்து ஐந்தாண்டுகளைக் கருதுவோமானால், ஓராண்டில் இயல்புக்குச் சற்று மிகுதியாகவும், இரு ஆண்டுகளில் 100 விழுக்காடும், ஓராண்டில் 70 விழுக்காடும், ஓராண்டில் 50 விழுக்காடும் மழை பெய்கின்றது. எங்குமே மழை முற்றிலும் பெய்யாது போவதில்லை. ஓராண்டில் பெறவேண்டிய மொத்த மழை பெய்தபோதிலும், அதன் பரவலும் தீவிரமும் மாறுவதால், ஒரு மழைக்கும் அதனையடுத்துப் பெய்யும் மழைக்கும் உள்ள இடைவெளி இருவாரங்களுக்கும் மிகுந்த நிலையிலும் பயிர் வளர்ச்சி குன்றும்.

உலகின் பல பகுதிகளிலும் வளமையாகப் பெய்ய வேண்டிய அளவு மழை பெய்கின்றது. பருவ காலம் தாழ்ந்தும் முந்தியும் சீரற்ற பரவலும் தீவிரமும் மழை பொழிவதன் குறைபாடுகள். இதன் விளைவாகப் பயிர் செழித்துவளர்ந்து வேண்டிய பலனளியாது. ஆகவே, மழை பொய்ப்பது என்பதையும் அது தொடர்பான பல சொற்களையும் இயல்பாகப் பெய்ய வேண்டிய மழை. காலந்தாழ்ந்தும், அளவினால் குறைந்தும் பெய்வதைக் குறிப்பதாகக் கொள்வதே பொருத்தமாக இருக்கும். வள்ளுவப் பெருந்தகை வாழ்ந்த காலத்திலும், இக்காலத்தில் காணப்படுவது போன்றே மழை குறைவது, சீரற்ற பரவல் என்பவை நிகழ்ந்தன என்பது இதன் வழி அறியக் கிடக்கின்றது.

'செங்கோன்மை' என்ற அதிகாரத்தில்,

> "வானோக்கி வாழும் உலகெல்லாம் மன்னவன்
> கோனோக்கி வாழும் குடி"[12]

எனப்பட்டது.

உலகில் உள்ள உயிர்கள் யாவும் வானின்று வழங்கும் மழையை நம்பி வாழும். நாட்டில் வாழும் குடிமக்கள் அந்நாட்டு அரசனது நல்லாட்சியினை நம்பி வாழ்வர். மழையில்லாது போனால் வேளாண்மை செய்ய இயலாது. உணவு உற்பத்தி நடைபெறாது. ஏனைய தொழில்களும் முடங்கும். இதனைப் போன்று நல்லாட்சியமையா வழி மக்கள் வளமுடன் வாழ இயலாது. மழையின் சிறப்பும் நல்லாட்சியும் இன்றியமையாதவை என்பது கூறப்பட்டது.

'கொடுங்கோன்மை' என்ற அதிகாரத்தில்,

"துளியின்மை ஞாலத்திற் கெற்றற்றே வேந்தன்

அளியின்மை வாழும் உயிர்க்கு"[13]

என்று கூறப்பட்டது.

இங்கு, துளி என்பது மழையினைக் குறிக்கும். வையத்து உயிர்கள் வளமுடன் வாழ மழை பெய்து உணவு உற்பத்தியாக வேண்டும். அரசர் குடிமக்களை அன்பாக அரவணைத்துக் காப்பது நானிலத்தில் மழை பெய்வதற்கு உவமையாக்கப்பட்டது.

'காமத்துப் பாலி'ல் 'தனிப்படர் மிகுதி' என்ற அதிகாரத்தில்,

"வாழ்வார்க்கு வானம் பயந்தற்றால் வீழ்வார்க்கு

வீழ்வார் அளிக்கும் அளி"[14]

எனப்பட்டது.

தம்மையே நினைத்து வாழும் காதலியைப் பிரிந்து பொருளீட்டும் பொருட்டு அவளைப் பிரிந்து சென்று திரும்பிய காதலன் தலைவிக்கு அளவுடன் செய்யும் தலையளியானது, மழையை நம்பி வாழும் பயிர்களுக்குத் தக்கஅளவில் வானம் பொழிந்ததற்கு ஒப்பாகும். தலைவன் தலைவிக்குச் செய்யும் தலையளியும் மழைப் பொழிவும் உவமையாக்கப்பட்டன. பயிர்கள் வளர்ந்து பலனளிக்க மழை வேண்டுவது இயல்பு. இம்மழையும் அளவுடன் பெய்ய வேண்டும். அளவுக்கு மிகையாகவோ காலந்தவறியோ பெய்தால் விதைத்த பயிரில் கதிர் தோன்றி மணிகள் உருவாகாது. இதனால் பயிர் விளைச்சல் குறையும். இது போலவே, மார்கழித் திங்களின் கடைசியில் மழை பொழிந்தால், மாமரத்தில் மலர்கள் தோன்றுவதற்குப் பதிலாக இளம் தளிர்கள் உண்டாகி, அவ்வாண்டில் மாங்கனி விளைச்சல் பெருகாது.

பயிர்களுக்கு இன்றியமையாத மழையும் அளவுடன் பெய்வதே தக்க விளைச்சலுக்கு ஆதாரம். இது கூடுவதும் குறைவதும் விளைச்சலுக்கு ஊறாக அமையும் என்ற உழ்இயல் கருத்து புலப்படும்.

'புலவி' என்ற அதிகாரத்தில்,

> "ஊடிய யவரை உணராமைஅ வாடிய
> வள்ளி முதலரிந் தற்று"[15]

எனப்பட்டது.

முன்னர் கூடிய பரத்தையரை இனிக் கூடுதல்' என்று உணர்த்தி அவரது தொடர்பினை விட்டொழிப்பது, நீரின்றி வாடிய கொடியின் அடியை அறுத்தல் போலாகும். மேலும் இவ்வதிகாரத்தில்,

> "நீரும் நிழலதேஇனிதே புலவியும்
> வீழு நர்கண்ணே இனிது."[16]

என்று கூறப்பட்டது.

வாழ்வதற்கு இன்றியமையாத நீரும், நிழலில் குளிர்ச்சி மிகுந்து பருகுவதற்குப் பக்குவமாக இசைவாக மகிழ்ச்சியளிப்பது அன்புடையவரது புலவிக்கு ஒப்பாகும். மரம், செடி, கொடிகள் மலிந்த இடத்தில் நிழல்படர்ந்து அச்சுற்றுப்பகுதி முழுதும் குளிர்ச்சியைப் பரப்பும். மரம், செடிகள் அற்ற பகுதியில் வெப்பம் மிகுந்தும், அடர்ந்த கானகம், தோப்பு மிக்க பகுதிகளில் வெப்பம் குறைந்தும் இருப்பது இயல்பு. இவ்வாறு தாவரங்கள் செழித்து வளர்ந்துள்ள பகுதியில் வெப்பம் தணிந்திருப்பது, நுண் தட்பவெப்பம் (microclimate) என்னும் வானியல் உண்மையாகும்.

'ஊடலுவகை' என்ற அதிகாரத்தில்,

"புலத்திற்புத் தேள் நாடுண்டோ நிலத்தொடு
நீரியைந் தன்னார் அகத்து"[17]

எனப்பட்டது.

நீர், நிலத்தையடைந்ததும் அதனுடன் ஒன்றிக் கலந்துவிடும் தன்மை போல் மனம் ஒப்பிய தலைவியும், தலைவனும், புலத்தல் பேரின்பமளிப்பது. நீர் நிலத்துடன் சேர்ந்து, மண் துகள்களுடன் கலந்து இவ்விரண்டும் பிரிக்கவொண்ணாதவாறு இணைந்து நீர், நிலத்தின் இயல்பை ஏற்கும். இங்கு குறுந்தொகைப்பாடல் நினைவு கூறத்தக்கது.

"யாயும் யாயும் யாராகியேரோ
வெந்ததையு நுந்தையுமெமம்முறைக்கேளிர்
யானும் நீயுமெவ்வழியறிதுஞ்
செம்புலப் பெய்நீர் போல
வன்புடை நெஞ்சந்தாங் கலந்தனவே"[18]

தலைவனும், தலைவியும் காதல் வயப்பட்டு இணைந்த நிலையில் தலைவன் தலைவியை நோக்கி 'நீ எங்கோ பிறந்தாய், நான் வேறெங்கோ பிறந்தேன். உன் பெற்றோர்களும், என் பெற்றொர்களும் வேறுபட்டவர்கள். எனினும் காதலால் நாம் கூடியது நீரும் செம்மண் நிலமும் இணைவதற்கு ஒப்பாகும்' என்று கூறியுள்ளமை இக்குறளின் அடியாக எழுந்தது எனலாம்.

நீர் மண்ணுடன் கலந்ததும், மண் துகள்கள் இடைவெளிகளில் பரவி, மண்ணின் இயற்பியல் பண்புகளும், வேதியியல் பண்புகளும் மாறுகின்றன என்ற மண்ணியல் செய்தி இங்கு விளக்கம் பெறுகின்றது.

"ஊருணி நீர்நிறைந் தற்றே உலகவாம்

பேரறி வாளன் திரு"[19]

எனப்பட்டது.

உலகியலை நன்கு உணர்ந்து பெருமையுடையவரது செல்வம், ஊருணியில் நீர் நிறைவதற்கு ஒப்பாகும் என்று கூறப்பட்டுள்ளது. உலகெங்கிலும் மக்கள் குடியிருப்புகள் நீர் வளத்தின் அடிப்படையில் தோன்றியவை. இதனாலேயே 'ஆறில்லா ஊருக்கு அழகு பாழ்' என்ற முதுமொழி எழுந்தது. ஆறு இல்லாத பகுதியில் மக்கள் வாழ்வதற்கு அடிப்படையான நீரைப்பெறுவதற்கு ஊரின் தாழ்ந்த பகுதியில் மண்ணை அகழ்ந்து, ஊருணி அமைப்பது நீர்வளம் மேம்படுத்தும் அறிவியல் செய்தியாகும்.

'கல்வி' என்ற அதிகாரத்தில்,

"தொட்டனைத் தூறு மணற்கேணி மாந்தர்க்குக்

கற்றனைத் தூறும் அறிவு"[20]

எனப்பட்டது.

ஓரளவு கல்வி கற்றதுடன் நில்லாது. அதனைத் தொடர்ந்து கற்றுப் பெருக்கிக் கொள்ள வேண்டுமென்றார். மணலில் உள்ள துகள்களின் பருமன் பெரிதாக இருப்பதனால் அவற்றின் துகள் இடைவெளி அகன்றிருக்கும். இவ்விடையில்

தங்கும் நீரின் அளவானது நுண் நய மண்துகள் இடைவெளியில் உள்ள நீரை விட மிகுதி. கிணறு தோண்டும்போது மணற்பாங்கான படிவிலேயே நீர் மிகுதியாக காணப்படும். ஆகவே, மணல் படிவு கிடைக்கும் வரை கிணற்றின் ஆழம் கூடுதலாக்கப்படும். திறந்த கிணறு அமைப்பதிலும், துளைக்கிணறு அமைப்பதிலும் இவ்வுத்தி மேற்கொள்ளப்படுகின்றது. மணலே சிறந்த ஊற்றுக்கண் ஆகும் என்ற நீர்மயியல் உண்மை கூறப்பட்டமை குறிப்பிடத்தக்கது.

'சிற்றினம் சேராமை' என்ற அதிகாரத்தில்,

'நிலத்தியல் பால்நீர் திரிந்தற்றாகும் மாந்தர்க்

கினத்தி யல்பதாகும் அறிவு'[21]

எனப்பட்டது.

வானின்று பொழியும் மழைநீர், நிறம், சுவையின்றித் தூய்மையானது. வளிமண்டலத்திலுள்ள சிறிதளவு தழைச்சத்துக் (nitrogen) கலந்த மழை நீர் நிலத்தில் விழும். நிலத்தில் விழுந்த மழை நீர் மண்துகள்களுடன் கலந்து மண்ணின் நிறத்தை அதாவது, செந்நிறம் அல்லது கரிய நிறத்தை ஏற்கும். இதனுடன் மண்ணில் பெதிந்துள்ள காரப் பொருள்களான சுண்ணக்கரிக்கன், சோடியக்கரிக்கன், அமிலப் பொருள் ஆகியவற்றுடன் கலந்து நீரின் வேதியியல் தன்மைகளும், இயற்பியல் தன்மைகளும் மாறிவிடும். இதனால் உவர், காரமண், உவர்க்காரமண், அமில மண் என்பன தோன்றும். இம்மண் வகைகளில் உப்புச் செறிவினால் பயிர் வளர்ச்சி குன்றிவிடும் என்பது மண்ணியல் உண்மையாகும்.

இயல்பாகவே நல்ல பண்புள்ளவர் தீயவருடன் சேர்ந்தால் அவரது அறிவு தீயவரது தன்மையைப் போலாகிவிடும். எனவே, தீயவர்களுடன் சேர்வது தவிர்க்கப்பட வேண்டுவது. இதனை உணர்த்தும் முகமாக நீர் நிலத்துட.ன் சேர்ந்து மாறுவதை உவமையாக்கினார். பயிர் உற்பத்தி, நீரும் நிலமும் இணைந்த வழியே நிகழ்வதாகும். இவ்விரண்டில் ஒன்றான நிலத்தின் சீர்மை குன்றியபோது பயிர் விளைச்சல் வீழ்ச்சியடையும் மனிதர் மற்றவருடன் கூடி அளவளாவி இனமாக வாழ்வதே இயல்பு. மனிதன் நாடும் இனம் நல்ல தன்மையுடன் அமையாத சூழ்நிலையில், அவன் அறிவு தீயவர் சேர்க்கையினால் நலமிழந்து விடும். ஆக, மனிதன் மாண்புறுவதற்கு நல்லவருடன் கூடுவது அவசியம் என்பது நடத்தையியல் உண்மையாகும்.

'சுற்றம்தழால்' என்ற அதிகாரத்தில்,

> "அளவளா வில்லாதான் வாழ்க்கை குளவளாக்
>
> கோடின்றி நீர்நிறைந் தற்று"[22]

எனப்பட்டது.

அரசன் சிறப்புடன் வாழ்வதற்குச் சுற்றத்தார் துணை வேண்டுவது போல, மக்கள் அனைவருக்கும் சுற்றத்தார் இருப்பது அவசியம். இச்சுற்றத்துடன் உள்ளம் ஒன்றிக் கலந்து அளவளாவி மகிழ்வது குடும்பத்திற்கு அமைதியளித்து, அரணாகவும் உதவும். சுற்றத்தார் அனைத்து நிலைகளிலும் உற்ற துணையாக இருப்பர்.

ஓடும் மழை நீரைச் சேமிக்கக் கரையமைக்கப்படுகின்றது. மழைக்காலம் சென்ற பின் இந்நீர், மக்கள், கால்நடைகள், பாசனம் முதலியவற்றுக்குப் பயன்படும். இத்தோடன்றிச் குளம் அமைந்த பகுதியைச் சுற்றிலும் வெப்பம் குறைந்து,

குளிர்ச்சியாக இருக்கும். இங்கு கோடு என்பது குளத்தின் கரையாகும். கரையே குளத்தில் நீர் நிறைவதற்கு ஆதாரமாகும். நீர் என்ற செல்வம் சேரவும், அது நிலைத்து நிற்கவும் கரையமைக்க வேண்டுவது போலவே வாழ்க்கையில் செல்வம் சேர்ந்து நலமுடன் வாழச் சுற்றத்தார் அமைவது அவசியம். சுற்றமில்லாதவருக்குச் செல்வம் சேராது; சேர்ந்த வழியும் அது சரிந்துவிடும் என்பது உணர்த்தப்படுகின்றது. நீர்வளம் பெருக்கும் உத்தி இக்குறளில் அடங்கியுள்ளது.

'ஊக்கமுடமை' என்ற அதிகாரத்தில்,

"வெள்ளத் தனைய மலர்நீட்டம் மாந்தர்தம்
உள்ளத் தனைய துயர்வு"[23]

எனப்பட்டது.

குளம், குட்டைகளில் வளரும் தாமரை, ஆம்பல், அல்லி போன்ற செடிகளின் மலர்கள் நீர்பரப்பின் மீது தவழ்வதற்கு அவற்றின் தாள்கள் தாங்கலாகும். நீரின் உதவியாலேயே இவை நீர்ப்பரப்பிற்கு மேல் வருகின்றன. ஆகவே, நீர் இவை வளர்வதற்கு உதவுவதுடன் அவற்றின் மலர்களை வண்டுகள் நாடும் பொருட்டு ஏந்துகின்றது.

மழை பெய்யத் தொடங்கிய சில வாரங்களில் இச்செடிகள் வளர்ந்து மலர்ந்து இளவேனில் காலம் வரை பசுமையாகவே இருக்கும். குளத்து நீரின் ஆழத்தை ஒத்து மலர்களின் உயரம் அமைவது அச்செடிகளின் செயலியல்

பண்பாகும். இது தாவரவியல் உண்மை. மக்கள் சிறப்புடன் வாழ்ந்து முன்னேறுவதற்கு அவர்களது மன ஊக்கமே அடிப்படை என்பதை நீர்ச்செடிகளின் வளர்ச்சிக்கு ஒப்பிடுகின்றார்.

'நாடு' என்ற அதிகாரத்தில்,

"தள்ளா விளையுளும் தக்காரும் தாழ்விழாச்

செல்வருஞ் சேர்வது நாடு"[24]

எனப்பட்டது.

விளைபொருள்களை நிறைய உற்பத்தி செய்யும் உழவர்களும் அறநெறியில் ஒழுகுவோரும் குற்றம் நீங்கிய செல்வமுடையவர்களும் ஒருங்கே கூடியது நாடு எனப்பட்டது. விளையுள் என்பது விளைபொருள் உற்பத்தியினைக் குறிப்பிடும். பயிர்கள் விளைந்து பல பொருட்களும் மக்களுக்குக் கிடைப்பதனால் அவர்கள் வறுமையின்றி மனநிறைவோடு இருப்பர். வேளாண்மை முதன்மையான தொழில்; பிற தொழில்கள் யாவும் வேளாண்மைக்குத் துணை செய்வன. இக்கருத்து 'உழவு' என்ற அதிகாரத்தில் வலியுறுத்தப்படுகின்றது. ஒரு நாட்டின் பொருளாதாரத்திற்கு வேளாண்மை உற்பத்தி அடித்தளம்., இத்தகைய நாட்டில் அறவோரும் செல்வமும் வாழும் சூழ்நிலை உண்டாகி அனைத்து மக்களும் அமைதியுடன் வாழ்க்கை நடத்துவர். இதுவே 'நாடு' என்ற தகுதிபெறும்.

மேலும் இவ்வதிகாரத்தில்,

"இருபுனலும் வாய்ந்த மலையும் வருபுனலும்

வல்லரணும் நாட்டிற்கு உறுப்பு"[25]

எனப்பட்டது.

இங்கு, புனல் என்பது நீர். இது மேனீர், கீழ்நீர் என இருபாலானது. நிலத்தில் விழுந்த மழை நீர், நிலப்பரப்பினுட் சென்று மண் துகள்களின் இடைவெளிகளை நிறைத்தபோது மண் பூரிப்படையும். இந்நிலையில் மேலும் மழை பெய்யுமாயின் புவியீர்ப்பு முடுக்கத்தின் விளைவாக மண்துகள்கள் பூரிக்கும் அளவுக்கு மிகையான நீர் வடிந்து வெளியேறும். மண் பூரித்த நிலையில் மழை தொடர்ந்து பெய்தால் நிலத்திற்கு அடியில் நீர் பாய்வது குறையும்; இத்தருணத்தில் நிலப்பரப்பின் மீது நீர் செறிந்து சரிமானத்தின் ஊடே நீர் பாயும். இந்நீர் குளம், குட்டை, ஆறு, கடல் முதலியவற்றை அடையும். எவ்வாறாயினும் பெய்த மழையின் ஒரு பகுதி நிலத்தின் ஆழ்ந்த பகுதியின்பால் சென்று நிலநீராகச் சேமிக்கப்படுகின்றது. ஆகவே, பெய்த மழை மேற்பரப்பு நீராகவும், நிலப்பரப்பின் கீழ் நிலநீராகவும் உள்ளது. எனவே, இரு புனல் எனப்பட்டது நீர்மப்புவியியல் உண்மையாகும்.

'புனல்'என்பது, கேணி, ஊருணி, குளம், ஏரி, ஆறு போன்ற நீர் ஆதாரங்களையும் உள்ளடக்கியது. மலையானது அடர்ந்த கானகம் கொண்டது. இக்கானக நிலப்பரப்பின் மீது விழுந்த இலை, சுள்ளி, விலங்குகளின் எச்சம், உடற்பகுதிகளும் மக்கி அப்பரப்பு பஞ்சுபோல் மெத்தென இருக்கும். பெய்த மழையின் ஒரு பகுதியைப் பஞ்சு போன்ற கானகப்பரப்பு உட்கொண்டு நீரை சேமிக்கும். மழைகாலத்திற்குப் பிறகு இந்நீர், மலையின் மேற்பகுதியிலிருந்து கீழ்ப்பகுதிக்குப் புவியீர்ப்பு ஆற்றலினால் பாயும். இதனால் மலை, நீர்ச்செல்வம் வாய்ந்ததாயிற்று. எனவே மலையும், அடர்ந்த கானகமும் நீர்வளம் மிக்கவை.

இப்பகுதியை மழைக்காலத்திலும், அதனையடுத்து கோடை காலத்திலும் நீர் வழங்கும் ஆற்றல் உடையது என்று கூறியது நீர்வள இயல் பற்றிய விளக்கமாகும்.

நீர் நிலவளம் மிக்க நாடு செல்வமிக்கது. ஆகவே, அங்குள்ள மக்கள் செழிப்பில் திளைப்பர். அத்தகைய மக்கள் வாழும் நாட்டைப் பிறர் வாழ்வுத் தேடி வருவர்.

'அரண்' என்ற அதிகாரத்தில்,

"மணிநீரும் மண்ணணும்மலையும் அணிநிழற்

காடும் உடைய தரண்"[26]

ஒரு நாட்டிற்கு நீர், மண், மலை, காடு என்பதை அரண்களாகும். இவற்றில் மழை நீர் என்பது தெளிந்த நீரைக் குறிக்கும். வண்டல் அற்ற நீரே தெளிவாக இருக்கும். நீரானது நிலப்பரப்பின் மீது வழிந்தோடும்போது ஒரு குறிப்பிட்ட தொலைவு வரை தெளிவாக இருக்கும். இதனையடுத்து நீரின் விரைவு கூடுதலாகி மண் இம்மிகளை நீக்கும் ஆற்றல் பெறுகின்றது. நீர், மண்ணைக் கொண்டு செல்லும். மண் இம்மிகள் கலந்த நீர் தெளிவின்றிக் கலங்கியிருக்கும். நீரின் விரைவு மிகுதியானபோது மிகுதியான மண்ணை அடித்துச் செல்லும். சேறான மண்ணைத் தள்ளிச் செல்லும் அளவு, நீரின் இயக்கம் தடைபட்டு அதனுடன் இயங்கிய வண்டல் அவ்விடத்தில் படிந்துவிடும். வண்டல் மிகுந்த நீர், குளம், ஏரி, ஆறு போன்றவற்றில் வண்டலைக் குவித்து அவற்றின் கொள்ளளவையும், பயன்பாட்டினையும் குறைத்துவிடும். பயிர் வளரும் நிலத்தின் வழியாக நீர் பாயும்போது, நீரின் விரைவு தடைபடுவதால், மண் இம்மிகள் விடுபட்டு மண் அரிமானம் நிகழும் வாய்ப்புக் குறைவு. ஆகவே, இந்நிலத்திலிருந்து வரும் நீர் தெளிந்து பளிங்கு போலிருக்கும்.

இதுபோன்ற புல்வெளியில் இருந்து வரும் நீரும் தெளிவாக இருக்கும். மண் அரிமானம் ஏற்படாதவாறு நிலத்தில் பயிர் செழித்திருப்பதால் அங்கிருந்து வழியும் நீர் தெளிந்து மணியென ஒளியுள்ளதாயிற்று.

மழைக்காலத்தில் மேற்பரப்பு நீரினால் ஆற்றில் வெள்ளம் பெருகும். ஆறு உற்பத்தியாகும் மலைப்பகுதியில் பரவியுள்ள கானகமும், ஆழ்ந்த மண் உள்ள நிலப்பரப்பும் மழைநீரைத் தம்மகத்தே உட்கொண்டு பூரித்திருக்கும். மழைக்காலம் சென்றபின் கானகமும் மண்பரப்பும் உறிஞ்சிச் சேமித்து வைத்த நீர், மலைப்பகுதியின் கீழ்க்கையினை நோக்கிச் சீராகப் பாயும். இதன் பலனாக ஆற்றில் ஆண்டு முழுவதும் நீரோட்டம் தொடரும். இது ஆற்றுவழிப் போக்குவரத்தும், கழனியில் பயிர் உற்பத்திக்கும் பயன்படும். கோட்டையைச் சுற்றி அமைந்த அகழியில் ஆற்றுநீரை நிறைக்கவும் வற்றாது பாயும் ஆறு உதவும்.

இது கருதியே, ‘வான் பொய்த்தபின்தான் பொய்யாக் காவிரி’ என்று காவிரியாற்றின் நீர்வளம் சிறப்பிக்கப்பட்டது. காவிரி ஆறு தோன்றும் குடகு நாட்டிலுள்ள அடர்ந்த காடும் வளமான நிலமும் உட்கொண்ட மழை நீர் மழைக்காலத்திற்குப் பிறகும் நீரோட்டம் நல்கும் பெற்றியுடையன.

மழையே நீர் வளத்திற்கு ஆதாரம். இது மழையாகப் பெறப்படுவது. இது சிறிது தாமதமாகப் பெய்தாலும் குறைவாகப் பெய்தாலும் அடர்ந்த கானகமும், ஆழ்ந்த மண்ணும் இறுத்திவைத்துள்ள நீர் பாய்வதால் ஆற்றில் நீரோட்டம் தொடர்ந்து நிகழும். வான் பொய்ப்பினும் என்பது முற்றிலும் பெய்யாது பொய்த்த நிலையன்று; இது இயல்புக்குக் குறைவாகப் பெய்யும் மழை என்று பொருள்படும்.

மணல், வண்டல், களி என்ற மூன்று கூறுகளும் ஒத்தவாறு கலந்த மண்ணே பயிர்கள் அனைத்தும் செழித்து வளர்வதற்கு உகந்த இயற்பியல் பண்புகளும் வேதியில் பண்புகளும் கொண்டது. இத்தகு மண்ணே மண் அரிமானம் ஏற்படாது பயிர் வளர்ச்சிக்குச் சிறந்தது. உயர்ந்த மலைத்தொடர் வானில் வலம் வரும் மேகத்தைத்

தடுத்து மழை பொழியச் செய்ய வல்லது. அடர்ந்த கானகமும் மேகத்தை ஈர்க்கும் தகைமையுடையது. கானகம் பல விலங்குகளுக்குப் புகலிடம் அளிப்பது. நீரரண், நிலஅரண், மலையரண், கானகஅரண் என்பன பகைவர்கள் எளிதில் அணுகாது நாட்டைக் காப்பன. நீர்வளம், மண்வளம், மலைவளம், கானகவளம் பெருகிய நாட்டில் செல்வம் கொழிக்கும். இத்தகைய நாட்டு மக்கள் வறுமையின்றி வளமாக வாழ்வது பகைவர் நாட்டினுள் புகாது தடுக்கும் சமுதாய அரணாகும். இவ்வரண்கள் வாய்த்த நாட்டின் மீது பகைவர் போர்தொடுக்கத் துணியார்.

எளிமை கருதிப் பிற தொழில்களை மேற்கொண்டோரும் உழவுத் தொழிலே சிறந்தது என்று உண்மையினை உணர்ந்து அதனை ஏற்கும் சிறப்புடையது உழவுத் தொழில். இதன் வழியாகவே உணவு உற்பத்தி பெறப்படுவதனால், பிறதொழில் புரிவோரும் இதனைச் சார்ந்தே இருப்பர். ஆகவே, இதுவே தலையாய தொழிலாகும்.

உழவுத் தொழில் புரிவோர், பிற தொழில் புரியும் அனைவரையும் காப்பதால் உலகம் என்ற தேருக்கு இத்தொழில் அச்சாணியாக விளங்குகின்றது.

உழுபவர் பயிர் உற்பத்தி செய்து தாமும் உண்டு. பிறதொழிலில் ஈடுபட்டவர்களுக்கும் உணவளிக்கின்றனர். ஆகவே, இவர்கள் தமக்குரியராய் வாழ்கின்றனர்; ஏனையோர் அவரைச் சார்ந்துள்ளனர்.

பயிரிடும் உழவர் வேண்டுபவருக்கு அளிக்கும் ஈகைக்குணம் படைத்தவர். இங்கு அரசர் என்று குறிப்பிட்டதை – நாடு – அரசு எனக் கொள்வதே தற்கால அரசியல் முறைமைக்குப் பொருத்தமுடையது. உழவர் விளைபொருள் உற்பத்தியைப் பெருக்கி அரசுக்கு அளிப்பவர்.

உழவர் அவர்களுக்கு வேண்டிய விளை பொருளையும் உணவுப் பொருளையும் தாமே விளைப்பவராதலால் பிறரிடம் இரந்து பெறும் நிலையிலின்றிப் பிறர்களித்து உதவும் நிலையிலுள்ளனர். எனவே, உழவுத்தொழில் முடங்கினால் இல்லறத்தில் உள்ளவர்களுக்கு 'வேண்டிய உணவு உற்பத்தியும்' துறவறம் பூண்டவர்கள் துறவறத்தின் கண் நிற்பதும் நடைபெறாது ஒழியும். இதனால், இம்மை மறுமைப் பயன்கள் கைகூடாது போகும்.

'வான்சிறப்பு' என்ற அதிகாரத்தின் எட்டாவது குறளில் வானம் பொழியாத போது தேவர்களுக்கும் சான்றோர்களும் செய்யப்படும் வழிபாடுகள் நடைபெறாது என்று கூறியது இங்கு நினைவு கூரற்குரியது. மழை தவறாது பெய்தபோது அறவொழுக்கத்தினால் ஈட்டிய பொருளைத் தக்கவர்களுக்கு ஈவதும் தவம் மேற்கொள்வதும் இயலும். தக்கவாறு மழை பெய்யாது ஒழிந்தபோது மக்களது வாழ்வு சிறப்பாக அமைவது அரிது என்று கூறப்படுகின்றது. மழை பொழிவதனைப் பொறுத்தே உழவுத்தொழில் அதற்கு ஏற்றவாறு நடைபெறும். நீரும், நிலமும் நலமுடன் அமையும்போதே வேளாண்மை சிறப்பாக இருக்கும் என்பதனால் வான்சிறப்பினை ஓதிச் சிறப்பித்த கருத்துக்கு அடியொற்றியபடியே உழவுத்தொழிலையும் வள்ளுவப் பெருந்தகை விளக்கியுள்ளார்.

மண்ணைப் பண்படுத்துவதும். உழுவதைக் காட்டிலும், எரு விடுவது சிறப்பு என்றும் வாய்க்கால் அமைத்து நீர் பாய்ச்சுவது, களையின்றிப் பயிரைக் காப்பது, கால்நடைகள் மேயாது வேலியிட்டுக் காத்தல் போன்ற வேளாண்மை நுட்பங்கள் வலியுறுத்தப்படுகின்றன.

இதன் பின்னர் நிலம் உடையவரது கடமை உணர்த்தப்படுகின்றது. நிலம் உடையவர் அவரது நிலத்தையும் அதில் வளரும் பயிரையும் நாள்தோறும் கவனித்துத் தேவையான பணிகளைத் தவறாது செம்மையாக ஆற்ற வேண்டும். அவ்வாறு செய்யாது சோம்பியிருந்தால் மனைவி ஊடி வெறுத்து ஒதுக்குவதற்கு ஒப்பாக நிலமும் விரும்பிய பயனளியாதுபோகும். வேளாண்மை செய்வோருக்கும் அவரது நிலம் வாழ்க்கைத் துணைவிக்கு ஒப்பாகும். வாழ்க்கைத் துணைவியும், தலைவரும் மனம் ஒப்பி நடப்பது ஊடலைத் தவிர்க்க உதவுதலைப் போன்றே நிலத்தின் தன்மைக்கு ஏற்றவாறு இணக்கமாகச் செயல்பட்டால் பயிர் உற்பத்தி எவ்வித இடையூறும் இன்றிச் சிறப்பாக இருக்கும்.

வளமான நிலம் இருந்தும் அதனைப் பயன்படுத்தாது வளாயிரப்போரைக் கண்டு நிலமகள் எள்ளி நகைப்பாள் என்று சோம்பியுள்ளவர்களை இடித்துரைத்து சுறுசுறுப்புடன் நிலத்தைத் தக்கவாறு பயன்படுத்த வேண்டும் என்று அறிவுறுத்துகின்றார்.

வள்ளுவப் பெருந்தகை வாழ்ந்த காலத்தில் வேளாண்மை முதன்மையான தொழிலாக இருந்தது. தொழிற்புரட்சி, கணிபொறிப் பெருக்கம் போன்ற முன்னேற்றங்கள் நிகழ்ந்துள்ள தற்காலத்திலும் உணவுப் பொருளினையும், தொழில்களுக்கு வேண்டிய முதற் பொருளினையும் உற்பத்தி செய்வதற்கு வேளாண்மை இன்றியமையாதது. ஆகவே, வேளாண்மையே என்றும் அடிப்படையான தொழிலாக விளங்கும்.

'குடிமை' என்ற அதிகாரத்தில்

> "நிலத்திற் கிடந்தாமை கால்காட்டும் காட்டும்
> குலத்திற் பிறந்ததார் வாய்ச்சொல்"[27]

என்று ஒருவர் பேசும் பாங்கும் தரமும் அவரது குலத்தினால் அமையும் என்பதற்கு விதையிலிருந்து தோன்றும் முனையினையும் - அது முளைத்த நிலத்தையும் உவமைகளாக்கினார். வளமான நிலத்தைச் சீராகப் பண்படுத்தித் தேர்வுசெய்து விதையை ஊன்றிய போதே அது நன்கு முளைக்கும். 'விளையும் பயிர் முளையிலேயே' என்ற முதுமொழி – பயிர் செழித்து வளரும் அறிகுறியாக முளை அமையும் என்பதனால் எழுந்தது. நிலத்தில் இட்ட விதையிலிருந்து வாளிப்பான முளை தோன்றினால் இது தடையின்றி வளர்ந்து பயிராகி நல்ல விளைச்சல் தரும். நல்ல குடியில் பிறந்தவர்கள் வாய்மை, அன்பு, அறிவு, அடக்கம், கல்வி, ஒழுக்கம், இன்சொல் போன்ற நற்பண்புகளுடன் விளங்குவர். இவர்கள் வழிப் பிறந்தோர்களும் இத்தன்மைகள் உடையவர்களாக விளங்குவர். எனவே, ஒருவர் பேசும் மொழியில் இருந்து அவர் பிறந்த இனத்தின் இயல்பினை இனம் காணலாம் என்ற நடத்தையிலும் உளவியல் உண்மையும் ஒருங்கே விளங்கும்.

'நன்றியில் செல்வம்' என்ற அதிகாரத்தில்,

"சீருடைச் செல்வர் சிறு துனிமாரி
வரங்கூர்ந் தனைய துடைத்து"[28]

என்றார்.

ஈகைக்குணம் உடைய செல்வர் சிறிது காலம் வறுமையாவது உலகுக்கு ஆதாரமான மழையினை வழங்கும் மேகம், மழையினைத் தாமதமாகப் பொழிவதற்கு ஒப்பாகும். சற்றுக் காலம் தாழ்ந்து மழை பொழியினும் அது அனைத்து வகையான வளங்களையும் நல்கும்.

"வானோக்கி வாழும் உலகெல்லாம் மன்னவன்

கோக்நோக்கி வாழும் குடி"[29]

உலகத்தில் வாழும் உயிர்கள் யாவும் மழைப்பொழிவினை நம்பி உள்ளன. அதுபோல குடிமக்கள் அரசரது செங்கோன்மை, அதாவது நல்லாட்சியினால் வாழ்வர்.

"செங்கோன்மை" என்ற அதிகாரத்தில்,

"இயல்புளிக் கோலோச்சும் மன்னவன் நாட்ட

பெயலும் விளையுளும் தொக்கு"[30]

நூல்கள், கூறிய இயல்புப்படிச் செங்கோல் செலுத்தும் அரசரது நாட்டில் பருவமழை தவறாது பொழிந்து விளைபொருள் பெருகும்.

அறநூல்கள் இயம்பியதற்கிணங்க நல்லாட்சி நிலவும் நாட்டில் பருவமழை தவறாது பொழியும். இதன் பலனாக உழவுத் தொழில் சிறந்து பயிர்கள் செழிப்புற வளர்ந்து உற்பத்தி பெருகும். இங்கு ஆட்சி என்பது, நாட்டில் நடைபெறும் மனிதரது செயல்பாடு. மழை பொழிவது இயற்கையின்பாலமைந்த நிகழ்ச்சி. பயிர்கள் நன்கு விளைவதற்கு நிலம் நலமுடன் இருத்தல் வேண்டும். தேவையான அளவு மழைப் பொழிவும் வளமான நிலமும் இணைந்த பொழுதே பயிர்கள் செழித்து வளரும். ஆட்சி நன்கு அமையப் பெறின் நாட்டில் மழை பொழிவது தவறாது; இதனால் பயிர்களின் வளர்ச்சி மேம்படும். பருவமழை பெய்யத் தவறியபோது பயிர்கள் செழித்து வளராது வேளாண்மை உற்பத்தி குன்றி உணவுப் பற்றாக்குறை ஏற்படும். இச்சூழலில்

மக்களிடையே பிறர் பொருளைக் கவரும் எண்ணம் உருவாகி, ஒழுக்கம் சீர்கெடும். இத்தகைய நிலை இறைவழிபாடு, விழாக்கள் எடுப்பது, தானம் தவம் ஆகியவை நடைபெறுவதற்கு ஏற்றதன்று.

'கொடுங்கோன்மை' என்ற அதிகாரத்தில்,

> "முறை கோடிமன்னவன் செய்யின் உறைகோடி
> ஒல்லாது வானம் பெயல்"[31]

என மன்னவன் தம் செயல்களை முறை தவறி ஆற்றியபொழுது, நாட்டில் காலத்தில் பெய்ய வேண்டிய மழை பெய்யாது; இதனால் வேளாண்மை நலிந்த மக்கள் பசியினால் வாடுவர்.

'படர்மெலிந்திரங்கல்' என்ற அதிகாரத்தில் கூறியவாறு,

> "மறைப்பேன்மன் யானி ∴தோ நோயை இறைப்பவர்க்
> கூற்று நீர்போல மிகும்"[32]

என இந்நோயைப் பிறர் அறிதல் நாணிக் கண்ணீரை மறைக்கின்றேன். ஆனால், இறைப்பவர்களுக்கு ஊற்று நீர் பெருகுவது போல மிகுந்து வந்து கொண்டுள்ளது. இதன் மூலம் நிலநீர் ஊற்றுப்பெருகும் உண்மை அடங்கியுள்ளதனை அறியலாம்.

திருக்குறளுக்குப் பல அறிஞர்கள் உரையெழுதியுள்ளனர். அவ்வுரைகள் அனைத்தும் இலக்கியச் சிறப்புகளைச் சித்தரிப்பன. திருக்குறளில் காணப்படும் மேகம், மழை, நீர், நிலம், பரப்பு நீர், மண் அரிமானம் நிகழாது தெளிந்த நீர், வளமிக்க மண்,

நிலத்தைப் பண்படுத்தல், பாசனம், நட்ட பயிரைக்காத்தல், கானகத்தின் பயன், நிலத்தின் தன்மையினால் நீரின் பண்பு மாறுவது, மழை நீரைச் சேமித்தல், வேளாண்மை ஆகியவை சார்ந்த அறிவியல் உண்மைகள் மேலே விளக்கப்பட்டன.

## உழைப்பு

மோனட்டுப் பொருளியலார், பொருள் உற்பத்தி, மூலதனம் உருவாவதற்குத் துணை செய்யும் காரணிகளுள், நிலத்தை அடுத்து சிறந்த இடத்தைப் பெறுவது 'உழைப்பு' என்று கூறுவர். இதனை ஆங்கிலத்தில் Labour அல்லது Industry எனவும் கூறுவது உண்டு. இறைவன் கொடையாக அளித்த நிலத்தைப் பயன்படுத்திப் பயிர் செய்து, தானும் வாழ்ந்து, உலகோரையும் வாழ்விக்க மனிதன் மேற்கொண்ட உழைப்பே காரணமாக அமைவதால், பொருளியலார் உழைப்பினைப் பெரிதும் பாராட்டிப் போற்றினர். நமது நாட்டில் வழங்கி வரும் 'உழைப்பே உயர்வு தரும்' 'உழைப்பே ஆக்கத்திற்கு வழி வகுக்கும்', 'உழைப்பே உயர் குலம்', 'உழைப்புக்கு ஏற்ற ஊதியம்' முதலிய பழமொழிகளும் உழைப்பின் பெருமையினை எடுத்துக்காட்டும்.

ஆதி மனிதன் முதலில் மேற்கொண்ட உழைப்பு உழவுத் தொழிலாகும். பிரெஞ்சு நாட்டில் தோன்றிய இயற்கையவாதிகள், உழைப்பிலேயே, உழவினைத்தான் பயன்தரும் உழைப்பாகக் கருதினர். அவர்களுக்கு உழைப்பு என்றால் உழவு என்று தான் நினைப்பு பிறவற்றை உழைப்பாக நினைக்கவில்லை. வணிக வாதத்தினரும் உழைப்பினைப் போற்றிச் சங்க காலச் தமிழ் மக்கள் போல "வினையே ஆடவர்க்கு உயிரே"[33] எனத் தொழில் புரிந்து, உழைத்துப் பணம் திரட்ட வேண்டும் என்று எண்ணினார்கள்.

இவ்விருவரையும், அடுத்து வந்தவர்கள் தொன்மைப் பொருளாதாரப் பள்ளியைச் (Classical Economics) சார்ந்த ஆடம்ஸ்மித், மால்தூஸ், டேவிட் ரிக்கார்டோ போன்ற பொருளியல் மேதைகள். இவர்களுள் ஆடம்ஸ்மித் என்பாரும் டேவிட் ரிகார்டே என்பாரும் உழைப்பின் பெருமையினை நன்கு உணர்ந்து, அது பொருளியல் உலகில் பெறும் இடத்தை நன்கு சித்தரித்துக் காட்டினார்கள். 'உழைப்பே பணம்' என்று எடுத்துக் கூறினார் ரிகார்டோ. இவையனைத்தும் ரிகார்டோ எழுதிய 'பொருளியல் - வரி பற்றிய கொள்கைகள்' (Principle fo Economics and Taxation) என்ற அரிய நூலில் விரிவாகக் காணலாம். பொருளியல் உலகில் மறுமலர்ச்சியை உண்டாக்கியவர் ஆல்பர்ட் மார்ஷல் என்ற பொருளியல் மேதை. இவர் 19 ஆம் நூற்றாண்டின் இறுதியில் தோன்றி 1924 வரை பெருந்தொண்டாற்றினார். இவரைத் 'தொன்மை நூல் மறுமலர்ச்சி'ப் பள்ளியின் தலைவர் என்று பெரிதும் போற்றுவர். அவர் தான் முதன் முதலாகப் பொருள் உற்பத்திக்கு நிலத்தொடு உழைப்பு, மூலதனம், நிர்வாக முயற்சி ஆகியவன தேவை எனக் குறிப்பிட்டார்.

பிரெஞ்சு நாட்டி சார்ந்த J.B. சே. என்பாரும் ஜெனிவாவைச் சார்ந்த சிஸ்மாண்டி என்பாரும் பிறநாட்டிலும் உழைப்பின் பெருமையை எடுத்துக் கூறிவந்தனர்.

டேவிட் ரிகார்டோ தம் நூலில் உழைப்பே பண்டத்தின் மதிப்பு எனவும் பண்டத்தை அளந்து கூறும் அளவுகோல் என்று கூறி வந்ததைத் தொடர்ந்து மேலை நாட்டில் உழைப்போர்க்கு ஏற்ற ஊதியத்தை வழங்கவேண்டும் என்ற ஒரு கிளர்ச்சி உருவாயிற்று. இந்த விழிப்புணர்ச்சியின் அடிப்படையில் தோன்றியதே சோஷியலிசமாகும் (சமவுடைமைக் கொள்கைகளாகும்). இது காரல் மார்க்ஸ் கைவண்ணத்தால் பொதுவுடையாயிற்று. உழைப்பின் உயர்வினை உலகறியச்

செய்வதே கார்ல்மார்க்ஸ் எழுதிய மூலதனம் (Capital) என்ற நூலின் முக்கிய சித்தாந்தம் ஆகும். எல்லோருமே உழைக்க வேண்டும்; உழைப்பாளி அனைவருக்குமே உணவளிக்க வேண்டும் என்ற கொள்கையில் பிறந்ததே நம் அண்ணல் காந்தியடிகளார் கண்ட சர்வோதயம். உழைப்பின் அடிப்படையில் தான் அடிகளார் 'உழைப்புக்கு உணவு' என்ற திட்டத்தையும் தீட்டி நாட்டுக்குக் கொடுத்தார்.

உழைப்பின் அடிப்படையில் தான், இந்த நூற்றாண்டில் ஆல்பர்ட் மார்ஷல் அவர்களின மாணவராகிய J.M.கெயின்ஸ் என்பார் புதுப்பொருளாதாரக் கொள்கையை அறிமுகம் செய்தார். பிகு என்பார் நலப்பொருளாதாரத்தையும் வகுத்தார். இந்த வகையில் உலகில் மக்களிடையே,

> "உழைப்புக்கும் தொழிலுக்கும் வந்தனை செய்வோம்,
> வீணில் உண்டு களித்திருப்போரை நிந்தனை செய்வோம்"[34]

என்ற கருத்து மாறத் தொடங்கியது.

பொருளியல் உலகில் 'உழைப்பு' என்ற சொல்லுக்குப் பலவகையான பொருள் விளக்கங்களும் கொடுக்கப்பட்டுள்ளன. மனிதன் மூளையைக் கொண்டும் உழைக்கிறான்; உடலைக் கொண்டும் உழைக்கிறான். ஆயின் உழைப்பே இரண்டும் வகையாகப் பரித்துப் பேசுவதும் உண்டு. சில சமயங்களில் இரண்டும் ஒன்றாகவும் அமைந்து உழைப்பாக மாறுவதும் உண்டு. மனம்தான் உழைப்புக்கே அடிப்படையாக இருப்பதால், உடல் உழைப்பாக இருந்தாலும் நல்ல உற்சாகம் இல்லை என்றால் உழைக்க முடியாது. உற்சாகம் மட்டும் இருந்து நோயாளியாக இருந்தாலும் உழைக்க முடியாது.

உழைப்பின் தரம் நாட்டுக்கு நாடு, இடத்துக்கு இடம் மாறுபடும். காலந்தோறும் வேறுபடும். எல்லா நாட்டினரும் ஒரே அளவில் உழைப்பதும் இல்லை. ஒரே நாட்டில் இருக்கின்ற ஒருவர்கூட இளமையில் உழைப்பதுபோல் முதுமையில் உழைத்துப் பணம் சேர்க்க முடியாது, மற்றும் படிக்கத் தொடங்கும் இளைஞன், சிறிய வயதில் தன் அறிவினைப் பயன்படுத்திப் பெறும் ஊதியத்தை விடக் கற்றுத் தேர்ந்த பின்னர் நிறைய ஊதியம் பெற வாய்ப்பு உண்டு. உழைப்பில் ஒருவர் அநுபவமும் அறிவும் பங்கு கொள்கின்றன. "பால சோதிடம், விருத்த வைத்தியம்"[35] என்ற நம் நாட்டு முதுமொழி இவைகளுக்கெல்லாம் விளக்கம் காண உதவலாம்.

திருவள்ளுவர் மனிதன் நிமிர்ந்து வாழ வேண்டும்; வானுறையும் தெய்வமாக வேண்டும் என்று எண்ணுகிறார். அதற்கு அவர் காட்டும் வழி அறத்தின் நெறியில் அமைந்த உழைக்கும் நெறி. உழைப்பால் ஆகாதது ஒன்றும் இல்லை என்ற திடமான நம்பிக்கையுடையவர். ஊழையும் வென்று விடலாம் என்பார். தெய்வத்தால் முடியாத காரியம் கூட உழைத்தால் கை கூடி வரும் என்று சொல்லும் அளவுக்கு மனிதனுடைய உழைப்பில் அசைக்க முடியாத நம்பிக்கை கொண்டவர்.

திருவள்ளுவர், உழைப்பினைப் பல சொற்களால் குறிப்பிடுகின்றார். தாளாண்மை, நோற்றல், உற்றல், முயற்சி, ஊக்கம், உள்ளமுடைமை, ஆள்வினை முதலியன சிலவாம். இவைகளுள் ஊக்கமுடைமை, ஆள்வினையுடைமை பற்றிப் பொருட்பாலில் தனித்தனியே ஒவ்வோர் அதிகாரத்தில் விளக்கிக் கூறுவார். 'வினைத்திட்பம்' என்ற அதிகாரத்திலும் முயற்சியுடையாரைப் பற்றிக் கூறப்படுகின்றார்.

கடுமையாக உழைப்பவர்களுக்கும், உழைக்காதவர்களுக்கும், வான் வழி செல்வோருக்கும், கடல் வழி செல்வோருக்கும், செல்வந்தர்களுக்கும், ஏழைகளுக்கும் உயிர் வாழ உதவுவது உணவாகும். ஆகவே, அனைவரது உயிர் வாழ்க்கைக்கும்

அடிப்படையானது வேளாண்மைத் தொழிலாகும். எந்த நாட்டில் வேளாண்மைத் தொழில் நடைபெறவில்லையோ, அந்த நாடு பட்டினியாலும், பஞ்சத்தாலும், கொலை, கொள்ளையாலும் பாதிப்படையும்.

ஆகவே, தான் உலக மாந்தர்கள் அனைவரும் உணவுப் பொருட்களைச் சுற்றியே தங்களது வாழ்க்கை முறையை அமைத்துக் கொள்கின்றனர். இக்கருத்தினை இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே வள்ளுவப் பெருந்தகை விளக்கிச் சென்றுள்ளார்.

"சுழன்றும்ஏர்ப் பின்னது உலகம் அதனால்
உழந்தும் உழவே தலை"[36]

ஒவ்வொரு நாட்டிலும் மக்கள் தொகையில் பாதிப்பேருக்கு மேல் வேளாண்மைத்தொழிலில் ஈடுபட்டுள்ளனர். ஆகவே, வேலை வாய்ப்பை வழங்குவதோடு உணவுத் தேவையையும் பூர்த்தி செய்வது வேளாண்மைத் தொழிலாகும். இக்கருத்தினை வலியுறுத்தியே மகாத்மா காந்தியும் இந்திய நாட்டின் முதுகெலும்பு போன்றவர்கள் விவசாயிகள் என்று குறிப்பிட்டார். உணவுப் பொருட்கள் விளைவிக்காவிட்டாலோ, மிகுதியாக ஏற்றுமதி செய்யப்பட்டாலோ விலைவாசி உயர்வு ஏற்பட்டு மக்களும் துன்பத்திற்கு ஆளாவார்கள். மனிதன் நிமிர்ந்து நடக்க முதுகெலும்பு அவசியமாவதுபோல, மரம் வளர்ந்து பெரிதாக ஆணிவேர் அவசியமாவதுபோல, உயர்ந்த தேர் விரைந்துசெல்ல அச்சாணி பயன்படுவது போல, உலகத்தோடு ஓட அச்சாணி போன்றவர்கள் உழவர்களே ஆவர் என்கிறார் வள்ளுவப் பெருந்தகை.

"உழுவார் உலகத்தார்க்கு ஆணி அஃதாற்றாது

எழுவாரை எல்லாம் பொறுத்து"[37]

ஆட்சிக் கட்டிலில் உள்ளவர்களும் ஐந்தாண்டுத் திட்டங்களினால் விவசாயப் பணிகளுக்கு முன்னுரிமை வழங்கியும் வேளாண்மைத் தொழில் புரிவோருக்கு மானிய விலையில் இரசாயன உரம், மருந்து, மின்சாரம், ரொக்கம், விவசாய சாதனங்கள் போன்றவற்றை வழங்குகின்றனர். மேலும், அணைக்கட்டுகளை உருவாக்குதல், தடுப்பணைகள் கட்டுதல், கால்வாய்களை உருவாக்குதல், கிளை வாய்க்கால்களைக் கட்டுதல், ஏரிகளை உருவாக்குவதல், தெளிப்பு நீர் மற்றும் சொட்டு நீர்ப்பாசன வசதிகளை ஏற்படுத்திக் கொடுத்தல் போன்ற பல வசதிகளை வேளாண்மைத் தொழில் மேற்கொள்வோர்களுக்குச் செய்து கொடுத்துள்ளனர். சில வேளைகளில் அசல் முழுவதையுமோ அல்லது வட்டியையோ ஆட்சி அதிகாரங்களில் உள்ளவர்கள் தள்ளுபடி செய்து வருகின்றனர்.

அனைத்துச் சான்றோர்களும் உழவுத் தொழிலின் மேன்மையைத் தமது நூல்களில் குறிப்பிட்டுச் சென்றுள்ளனர். அனைவரும் உயிர் வாழ உணவு வழங்குவதோடு பெருவாரியான மக்களுக்கு வேலை வாய்ப்பைக் கொடுக்கக்கூடியதும் உழவுத் தொழிலே என்கிறது, நல்வழி.

"உழுதுண்டு வாழ்வதற்கு ஒப்பில்லை கண்டீர்

பழுதுண்டு வேறோர் பணிக்கு"[38]

"உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார் மற்றெல்லாம்

தொழுதுண்டு பின்செல் பவர்"[39]

என்றும் வேளாண்மைத் தொழிலை நாடாண்ட மன்னர்களும் போற்றிப் புகழ்ந்துள்ளனர்.

## நாட்டின் வளம்

மக்களுக்குப் பயன்படக்கூடிய நீராதாரங்கள் இரண்டு வகைகளில் கிடைக்கின்றன. ஒன்று வானத்திலிருந்து பொழிகின்ற மழையின் மூலமாகவும் மற்றொன்று நிலத்திலிருந்து கிடைக்கின்ற அருவி நீர், ஆற்று நீர், கிணற்று நீர், மூலமாகவும் பெறப்படுகின்றது. தற்காலங்களில் மூன்றாவதாகக் கடல் நீரையும் சுத்திகரிப்பதன் மூலம் பயன்பாட்டிற்குக் கொண்டு வந்துள்ளனர். மிகுதியான இயற்கை வளங்களையும், கனிம வகைகளையும் வழங்குகின்ற மலைகளையும் வற்றாத தன்மையினைப் பெற்ற ஆற்றினையும் இயற்கையாகவே பாதுகாப்புப் பெற்ற நாடே சிறந்த நாடாகும் என்பதனை,

> "இருபுனலும் வாய்ந்த மலையும் வருபுனலும்
> வல்அரனும் நாட்டிற்கு உறுப்பு"[40]

என்ற குறட்பா சுட்டுகிறது.

நமது நாடு வற்றாத நதிகளையும் மூன்று புறம் கடல்களையும் ஒருபுறம் மலையினையும் இயற்கையாகவே பாதுகாப்பாகப் பெற்ற நாடாகும்.

மழை நீருக்கும், மலைகளுக்கும், அருவிக்கும், ஆற்றுக்கும், விவசாயத்திற்கும் எப்பொழுதுமே சங்கிலித் தொடர்போலத் தொடர்பிருந்துள்ளது. மலைகளிலுள்ள சில மரங்களுக்கு மழைப்பொழிவை ஏற்படுத்தும் திறன் இருந்துள்ளது. மலைவளம் அழிந்ததினால் அம்மரங்கள் அழிந்தன. தற்பொழுது காலம் கடந்த மழைப்பொழிவு நில அரிப்பு போன்றவை ஏற்பட்டு வெள்ளம் போன்றவை மக்களையும் சுற்றுப்புறத்தையும் அழித்துவருகின்றன. ஆழ்குழாய்க் கிணறுகள் ஏற்படுத்தப்பட்டு நிலவெடிப்பு, பூகம்பம் போன்றவை ஏற்பட்டு வருகிறது.

## வேளாண்மைத் துணைத்தொழில்கள்

சங்க காலத்தில் பெருந்தொழிலாகப் போற்றப்பட்டது வேளாண்மைத் தொழிலாகும். அத்தொழிலின் துணைத் தொழில்களாகத் தச்சுத்தொழில், கொல்லத்தொழில், கயிறு திரித்தல் போன்றவை மேற்கொள்ளப்பட்டுள்ளன. வேளாண்மைத் தொழிலுக்கு வேண்டிய கருவிகளைச் செய்து கொடுத்தல், விதைக்கான தானியங்களைத் தயார்ப்படுத்தித் தருதல், மண்ணுக்கு ஏற்ற பயிர் வகைகளைக் கண்டறிந்து கூறுதல், அறுவடை செய்யப்பட்ட பொருள்களை வியாபாரப்படுத்துதல் போன்றவை வேளாண்மைத் தொழிலின் துணைத் தொழில்களாகப் போற்றப்படுகின்றன. இதனைப் பின்வரும் குறட்பா தெளிவுபடுத்துகிறது.

> "பொருள்கருவி காலம் வினைஇடனோ டைந்தும்
> இருள் தீர எண்ணிச் செயல்"[41]

அனைவருமே வேளாண்மைத் தொழிலை மேற்கொண்டால் கருவிகள் பற்றாக்குறை, மூலப்பொருள் பற்றாக்குறை, சந்தைப்படுத்த முடியாமை போன்றவை ஏற்பட்டு தொழிலில் நலிவு ஏற்பட்டுவிடும். ஆகையினால் மக்கள் அவர்களுக்குள் ஓர் ஒப்பந்தத்தை ஏற்படுத்தி ஒவ்வொருவரும் ஒவ்வொருவிதமான தொழிலை மேற்கொண்டனர். காலம் செல்லச் செல்ல உயர்வான தொழிலை மேற்கொண்டவர்கள் உயர் சாதியினர் என்றும் தாழ்வான தொழிலை மேற்கொண்டவர் கீழ்ச்சாதியினர் என்றும் வழங்கப்பட்டனர்.

## வாணிபத் தொழில்

விவசாயப் பகுதிகளில் ஒரே இடத்தில் அனைத்துப் பொருட்களும் விளைவிக்கப்படுவதில்லை. வெவ்வேறு மண்பாங்கான பகுதிகளில் ஒவ்வொரு விதமான பொருட்கள் விளைகின்றன. அவ்வாறு விளைவிக்கப்பட்ட பொருள்களை விற்க வேறு இடங்களுக்கு அனுப்புவதும் விளைவித்தவர்களுக்குத் தேவையான பொருட்களை வேறு இடங்களிலிருந்து பெற்றுத் தருவதும் வணிகர்களின் கடமையாகும். பணவரவு வழக்கில் இல்லாத அக்காலங்களில் பொருட்களைப் பண்டமாற்றாகப் பெற்றுப் பிறருடைய பொருட்களை வாங்கும்போதும், கொடுக்கும் பொழுதும் அப்பொருட்களைத் தம் பொருளாகவே கருதிக் கொடுக்கவேண்டும் என்கிறார் வள்ளுவர். இதனை,

> "வாணிகம் செய்வார்க்கு வாணிகம் பேணிப்
>
> பிறவும் தமபோல் செயின்"[42]

என்ற குறட்பா தெளிவுபடுத்துகிறது.

வணிகர்கள் உற்பத்தியாளர்களிடம் பொருள்களை வாங்குமிடத்து, உமது பொருட்கள் தரம் குறைந்தவை என்று கூறிப்பெற்று அப்பொருட்களை மற்றவரிடம் விற்குமிடத்து எமது பொருட்கள் உயர்வானவை என்று கூறி விற்றால் மிகுதியான வருவாய் கிடைக்கும். ஆனால், வணிகத் தொழிலுக்குச் சிறப்பைத் தராது. ஆகவே, வணிகர்கள் நடுவு நிலைமையோடு செயல்படவேண்டும் என்கிறார் வள்ளுவர். மக்களிடமும் விளைவிப்போரிடமும் மிகுதியாக இருக்கும் பொருட்களை வாங்கித் தேவைப்படுவோர்களுக்குக் கொடுக்கும் போதும், வாங்கும் போதும் வணிகர்கள் நடுவு நிலையோடு நடந்துகொள்ளவேண்டும் என்பதனை,

"தமவும் பிறவும் ஒப்ப நாடி

கொள்வதூஉம் மிகை கொளாது

கொடுப்பதுஉம் குறை கொடாது"[43]

என்கிறது பட்டினப்பாலை

வணிகத் தொழில் மேற்கொள்பவர்களுக்கு மிகுதியான செல்வம் தேவை. முதலீடு இல்லாவிட்டால் அதிகமான வருவாயினை ஈட்ட முடியாது. போதிய அளவு முதலீடு இல்லாத வணிகத் தொழில்கள் மேற்கொண்டால் உள்ள செல்வத்தையும் இழக்க நேரிடும். அத்தொழிலை மேற்கொள்வோரும் இலாபத்தினை மட்டுமே குறிக்கோளாகக் கொள்ளாது குறைவான இலாபத்தில் தரமான பொருட்களை நுகர்வோர்களுக்கு வழங்கவேண்டும். தனி நபர்கள் மேற்கொண்டு வந்த வியாபாரத் தொழிலைத் தற்காலங்களில் அரசரும், மக்களும் இணைந்து செய்கின்ற கூட்டுறவு முறை வளர்ச்சி பெற்று வருகின்றது. வணிகர்கள் பொருட்களை வாங்கும்போதும், விற்கும்போது மேற்கொள்ளவேண்டிய விதிமுறைகளை,

"சமன்செய்து சீர்தூக்கும் கோல்போல் அமைந்தொருபால்

கோடாமை சான்றோர்க்கு அணி"[44]

என வள்ளுவர் வலியுறுத்திச் சென்றுள்ளார். மேற்கண்ட கருத்துக்களை ஆராய்ந்தால் பொருட்களை வாங்குதல், விற்றல் இரண்டும் பண்டைக்காலம் தொட்டு நமது நாட்டில் இருந்துள்ளதை அறியலாம். ஒவ்வொருவரும் ஏதாவதொரு தொழில் செய்யவேண்டும் என்ற நோக்கில் தொடங்கப்பட்ட வாணிபத் தொழில், தற்காலங்களில் இலாபத்தை மட்டுமே குறிக்கோளாகக் கொண்டு நடைபெற்று வருகின்றன.

## கொல்லத்தொழில்

விவசாய நிலங்களுக்குத் தேவையான கருவிகளைச் செய்தல், பாரம் ஏற்றிச் செல்ல வண்டிகளைச் செய்து கொடுத்தல், கிணறு மற்றும் குளம் தோண்டக் கருவிகள் செய்து கொடுத்தல், வேட்டையாடக் கூர்மையான ஆயுதங்களைச் செய்து கொடுத்தல், வீடு கட்டத் தேவையான பொருட்களைச் செய்து கொடுத்தல் போன்ற பல தொழில்களைச் செய்வோரைத் தச்சர், கொல்லர் என்று குறிப்பிடுவர். இத்தொழில்கள் அக்காலத்திலேயே இருந்துள்ளதை வள்ளுவர் குறிப்பிட்டுள்ளார். நட்பில்லாத ஒருவனிடம் அன்பு கொண்டால், அவன் நம்மை அழிப்பதற்கான இடம் கண்டவிடத்து, இரும்பானது வலிமையாகத் தாங்குவது போலத் தாங்கி, தன்னைக் கொல்லர் பட்டறையில் காய்ச்சியவிடத்து வெட்டுபவர்க்கு உதவி செய்வது போல நட்பில்லாதவன் நம்மை அழித்துவிடுவான் என்கிறார் வள்ளுவன். இதனை,

> ''சீரிடம் காணின் எறிதற்குப் பட்டடை
>
> நேரா நிரந்தவர் நட்பு''[45]

என்ற குறட்பா வழி அறியலாம்.

பல ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பே நாட்டில் இரும்புத் தொழில் நடைபெற்றுள்ளதை மேற்கண்ட குறளால் அறியலாம். இரும்பை நன்றாகக் காய்ச்சியவிடத்து எந்த வடிவத்திலும் உருவத்திலும் மாற்றமுடியும். வேளாண்மைக் கருவிகள் செய்வதற்கு இம்முறை பயன்பட்டதையும், வழக்கிலிருந்த கருவிகளையும் வேறு குறட்பாக்களின் மூலம் அறியலாம். விரைவான வகைகளில் வேளாண்மைத் தொழில் மேற்கொள்ளவும், பகைவரிடமிருந்து பாதுகாத்துக் கொள்ளக் கூர்மையான ஆயுதங்களை வைத்துக் கொள்ளவும். அக்காலங்களிலேயே விவசாயிகளுக்குக் கொல்லத் தொழில் உதவியுள்ளது எனலாம்.

## கால் நடைத் தொழில்

கால்நடைகளை வளர்த்தலையும் பராமரித்தலையும் நமது முன்னோர்கள் பயன்படுதியுள்ளனர் என்பதை வள்ளுவர் குறிப்பிடுகிறார். வேளாண்மையின் துணைத் தொழிலாகக் கால்நடைகளை வளர்த்து அவற்றினின்று கிடைக்கின்ற சாணங்களை விவசாய நிலங்களுக்கு உரமாகப் பயன்படுத்தியுள்ளனர். தற்காலங்களில் விவசாயிகள் செயற்கை உரங்களைப் பயன்படுத்தினாலும் வேளாண்மை விஞ்ஞானிகள் இயற்கை உரங்களையே பயன்படுத்த ஆலோசனை கூறுகின்றனர். கால்நடைகளின் கழிவுகளிலிருந்து பெறப்படுகின்ற உரத்தினை வேளாண்மை நிலங்களில் பயன்படுத்தினால் இரண்டு முறை அல்லது வருடம் முழுவதும் சாகுபடி செய்யலாம். ஆனால், செயற்கை உரங்களை ஒவ்வொரு முறையும் சாகுபடி செய்யும் பொழுதும் பயன்படுத்தவேண்டும். அப்படிப் பயன்படுத்தும் பொழுது மண்ணின் இயல்பு பாதிப்படையும். செயற்கை உரங்கள் தோன்றுவதற்கு முன்பாகவே நமது முன்னோர்கள் கால்நடைகளின் கழிவுகளிலிருந்து இயற்கை உரங்களைப் பெற்று மிகுதியான வருவாயினைப் பெற்றுள்ளனர். நன்றாக உழுவதைக் காட்டிலும் நன்றாக உரமிடுதலின் அவசியத்தை,

> "ஏரினும் நன்றால் எருவிடுதல் கட்டபின்
> நீரினும் நன்றதன் காப்பு"[46]

என வள்ளுவர் குறிப்பிட்டுள்ளார். அன்றைய காலங்களில் செயற்கை உரங்கள் இல்லாததால் இயற்கை உரங்களையும் அவர் குறிப்பிட்டிருக்கவேண்டும். கால்நடைகளாக பசு, எருது, ஆடு, போன்றவற்றையே குறிப்பிட்ட வள்ளுவர், உரங்களாக இவற்றின் கழிவுகளையே குறிப்பிட்டிருக்கவேண்டும். கால் நடைகளை

வளர்த்து பால், தயிர், வெண்ணெய், நெய் ஆகியவற்றைப் பயன்படுத்தியும் தேவைக்கு மிகுந்ததைப் பிறருக்குக் கொடுத்தும் உள்ளனர் என்பதனைக் கீழ்க்கண்ட குறளால் அறியலாம்.

> "பண்பிலான் பெற்ற பெருஞ்செல்வம் நன்பால்
> கலம்தீமை பால்திரிந் தற்று"[47]

பாலைக் காய்ச்சப் பயன்படுத்திய பாத்திரம் நன்றாகக் கழுவப்பட்டிருக்கவேண்டும். இல்லையேல் அப்பாத்திரத்தில் காய்ச்சிய பால் கெட்டுவிடும் என்கிறார் வள்ளுவர். இக்கருத்தினை ஆராய்கின்றபொழுது அக்காலத்திலேயே பால், தயிர், மோர் போன்றவை ஒருவருக்கு மிகுதிக்கு மேலாக உள்ளதைப் பண்டமாற்று முறையில் பயன்படுத்தப்பட்டுள்ளது எனலாம். சங்க கால இலக்கியங்களில் முல்லை நில மக்கள் பசுக்களை வளர்த்தலையும், அவற்றினின்று கிடைக்கின்ற பால், தயிர், மோர் போன்றவற்றை விற்றுத் தமக்குத் தேவையான பொருட்களை வாங்காமல் மேலும் பசுக்கூட்டங்களை வாங்கியதைப் பெரும்பாணாற்றுப் படைப் பாடலால்[48] அறியலாம்.

## நிலத்தைப் பண்படுத்துதல்

வேளாண்மை நிலங்களில் இரண்டு முறை அல்லது ஒருவருடம் முழுவதும் விவசாயம் செய்து விட்டு அதன் பின்பு விளைநிலங்களை நன்றாக உழுது காய வைக்கவேண்டும். மண் கட்டிகள் நன்றாகப் புழுதி ஆகுமாறு இரண்டு அல்லது மூன்று முறை உழுது பண்படுத்தி சில மாதங்கள் வரை விவசாயம் செய்யாமல் விட்டுவிடவேண்டும். அதன் பிறகு மழை பெய்த விடத்து உழுது வேளாண்மைப்

பணிகளை மேற்கொண்டால் அந்நிலத்திற்குக் குறைவான அளவே உரம் இட்டால் போதும். மிகுதியான விளைச்சலைப் பெற முடியும் என்பது வேளாண்மை சார்ந்த வல்லுநர்களின் கருத்தாகும். அதனையே இன்றைய பெரும்பாலான விவசாயிகள் மேற்கொள்கின்றனர். இக்கருத்தினை,

"தொடிப்புழுதி கஃசா உணக்கின் பிடித்தெருவும்

வேண்டாது சாலப் படும்"[49]

என்ற குறட்பா வழியாக, இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே வள்ளுவரும் கூறிச்சென்றுள்ளார்.

ஈர நிலத்தில் உழுகின்றபொழுது பெரிய மண்கட்டிகள் தோன்றும். அக்கட்டிகள் பொடியாகும். நிலத்தின் மேல் உள்ள மண் நிலத்திற்குக் கீழேயும் செல்லும். காற்றுப்பதம் நிலத்திற்கு உள்ளேயும் செல்வதால் நிலம் நன்றாகக் குளிர்ச்சி அடைகிறது. மேலும் மேல் மண்ணும் அடி மண்ணும் நன்றாகக் கலக்கின்றது. இதனால் நிலத்தின் சத்துக்கள் கூடுகின்றன. அப்படி உழுத நிலத்தில் சில மாதங்கள் வரை சாகுபடி செய்யாமல் விட்டு விட்டு அதன் பிறகு சாகுபடி செய்தால், அந்த நிலத்திற்கு உரமே இடவேண்டியதில்லை. அந்நிலத்தில் மிகுதியான விளைச்சலைப் பெறமுடியும் என்கிறார் வள்ளுவர். இதே கருத்தினை 'அகல உழுவதைவிட ஆழ உழுவதே மேல்' என்ற பழமொழியும் மெய்ப்பிக்கும். இக்கருத்து அனைத்து வகையான நிலத்திற்கும் பொருந்தும். அப்படி உழுகின்றபொழுது களைக்கொல்லிகளின் வேர்கள் காய்ந்துவிடும். சாகுபடி செய்யும் பொழுது களைப்பறிப்பு வேலையும் குறையும். அக்களைகளை உடனடியாக அகற்றாவிடில் அவை நிலத்தின் சத்தினை உறிஞ்சி விளைச்சலைக் குறைத்துவிடும்.

## பறித்தல்

வேளாண்மை நிலங்களில் சாகுபடி செய்த விடத்து காற்றின் மூலமும், நீரின் மூலமும் களைகளின் விதைகள் பரவிக் களைகள் தோன்றும், அவற்றை அவ்வப்பொழுது நீக்கிக் கொண்டே இருக்கவேண்டும். அவ்வாறு செய்யாவிடில் நிலத்திலுள்ள சத்தினை இக்களைகளே உறிஞ்சிவிடும் விளைச்சல் எதிர்பார்க்கும் அளவைவிடக் குறைவானதாகவே கிடைக்கும். ஒவ்வொரு முறை நீர் பாய்ச்சிய பிறகும் பயிர்களுக்கிடையே தோன்றுகின்ற களைகளை அப்புறப்படுத்திக் கொண்டே இருக்கவேண்டும். இதே கருத்தினை வள்ளுவரும் நல்ல சான்றோர்களுக்கு மத்தியில் தீயவர்கள் தோன்றி நன்மை செய்வதைத் தடுத்து விடுவார்கள். அவர்கள் பயிர்களுக்கு மத்தியில் தோன்றுகின்ற களைகளை அகற்றுவது போல அகற்றவேண்டும். இல்லாவிடில் பயிர்விளைச்சல் எவ்வாறு மிகுதியாக வராதோ அதுபோல சமுதாயமும் வளர்ச்சிப் பாதையை நோக்கிச் செல்லமுடியாது என்கிறார்.

இதனைப் பின்வரும் குறள்வழி அறியலாம்.

> "கொலையின் கொடியாரை வேந்தொறுத்தல் பைங்கூழ்
>
> களைகட் டதனொடு நேர்"[50]

களைகள் மீண்டும் தோன்றாதவாறு வேரொடு அழிக்கவேண்டும். தீயவர்களை அழிப்பதால் சமுதாயம் தழைக்கும். களைகளை அகற்றுவதால் விவசாயம் செழிக்கும். தற்காலங்களில் ஆட்கள் பற்றாக்குறை, மிகுதியான கூலி போன்ற காரணங்களினால் விளை நிலங்களில் களைகளைக் கட்டுப்படுத்த களைக்கொல்லி மருந்துகளைப் பயன்படுத்துகின்றனர். பயிர்சாகுபடி செய்தது முதல் அறுவடை வரை இரசாயன உரம்,

மருந்துகளைப் பயன்படுத்துகின்றனர். இதனால் காய்கறிகள், கிழங்கு வகைகள், பருப்பு வகைகள் போன்றவற்றைப் பயன்படுத்தும் நுகர்வோர்களுக்குப் பலவிதமான நோய்கள், பக்க விளைவுகள் தோன்றுகின்றன. ஆகவே, சுற்றுப்புறச் சீர்கேடுகளை ஏற்படுத்துகின்ற செயற்கை உரங்களையும் மருந்துகளையும் தவிர்த்து இயற்கைச் சாகுபடி செய்து நோய் நொடியின்றி வாழ வழி ஏற்படுத்துவோம்.

## எருவிடுதல்

குழந்தைகள் கடுமையான நோய்களிலிருந்து விடுபடுவதற்காக உரிய பருவத்தில் தடுப்பூசிகள் போடப்படுவதைப் போலவும், வலிமையான ஆரோக்கியத்தைப் பெற சத்தான உணவுகளை வழங்குவதைப் போலவும் பயிர்கள் செழித்து வளர்வதற்குத் தேவையான பருவத்தில் உரமிடுவது முக்கியமானதாகும். பயிர்கள் சிறப்பாக வளர உழுது பண்படுத்துவது முக்கியமானதாகும்.

காதலர்களின் நெருக்கத்தை ஊராரின் பேச்சு மேலும் செம்மைப்படுத்துகிறது. அவர்களது பெற்றோர்களின் கடுமையான சொல் அப்பாசப்பிணைப்பினை மேலும் பின்னிப் பிணைக்கின்றது. திருமணம் செய்து கொண்டதற்குப் பிறகு அக்காதலர்களைப் பற்றி மற்றவர்கள் எதுவும் பேசமாட்டார்கள். அதனைப் போலவே உரிய காலத்தில் பயிர்களுக்கு உரமிட்டால் விளைச்சல் சிறப்பாக இருக்கும், பயிர் விளைந்த பிறகு உரமிடத் தேவையில்லை. உரமிட்டால் பயனுமில்லை. ஊரார்கள் இவர்களது காதலைப்பற்றிப் பலவிதமான கருத்துக்களை எடுத்துரைப்பார்கள். அதுபோலவே பயிர்களுக்கும் தழைச்சத்து, மணிச்சத்து, சம்பல்சத்து போன்ற பலவகையான சத்தான உரங்களையும் உரிய பருவத்தில் இடவேண்டும் என்கிறார் திருவள்ளுவர்.

"ஊரவர் கௌவை எருவாக அன்னைசொல்

நீராக நீளும்இந் நோய்"[51]

காலமறிந்து பயிர் செய்யவேண்டும். உரிய பருவத்தில் உரமிடவேண்டும். ஒவ்வொரு முறை நீர்பாய்ச்சும்போது களைகளை அகற்றவேண்டும். பயிர்களை ஆடு, மாடு பறவைகள் போன்றவற்றிடமிருந்து காப்பாற்றவேண்டும். அவ்வாறு செய்தால் மட்டுமே சிறந்த மகசூலைப் பெறமுடியும். மனிதன் உயிர்வாழத் தேவையான பொருட்களைச் செயற்கையாக உருவாக்கமுடியாது. ஆகவே, விவசாய நிலங்களிலிருந்துதான் பெறமுடியும். அத்தகைய விவசாய நிலங்களைச் சுற்றுப்புறச் சீர்கேடுகளிலிருந்து காப்பாற்றவேண்டும்.

## நீர்பாய்ச்சுதல்

அன்றைய காலங்களில் மிகுதியான மழைப்பொழிவு இருந்ததால், ஏரிகள் குளங்கள் ஆகியவற்றில் நீர் மிகுந்தும், ஆறுகளில் எப்பொழுதும் நீர்வரத்தும் மிகுதியாக இருந்தது. அதனால் அதிகமானோர் உழவுத் தொழிலை விரும்பி மேற்கொண்டனர். நீர்நிலைகள் மிகுந்திருந்ததால் எங்கும் பசுமைப் புல்வெளிகள் நிறைந்திருக்கும். அப்பொழுது வீசுகின்ற தென்றலும் ஈரப்பதத்துடன் வீசும். அதனால் மாதம் மும்மாரி பொழிந்துள்ளது. விவசாயிகளும் மானாவாரியாகவே விளைநிலங்களில் சாகுபடி செய்துள்ளனர். விளைச்சலும் பெருகியுள்ளது. மக்கள் வசிக்குமிடந்தோறும் குளங்கள் இருந்ததையும் அவற்றின் நீர் மிகுந்திருந்தையும் வள்ளுவர் கீழ்க்கண்டவாறு குறிப்பிடுகிறார்.

"ஊருணி நீர்நிறைந்த தற்றே உலகவாம்

பேரறி வாளன் திரு"[52]

மழை இல்லாத காலங்களில் குளத்து நீரையும் ஆற்று நீரினையும் விவசாய நிலங்களில் பயன்படுத்தியுள்ளனா். வள்ளுவரும் பயிருக்கு நீா் பாய்ச்ச வேண்டியதன் அவசியத்தைத் தாயானவள் தனது மகளிடம் காதல் வாழ்க்கையை விட்டு விடும்படி தினமும் அறிவுரை கூறுவதைப் போல் நீா்பாய்ச்ச வேண்டும் என்று கூறுகிறாா்.

இன்றைய உலகில் நீா் இல்லாமல் மனித வாழ்க்கையும் எந்தத்தொழிலும் இல்லை. விவசாயத் தொழிலாக இருந்தாலும், எந்தத் தொழிலாக இருந்தாலும் அடிப்படையானது நீா். அந்த நீரானது வானத்திலிருந்து வரும் மழை நீராகவோ அருவிகளினின்று வருகின்ற ஊற்று நீராகவோ, நிலத்துக்கடியிலிருந்து பெறப்படுகின்ற நிலத்தடி நீராகவோ, கடலிலிருந்து சுத்திகரிக்கப்படுகின்ற நீராகவோ இருக்கலாம். அத்தகைய நீரின் அவசியத்தை அன்றே விளக்கியுள்ளாா் வள்ளுவா்.

“நீரின்று அமையாது உலகெனின் யாா்யாா்க்கும்
வானின்று அமையாது ஒழுக்கு”[53]

கரும்பு, வாழை, நெல் போன்ற பயிா்களுக்கு நீரைத் தேக்கிச் சாகுபடி செய்யவேண்டும். வேறு சிலவகைப் பயிா்களுக்குப் பாத்தி கட்டி நீா் பாய்ச்ச வேண்டும். சிலவகைப் பயிா்கள் மானாவாரியாக விளைகின்ற தானிய வித்துகளை வேளாண்மைக் கல்லூரிகளும், வேளாண்மைப் பல்கலைக்கழகங்களும், பண்ணை விரிவாக்க நிலையங்களும் கண்டுபிடித்து வருகின்றனா். மானாவாரிப் பயிா்களுக்கு, நீா் பாய்ச்ச வேண்டியதில்லை. மானாவாரியாக நன்றாக விளைகின்ற பயிா்களுக்கு, நீா் பாய்ச்சுவது தானே அறிந்து கொள்ளுகின்ற திறமை டைத்தவா்களுக்கு, இன்னொருவா் ஆலோசனை கூறுவது போன்றதாகும் என்கிறாா் வள்ளுவா்.

## விளைநிலங்களைப் பாதுகாத்தல்

விளைநிலங்களில் களை எடுத்தல், உரமிடுதல், நீர் பாய்ச்சுதலோடு நின்று விடாமல் விளை நிலங்களைக் காப்பது அவற்றை எல்லாம் காட்டிலும் மேலானது ஆகும். கால் நடைகள் பயிர்களைச் சேதப்படுத்தாமலும், பறவையினங்கள் அறுவடைக்குத் தயாராகவுள்ள தானியங்களைச் சேதப்படுத்தாமலும் காத்தல் மிக முக்கியமானதாகும். விளை நிலங்களில் நோய் வராமல் முன்னெச்சரிக்கையாகப் பாதுகாத்தல் சாலச் சிறந்ததாகும். அன்றைய காலங்களில் காட்டுப்பூனைகள் மிகுதியாக இருந்ததால் மயிலினங்கள் பெருகவில்லை. விவசாய நிலங்களுக்கு அழிவுமில்லை. பாம்புகள் மிகுதியான அளவில் இருந்ததால் எலிகளின் எண்ணிக்கை பெருகவுமில்லை; சேதமுமில்லை. இந்தச் சுழற்று முறை மாறவே தற்காலங்களில் காட்டுப்பூனைகள், பாம்புகள் எண்ணிக்கை குறைந்து மயில், எலி ஆகியவற்றின் எண்ணிக்கை பெருகி விளைநிலங்களில் பயிர்கள் சேதப்படுத்தப்படுகின்றன.

நாட்டிற்குப் பகைவர்களின் மூலமும் சமூக விரோதிகளின் மூலமும் திருடர்கள் மூலமும் கேடு வராமல் படைவீரர்கள், காவல்துறை போன்றவர்களைக்கொண்டு காவல் காப்பதைப் போல விவசாய நிலங்களையும் நோய்களிலிருந்தும், பயிர்களின் எதிரிகளாகிய கால்நடைகளினின்றும் வேறு விலங்குகளினின்றும் பாதுகாக்கவேண்டும். வீட்டிற்குத் தலைவனாகிய கணவன் மனைவியை அணுகி அவளுக்கு வேண்டிய தேவைகளையும் குடும்பத்திற்கு வேண்டியவற்றையும் நிறைவு செய்து தரவேண்டும். அவ்வாறு செய்யாவிடில் மனைவியானவள் கணவனை வெறுத்து விலகி விடுவாள். அதனைப்போலவே விளைநிலங்களை உழவன் காவாது போவானாகில் அதனது விளைச்சலையும் வருவாயினையும் இழந்துவிடவேண்டி வரும் என்கிறார் வள்ளுவர்.

"செல்லான் கிழவன் இருப்பின் நிலம்புலந்து

இல்லாளின் ஊடி விடும்"[54]

தற்காலங்களில் உழவர்கள் தங்களது நிலங்களைச் சுற்றிலும் வேலிகளை அமைத்தும் காவற்காரர்களை நியமித்தும் வருகின்றனர் சங்ககாலத்தில் நமது முன்னோர்கள் பரண்களை அமைத்து அவற்றின் மேலிருந்து விளை நிலங்களைக் காவல் காத்தனர் என்பதனைச் சங்கப் பாடல்களால் அறியலாம். அன்றைய காலங்களில் விளைநிலங்கள் மிகுதியாகவும் மக்கள் தொகை குறைவாகவும் இருந்ததால் கள்வர்கள் தொல்லை குறைவாகவே இருந்துள்ளது. இருப்பினும் பகைவேந்தர்களால் மட்டும் விளைநிலங்கள் சூறையாடப்பட்டும், தீ வைக்கப்பட்டும் சேதமடைந்ததை அறியலாம். ஆகவே, காவல் காப்பது என்பது மேலான ஒன்றாகவே அன்று முதல் இன்றுவரை கடைப்பிடிக்கப்பட்டு வருகின்றது. இக்கருத்தினை இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே தகுந்த எடுத்துக்காட்டுடன் விளக்கிச் சென்றுள்ளார் வள்ளுவர்.

இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே நமது முன்னோர்கள் விவசாய நிலங்களின் பயன்பாட்டிற்கு வேண்டிய கலப்பை, வண்டி போன்ற உபகரணங்களையும், ஆழமான கிணறுகளிலிருந்து நீர் இறைப்பதற்கு வேண்டிய கருவிகளையும், சிறிய செடி, கொடிகளையும் வெட்டுவதற்கு வேண்டிய கருவிகளையும் பெரிய மரங்கள் போன்றவற்றை வெட்டுவதற்கு வேண்டிய கருவிகளையும் பயன்படுத்தி உள்ளனர் தானியங்களைச் சேமித்து வைப்பதற்கும் வேண்டிய வசதிகளையும், கால் நடைகளைப் பராமரிப்பதிலும் சிறந்து விளங்கியுள்ளனர். மண்ணின் தன்மைக்கு ஏற்பப் பயிர்களையும் காலத்திற்கு ஏற்ற சாகுபடி முறைகளையும் அறிந்து வைத்துள்ளனர். நீர்

மேலாண்மைத் தத்துவத்தையும் அறிந்து வைத்துள்ளனா். போன்ற கருத்துக்களைத் திருக்குறளால் அறியலாம். மண் அரிப்பு, நிலத்தைப் பண்படுத்துதல், நீா் பாய்ச்சுதல், எருவிடுதல் போன்ற பல செய்திகளையும் முன்னோா்கள் பயன்படுத்தியதை வள்ளுவத்தால் அறியலாம்.

## பொருள்

ஆடம்ஸ்மித் என்பாா் தாம் எழுதிய 'பன்னாட்டுச் செல்வம்' என்ற நூலில் முதன்முதலில் உற்பத்தியின் பெருக்கத்திற்கு நிலம் (Land) உழைப்பு (Labour) முதல் (Capital) என்ற மூன்றும் முக்கிய காரணிகளாக அமைகின்றன என்று எடுத்துரைத்தாா். இனி ஆடம்ஸ்மித் Capital என்று குறிப்பிட்ட முதல் என்பது பற்றிக் காண்போம்.

ஆங்கிலத்தில் Capital என்று குறிப்பிடுவதைத் தமிழில் முதல் எனவும், மூலதனம் எனவும், முதற்பொருள் எனவும் குறிப்பிடுகின்றோம். இச்சொல்பற்றி மேலைநாட்டுப் பொருள்நூல் ஆசிரியா்கள் பலா் பலவகையான விளக்கம் தந்து வருகின்றனா். இறைவன் அளித்த நிலத்தில், மனிதன் தன் உழைக்கும் சக்தியால் ஆக்கப்படும் பொருளே முதல் என்று சொல்லப்படுகின்றது. மனிதன் உழைத்துப் பயிா் செய்து உற்பத்தியைச் செய்கிறான். பொருளைப் படைக்கின்றான். அவன் தன் முயற்சியால் உண்டாக்கும் இப்பொருளைக் கொண்டு பிறபொருளோடு முதலில் மாற்றி வாங்கிக்கொண்டான். நாளடைவில் பண்ட மாற்று முறையிலிருந்து பணத்தையும் படைத்தான். பின்னா் அப்பணத்தையே கொண்டு பிற பொருளை வாங்கிக் கொண்டான். அங்கே முதற்பொருளே அவனுக்கு மூலதனமாக அமைந்தது. அவன் உற்பத்தி செய்த

ஒன்றே பலவற்றைப் படைக்க வழி கோலியது, தொழிற்சாலைக்கு வேண்டிய இயந்திரம் பிற தளவாடப் பொருள் பெற்றான். லாபம் ஈட்டினான், செலவுக்குப் போக எஞ்சியதைச் சேமித்து வைத்தான், மூலதனம் பெருகியது; சிறுதுளி பெரு வெள்ளமாயிற்று; தானும் உற்பத்திப்பொருள் கொண்டு இன்பம் நுகா்ந்தான். பிறா்க்கும் பண்ட மாற்றமாகவோ, பணத்திற்குக் கொடுத்துப் பிறரையும் அனுபவிக்கச் செய்தான். பெரிய செல்வம் படைத்தவன் ஆனான்.

மனிதன் படைக்கும் காரணியாகிய இந்த முதலுக்கும் இயற்கைக்காரணியாக நிலத்திற்கும், உழைப்புக்கும் வேறுபாடு உண்டு என்பாா்கள். நிலம் பரப்பளவில் என்றும் ஒரே அளவினையுடையது. நிலத்தின் பரப்பளவைக் கூட்டவோ குறைக்கவோ முடியாது, என்றும் நிலைத்து நிற்பது நிலம். ஆனால், மனித சக்தியால் தோற்றுவிக்கப்படும் முதலே ஏறி இறங்கும் தன்மையது. ஆறிடும் மேடும் மடுவும் போல் ஏறும் இறங்கும் செல்வம் ஒன்றும் இல்லாமல் போனாலும் போகும். அதனை ஆளும் திறத்திற்கு ஏற்ப அதனுடைய பயனும், அதன் வளா்ச்சியும் அமையும்.

## முதற்பொருள்

இன்று கிடைக்கும் நூல்களுள் மிகவும் தொன்மை வாய்ந்தது தொல்காப்பியம் எனும் முதல் இலக்கண நூல், அந்த நூலில் அகத்திணை இயலியல்[55] நிலத்தையும், பொழுதையும் (காலத்தையும்) முதற்பொருள் என்று கூறப்பட்டுள்ளது. மனிதன் இறைவன் படைத்தளித்த நிலத்தில், காலம் அறிந்து, பயிா்செய்ய், தொழில் முனைய, உணவும் உடையுளும் பிறவற்றையும் படைக்கிறான். நிலத்திலிருந்து அவனால் ஆக்கப்படுவன ‘ஆக்கம்’ ஆகின்றன. படைக்கப்படுகின்ற பொருள்கள் அவன் உடைமையாகின்றன. அவன் செய்து பயன்படுத்தும் கருவிகள் பொருள்

ஆகின்றன. அவனுக்குத் துணைசெய்யும் ஆடும் மாடும் செல்வங்கள் ஆகின்றன. நிலம், காலம் என்ற முதற்பொருளிலிருந்தே மனிதன் தன் ஆக்கம் திறந்தால் மூலதனத்தையும், பொருளையும் உடைமையையும், செல்வத்தையும் பிறவற்றையும் உற்பத்தி செய்கிறான் இவைகளைக் கருப்பொருள் எனவும் கூறுவார்கள்.

மனிதனுடைய முயற்சியால் உண்டாகும் முதற்பொருளிலிருந்தே பலவற்றை உற்பத்திசெய்ய முடியும். அது அந்தப் பொருளைச் சரியாக ஆளும் திறம்படைத்தவர்க்கே உண்டு என்று திருவள்ளுவர் 'பொருள் ஆட்சி போற்றாதார்க்கில்லை, என்று கூறுமிடத்தில் குறிப்பிடுகின்றார்.

முதலின் ஆக்கச்சக்தியை நன்குணர்ந்தவர் திருவள்ளுவர். முதற்பொருளில் பரந்துபட்ட பயனை நன்குணர்ந்தவராகித் திருவள்ளுவர், பொருளின் மாட்சியைப்பற்றித் திருக்குறளில் பரக்கப் பேசுகின்றார். முப்பாலில் சிறப்பாக நடுவில் அமைந்துள்ள பொருட்பால் பொருள் மனித வாழ்வில் பெறும் முக்கிய இடத்தைத் தெளிவாக எடுத்துரைக்கின்றது. சாணக்கியரின் அர்த்தசாத்திரம் போல் தமிழில் அமைந்த பொருள்நூல் என்று கூறுவார்கள். மற்றும் இப்பாலில் அரசியலையும் பொருளியலையும் சேர்த்துப் பேசுவதால், தற்காலத்தில் பல தமிழ்ச்சான்றோர்கள் பொருட்பாலை 'அரசியல் பொருளியல்' (Political Economics) எனவும் சொல்லுவார்கள்.

வணிக வாதத்தினர் பணம் திரட்டுவதையே குறிக்கோளாகக் கொண்டவர்கள். அந்த கூட்டத்தைச் சேர்ந்தவர் பிரெஞ்சு நாட்டில் பிறந்த கால்பர்ட் என்பவர். வணிகர்கள் பொருள் ஈட்டுவதில் அரசு தலையிடக்கூடாது எனறு அரசு தலையிடாக் கொள்கையை ஆதரித்தும் வற்புறுத்தியும் எழுதியும் வந்தார், அரசு தலையீடு இன்றி வணிகர்கள் மனம் போல் லாபம் திரட்ட வேண்டும் என்பது அவரது வாதமாகும்.

## அரசும் பொருளும்

திருவள்ளுவர் பொருட்பாலில் இறைமாட்சி என்ற அதிகாரத்தின் முதற்குறளிலேயே பொருள் மிகவும் படைத்தவன் அரசருள் ஆண்சிங்கம் போன்றவன் (381) கூறுகின்றார். பணபலம் இருந்தால் அரசு செம்மையாக நடக்கும், அரசு நீதி ஒழுங்காக இயங்கும் மக்கள் பிறர்க்குப் பயப்படாமல் பொருள் ஈட்டலாம் என்று கூறுகின்றார். பொருள் நிலையான செம்மையான வலிமைமிக்க அரசுக்குக் காரணமாக அமைகின்றது. இது பயம் இன்றிப் பொருள் சம்பாதிக்க வழிகோலுகின்றது. பொருளுக்கும், அரசியலுக்கும் உள்ள தொடர்பினை இக்குறட்பாவின் உரையில் உரையாசிரியர்கள் விளக்கி இருத்தலை ஆங்கே காணலாம். கால்பாட்டின் நிலை இருக்கக்கூடாது என்றால் படை, குடி, கூழ் முதலிய ஆறுசெல்வங்களையும் படைத்த அரசன் அரசு செலுத்த வேண்டும் என்பதே திருவள்ளுவரின் கருத்தாகும். மற்ற நாடு என்ற அதிகாரத்தில் வரும் இறுதி குறட்பாவும் இதனை வலியுறுத்தும். எல்லா நன்மைகளும் ஒரு நாட்டில் அமைந்திருந்தாலும் நல்ல அரசு அமையப்பெறாது போனால் அவற்றில் ஒரு பயனும் இல்லை.

> “ஆங்குஅமை எய்தியக் கண்ணும் பயன்இன்றே
>
> வேந்துஅமைவு இல்லா நாடு”[56]

ஒரு நாட்டின் பொருளாதாரம் பெருக அரசரும் பல செல்வம் பெற்றவராக இருக்க வேண்டும், நாட்டில் அறத்தையும் நீதியையும் நிலைநாட்டுகின்றவராக இருக்க வேண்டும்.

## பொருளின் சிறப்பு

திருவள்ளுவர் உலகில் பொருளின் சிறப்பினை நன்கு உணர்ந்தவர். அதனால் தம் நூலில் பல இடங்களில் அதன் மாட்சிமையை விரித்துரைக்கின்றனார், பொருளைக்குறிக்க அவர், முதல், செல்வம், திரு, பொருள், உடமை, உள்ளம் போன்ற பல சொற்களைப் பல்வேறு இடங்களில் பயன்படுத்துகின்றார். முதல் என்று இரண்டு இடத்தும், செல்வம் என்ற சொல்லை 27 இடங்களிலும், பிறச் சொற்களை பிற இடங்களிலும் பயன்படுத்துகின்றார். பொருள் என்ற சொல்லை மட்டும் 69 குறட்பாக்களில் 76 முறை பயன்படுத்தியுள்ளார்.

முதலில் 'முதல்' என்ற சொல்லை எடுத்துக்கொள்வோம். இதனை நான்கு[57] (449, 463, 948, 1304) குறட்பாவில் பயன் படுத்தியிருந்தாலும், பொருள் என்ற மேனாட்டார் கொள்ளும் Capital என்ற பொருளில் இரண்டு இடத்தில் மட்டுமே வந்துள்ளது. 'முதல் இல்லார்க்கு ஊதியம் இல்லை' என்பது அந்தக்குறள். அதற்கு உரை கூறும் பரிமேலழகர் முதற்பொருள் இல்லாத வணிகர்க்கு இல்லாததைப்போல என்று சொல்லுவார். மூலதனம் இல்லை என்றால், உற்பத்தி இல்லை, அதனால் வருமானம் இல்லை என்பது பொருள். மற்றும் முதல் என்பதையே பிறிதொரு குறளில் பொருள் ஆக்கம் கருதித் தம் கையிலுள்ள மூலதனத்தையும் இழக்கக்கூடிய வினையை (தொழிலை) ஊக்கார் அறிவுடையார்.

> "ஆக்கம் கருதி முதலிழக்கும் செய்வினை
>
> ஊக்கார் அறிவுடை யார்"[58]

வாணிபக் கண்ணோட்டத்தில் பொருளைப் பற்றிய கருத்துக்கள் இவை. பொருள் அல்லது செல்வம் என்பது மக்கள் யாவருக்கும் வேண்டும். திருவள்ளுவர்க்கும் இம்மை, மறுமை என்ற இருமையிலும் நம்பிக்கை உண்டு. இரண்டிலும் மனிதன் முழுமையாக எல்லா நலன்களையும் பெற வேண்டும். தமிழ்ச் சான்றோர்களுக்கு அறம், பொருள், இன்பம், வீடு என்ப உறுதிப்பொருள்கள். பொருள் என்ற ஒன்று பெற்றுவிட்டால், எல்லாம் கிடைத்துவிடும் என்பதே திருவள்ளுவரின் முடிந்த முடிவு. இம்மையில் பொருள்கொண்டு, அறத்தையும் காமத்தையும் பெறலாம். பொருள்பெற்ற அருள் கொண்டு வீடு பெறலாம். சிறப்புடைய பொருளை மிகுதியாக ஈட்டியவருக்கு ஏனைய இரண்டும் எளிதில் ஒருசேரக் கிடைக்கும். இதனைத் திருவள்ளுவர்,

> “ஒண்பொருள் காழ்ப்ப இயற்றியார்க்கு எண்பொருள்
> எனை இரண்டும் ஒருங்கு”[59]

எனப் பொருளின் இன்றியமையாமையினை அறத்துப்பாலிலேயே எடுத்துக் கூறி விட்டார். பொருள் ‘இல்லாதவர்க்கு இவ்வுலக வாழ்வு இல்லாதவாறு போல[60] அருள் இல்லாதவர்க்கு அவ்வுலக வாழ்வு இல்லை என்று திட்டமாகக் கூறுகின்றார்.

பொருளின் தனிச்சிறப்பினை உணர்ந்திருந்தாலும், திருவள்ளுவர்க்குப் பொருள் என்பது முடிந்த முடிவு அன்று. அது ஒரு கருவியாகும். வாழ்க்கையைச் சுவைத்து வாழ்வதற்கும், பலர் மத்தியில் மதிப்புடன் வாழ்வதற்கும் கையில் பணம் தேவை. ‘பணம் இல்லாதவன் பிணம்’, பணம் இல்லாதவனுக்குச் சமுதாயத்தில் மதிப்பே இல்லை. ‘பணம் பந்தியிலே குணம் குப்பையிலே’, ‘ஏழைசொல் அம்பலம்

ஏறாது' பணம் இல்லாதவனை இல்லாளும் வேண்டாள்; பெற்றெடுத்த தாயும் வேண்டாள். பொருள் இல்லதவனை, வேறு எல்லா குணங்களும் பெற்றிருந்தாலும் இகழ்வர்; ஆனால் செல்வரை வேறு நல்லகுணம் இல்லாவிட்டால் சிறப்புச் செய்வர்.

"இல்லாரை எல்லோரும் ஏள்ளுவர் செல்வரை

எல்லாரும் செய்வர் சிறப்பு"[61]

வாழ்க்கையில் ஒருமதிப்பினைப் பெற்றுத் தருகின்றது. அரிஸ்டாட்டில் முதன் முதலில் கூறியது போலப் பணத்தின் பயன்பாட்டு மதிப்பினையும் பறிமாற்ற மதிப்பினையும் நன்கு அறிந்தவர். பணம் கொடுத்துப் பிறபொருளுடன் மாற்றிக் கொள்வதை வணிகரைப்பற்றிக் குறிப்பாக சுட்டிக் காட்டினார். பணம் படைத்தவனுக்குப் பணம் ஈட்டித்தரும் மதிப்பினை அழகாகவே விளக்குகின்றார்.

ஒரு பெரிய பணக்காரன் வீட்டில் வரவேற்பு. பலர் காரில் வந்து இறங்குகிறார்கள். ஒருவர் சாதாரண உடை உடுத்தி நடத்து நடைதளர்ந்து வந்து நிற்கின்றார், 'வா' என்று சொல்ல ஆள் இல்லை. அவரே திரும்பிச் சென்றார் நன்றாக உடுத்தி, காரில் வந்து இறங்கினார். 'வாருங்கள், வாருங்கள்' என்று அமோக வரவேற்பு. கையில் காசு இல்லாதவனை மனிதன் தானே என்று மதிப்புத்தருவார் யாரும் உலகில் இல்லை. கையில் பணம் இருந்தால்தான் 'மதிப்பு' வருகின்றது. ஆளாகப் பிறர் கண்ணுக்குத் தேவையான தோற்றம் அளிக்கின்றனர். இதனைத்தான்,

"பொருள்அல் லவரைப் பொருளாகச் செய்யும்

பொருள்அல்லது இல்லை பொருள்"[62]

எனக் குறிப்பிட்டுள்ளார் வள்ளுவர். இருக்கும் இடமே தெரியாது இருந்த பல வளைகுடா நாடுகள், எண்ணெய்வளத்தால், வல்லரசுகளால் மதிக்கத்தக்க நிலையைக் காண்கிறோம். வளரும் நாடுகள், பொருள்வளம் பெருகச்செய்து உலக அரங்கில் பிறர் மதிக்க வாழவேண்டும் என்று தானே நாளும் முயன்று வருகின்றன.

திருவள்ளுவர்க்குப் பொருள் மதிப்பினை மட்டும் ஈட்டித் தருகின்ற ஒன்று அன்று மன அமைதியைக் கொடுத்துப் பென்ஹாம் கூறியவாறு, இன்பத்தையும் தருகின்றன ஒன்றாம். 'செல்வம் என்பது சிந்தையின் நிறைவு' என்பார்கள். 'நிதிமேல் நின்ற மணம்' போல் கவலையற்று வாழப்பொருள் பயன்படுமாம். பொருளைப் பயன்படுத்தாது போனாலும், கையில் பொருள் வைத்துக் கொண்டு, ஒரு செயலைத் தொடங்குவது மன அமைதியுடன் மனமகிழ்ச்சியையும் தருமாம். கையிலே பொருள் வைத்துக்கொண்டு ஒரு தொழிலைத் தொடங்குவது, மலைமீது ஏறிப் பயம் இன்றிக் கீழே நடக்கும் யானைப் போரைக்கண்டு களித்தது போன்றது:

> "குன்றேறி யானைப்போர் கண்டற்றால் தன்கத்துஒன்று
> உண்டாகச் செய்வான் வினை"[63]

வாள் எட்டின மட்டும் பாயும், பணம், பாதாளம் வரைபாயும்' என்பது நமது நாட்டில் வழங்கி வரும் முதுமொழி. பணம் எனும் கருவி கொண்டு பகைவரின் செருக்கினை அழிக்கலாம். இது தனிமனிதனுக்கும் பொருந்தும், வல்லரசக்கும் பொருந்தும். பணத்தால் இன்று ஏவுகணைகளைச் செய்து குவிக்கின்றன வல்லரசுகள் பணபலத்தால் அவை பகைவர் நாட்டின் மீது பாய்ந்து சென்று அரண்களை அழிக்கும் திறன் உடையன. எனினும் இவைகளினும் ஆற்றல் உடையது பொருள்பலம். பொருள்

நாம் நினைக்கும் இடத்திற்கும் சென்று, அங்கே பகைவர் செருக்கினை அழிக்கும். இங்கே பொருளைப் பொய்க்காத என்ற பொருளில் 'பொய்யா விளக்கம்' என்று குறிப்பிடுவதைச் சிந்திக்க வேண்டும். பொருளாகிய வாய்மையே வெற்றி பெரும் என்று எண்ணுகின்றார்.

> "பொருள்என்னும் பொய்யா விளக்கம் இருள்அறுக்கும்
> எண்ணிய தேயத்துச் சென்று"[64]

பொருளைவிடப் பகைவரின் செருக்கை அறுத்தொழிக்க வல்ல கூர்மையான வாள் பிறிது ஒன்று இல்லை[65] எனவும் கூறுவர்.

இந்த வகையில் பொருளின் இன்றியமையாமை, அதனை ஆக்கும் வகைபற்றி எல்லாம் திருவள்ளுவர் 'பொருள் செயல்வகை' என்ற அதிகாரத்தில் விரிவாக எடுத்துரைக்கின்றார்.

திருவள்ளுவர் கண்ணால் காணக்கூடிய பணம், பொருள் முதலியனவற்றை மட்டுமே செல்வமாகக் கொள்ளவில்லை. எந்த வகையில் பணம் எனும் செல்வம் நாட்டின் முன்னேற்றத்திற்கும், மனிதனின் நலனுக்கும் அரசின் வலிமைக்கும் தேவையோ அதைப் போலவே கல்வி, கேள்வி, அறிவுடைமை முதலிய பிறவற்றையும் செல்வம் எனக் கொண்டு, அவையும் தேவை என்று கூறிகின்றார்.

மேலை நாட்டினர் பொருளைப் பொருளுக்காகவே தேடுவது உண்டு. அணுகுமுறை சற்று மாறுபட்டதாகத் தோன்றுகின்றது. பொருள் அவசியமானதுதான்; ஆனால், பொருள்தான் வாழ்க்கையே என்று ஒருவன் எண்ணி விடக்கூடாது. மற்றும் பொருள் அற்பர்கள் கையிலும் உண்டு. பிற உயிர்களுக்காக இரக்கம் கொள்ளும்

அருள் உடைமையே உண்மையான செல்வம் ‘பொருட்செல்வம் பூரியார் கண்ணும் உள’[66] என்றும் கூறுவார்.

செல்வம் சிறந்தது தான். ஆனால், மேலைநாட்டார் கூறுவதைப் போலவே நில்லாது நீங்கிவிடும். ஒருவனுக்கு உழைப்பு என்று கூறப்படும் உள்ளமே நீங்காத செல்வம். உழைப்பே அது உருவாக்கும் முதலைவிடச் சிறந்தது. ரிக்கார்டோவும், கார்ல்மார்க்சும் உழைப்புப் பற்றிக் கூறியன நம் காதில் ஒலிக்கின்றன.

“உள்ளம் உடைமை உடைமை பொருளுடைமை
நில்லாது நீங்கி விடும்”[67]

அதனால் பொருள் என்னும் கருவியின் தன்மை இது. உன் கையில் உள்ளது. அதனைத்தக்க வழியில் பயன்படுத்துக என்று சொல்லுகின்றார். விஞ்ஞான அறிவை ஆக்க வேலைக்கும் பயன்படுத்தலாம்; அழிவு வேலைக்கும் பயன்படுத்தலாம்.

“பொருள் ஆட்சி போற்றத்தார்க்கு இல்லை”[68]

பொருளை ஆளும் முறையும் யாது? பொருள் நிலையில்லாதது. அதனால் நிலையில்லாத பொருள்கொண்டு நிலைபேறுடைய செயலைச் செய்க என்பதனை.

“அற்கா இயல்பிற்றுச் செல்வம் அதுபெற்றால்
அற்குப ஆங்கே செயல்”[69]

இக்குறள் வழிக் கூறியுள்ளார்.

இது பொருள் போற்றி வாழும் நெறி. நிலைத்து நிற்குமாறு பொருள் கொண்டு என்ன செய்ய, ‘முதல்’ வைத்து உற்பத்தியைப் பெருக்கு; பிறர்க்குப் பகிர்ந்து கொடு; தொழிலை விருத்தி செய்; பலருக்கு பேருக்கு வேலைவாய்ப்புக் கிடைக்குமாறு

முதலீட்டைப் பெருக்கித் தொழிலை விருத்தி செய்; வேலைவாய்ப்பினைப் பெருக்கு. பசியைப்போக்கி வறுமையை நாட்டிலிருந்தே ஒழித்து என்றும் நிலைத்து நிற்கக்கூடிய புகழினைத் திசைதோறும் பரப்புக என்று பொருள் படைத்து வாழும் நெறியினைத் திருவள்ளுவர் கூறுகின்றார்.

செல்வம் என்பது அழியுந்தன்மையுடையது. அது ஓர் இடத்திலே தங்கி நிற்க விட்டு விடக்கூடாது. உடலில் இரத்த ஓட்டம் போல் எங்கும் ஓடிப்பரவிப் பயன்படவேண்டும். செல்வத்தின் பயன் துய்த்தல் (நுகர்தல்) அப்படி நுகராமல் ஒருவன் பாாத்த இடமெல்லாம் பணத்தைத் தேடிப் பரப்பிவைத்து இறந்து போனால் அவனுக்கும் பிணத்துக்கும் பணத்தைப் பொறுத்தவரை ஒரு வித்தியாசமும் இல்லை.

"வைத்தான் வாயண்சான்ற பெரம்பொருள் அஃதுண்ணான்
செத்தான் செய்க்கிடந்தது இல்"[70]

பணம் ஒரு கருவியாதலின், அதன் பயனை உயிருள்ள போதே, நுகர வேண்டும், இறந்த பின்னர், நீயே சம்பாதித்ததாக இருப்பினும், அந்தப் பொருள் கொண்டு உன்னால் செய்யக் கூடியது உலகில் ஒன்றுமில்லை; வாழ்க்கையினால் செல்வத்தை நன்கு பயன்படுத்தினால் பொருள் வளம் பெருகும் என்பார் திருவள்ளுவர்.

## தொழில் நிர்வாகம்

தொடக்க நாளில் மேலை நாட்டிலும், ஆடம்ஸ்மித் கூறியதைப் பின்பற்றிப் பொருள் உற்பத்திக்கு நிலம், உழைப்பு, முதல் (Land, labour and capital) என்ற மூன்றும் முக்கிய காரணிகளாக அமைகின்றன என்று பேசியும் அவை குறித்து

ஆராய்ந்தும் வந்தனர். பின்னர் தொன்மை நூல் மறுமலர்ச்சியின் தந்தை எனப் பெரிதும் கொண்டாடப்படும் ஆல்பர்ட் மார்ஷல் 'இம் மூன்று மட்டும் போதாது, இவைகளோடு நிர்வாகம் (organisation) என்பதையும் சேர்த்துப் பார்க்க வேண்டும்' என்று தாம் எழுதிய 'பொருளியல் கொள்கைகள்' (principles of economics) என்ற புகழ் பெற்று விளங்கும் நூலில் குறிப்பிட்டார். அன்று முதல் நிர்வாகத்தையும், ஓர் ஆக்கக் கருவியாகக் கொண்டு ஆய்ந்து வருகின்றது பொருளியல் உலகம்.

'நிர்வாகம்' எனப் பொதுவாகக் குறிப்பிடப் பெற்றிருந்தாலும் இங்கே இது தொழில் நிர்வாகத்தையே குறிப்பிடுகின்றது. இந்நிர்வாகம் பற்றி மேலை நாட்டினர் நாள்தோறும் ஆய்ந்து, அனுபவத்தோடு கண்ட உண்மைகளை நெறிமுறைகளாக வழங்கி வருகின்றனர்.

> "ஒரு தொழிலைத் தனியாரும் தொடங்கி நிர்வாகம் செய்யலாம்; பலரும் சேர்ந்து கூட்டாகக் கண்காணிக்கலாம். எல்லாம் தேசிய மயமாக்கப்பட வேண்டும் என்று பேசப்படும் இந்த நாளில், நம் நாட்டில் பல தொழிலை அரசே முன் நின்று ஆரம்பித்துத் தன் பார்வையின் கீழ் வைத்துள்ளது. மற்றும் படித்து வேலை இன்றிருக்கும் இளைஞர்களுக்கு அரசே முதல் கொடுத்துத் தொழில் தொடங்கப் பெருத்த உதவியைச் செய்து வருகின்றது. எங்கும் தொழிற்சாலைகள் அமைக்கப் பெற்றுத் தொழிற்புரட்சி நடந்து வரும் இக்காலத்தில் தொழில் நிர்வாகம் பற்றி வானொலி, தொலைக்காட்சி மூலமாகவும் முதலாளி – தொழிலாளி

உறவு தொழில் நிர்வாகம், தொழில் வளர்ச்சி பற்றிய பல நாட்டினர் எழுதும் தொழில் நிர்வாகம் பற்றிய நூல்களுள் நாள்தோறும் வெளிவந்து கொண்டே இருக்கின்றன"[71]

இந்த சூழ்நிலையில், திருக்குறளில் தொழில் முனைவோர் (Entrepreneur) தொழில் நிர்வாகம் பற்றி அறிந்து கொள்ளக் கூடிய கருத்துக்கள் யாவை என்பது பற்றிக் காண்போம்.

திருக்குறள், தமிழர் நாகரிகம் தலைதூக்கி நின்ற காலத்தில் தோன்றிய நூல். ஆயினும் அக்காலத்தில் தமிழ்நாட்டில் நிலவிய வாணிபம், தொழில் முதலியன பற்றி ஒன்றும் குறளில் பேசப்படவில்லை. வணிகத்தைப் பற்றிய குறிப்பு நடுவுநிலைமை எனும் அதிகாரத்தில் வருகின்றது, பொருட்பாலில் அரசியலில் அரசர் தான்மேற்கொண்ட வினையை எப்படி முடிப்பது, அதற்கு யாரைத் தெளிந்து எடுத்து ஆள்வது என்று குறிப்பிடுகின்றார். வலியறிதல், காலம் அறிதல், போன்ற அதிகாரங்களில் சில குறிப்புக்களைத் தருகின்றார். தெரிந்து செயல்வகை, தெரிந்து தெளிதல், தெரிந்து வினையாடல், (47, 51, 52) என்ற மூன்று அதிகாரங்களில் விளக்கமாகப் பலவற்றை எடுத்துரைக்கிறார்.

## இருவகைப் பாகுபாடு

இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் அவர் கூறிய கருத்துக்கள் இன்றைக்கும் நமக்குத்துணை செய்வனவாக இருக்கின்றன. மனித இயல்பினை நன்கு அறிந்து திருவள்ளுவர் கூறுவதால், அவர் கருத்துக்கள் என்றைக்கும் பொருந்துவனவாக உள்ளன.

"இக்காலத்தில் புதியதாகத் தொழிலைத் தொடங்க முனைவோருக்கும், தொடங்கி நடத்திச் செல்லும் நிர்வாக இயக்குநர்க்கும், மிகவும் உதவி செய்வனவாக அமைந்துள்ளன. திருவள்ளுவர் மனித இயல்பினை உணர்ந்து என்றும் மாறாத சில நெறிமுறைகளைச் சுட்டிக்காட்டுவதால், இக்காலத்தில் முனைவோர்க்கும், தொழில் மேலாண்மையாளர்க்கும் பொருந்தி வருகின்றன. மற்றும் இவ்வதிகாரங்களில் வரும் கருத்துக்களைத் தமிழ்நாட்டுப் பொருள் நூல் வல்லார் பேராசிரியர் சி. வேலாயுத முதலியார் தம் நூலில் பெரிதும் பாரட்டி எழுதியுள்ளார்"[72]

திருக்குறளில் காணப்படும் தொழில் தொடர்பான கருத்துக்களை இங்கே,

1. தொழில் முனைவோர் (Entrepreneur)
2. தொழில் சாலை மேல் ஆணையாளர் (Managing Execuetor – Administrator)

என இரண்டாகப் பிரித்துக் காண்போம்.

## தொழில் முனைவோர்

முதலில் தொழில்முனைவோரை எடுத்துக் கொள்வோம். அரசாங்கம் ஒரு தொழிலைத் தொடங்கப் பணம் கொடுக்கின்றது என்று வைத்துக் கொள்வோம். தொழிலுக்குத் தேவையான பிறவற்றைப் பற்றியும் எண்ணிப் பார்க்க வேண்டும். சிலர் தம்முடைய வலிமை இவ்வளவு என்று அறியமாட்டார்கள். 'ஆழம் தெரியாமல் காலை விட்டுவிடுவார்கள்' பிறகு தொடங்கிய வேலை இடையில் முறிந்து போகத் தொடங்கிய தொழிற்சாலையை முடிக்க முடியாமல் துன்புறுவார்கள்.

"உடைத்தம் வலியறியார் ஊக்கத்தின் ஊக்கி

இடைக்கண் முறிந்தார் பலர்"[73]

அதனால், எண்ணித் துணிககருமம், 'துணிந்தபின் எண்ணுவம் என்பது இழுக்கு' எண்ணினால் ஆத்திரம் குறையும். எந்தத் தொழிலைத் தொடங்குவது என்ற தெளிவு பிறக்கும். பின்னால் வரக்கூடிய இகழ்ச்சியைத் தவிர்க்கலாம்.

"தெளிவி லதனைத் தொடங்கார் இளிவென்னும்

ஏதப்பாடு அஞ்சு பவர்"[74]

அதனால் ஒரு தொழிலைத் தொடங்கு முன்னர், அதற்கு வைக்க வேண்டிய முதலீடு, பின்னர் அதன் உற்பத்தித்திறன், மொத்த வருமானம், நிகர லாபம் ஆகியன பற்றி ஒரு விரிவான அறிக்கை தயார் செய்து கொள்ள வேண்டும். (Project Report)

அழிவதூஉம் ஆவதூஉம் ஆகி வழிபயக்கும்

ஊதியமும் சூழ்ந்து செயல்"[75]

'சூழ்ந்து செயல்' என்றார் - இதன்பொருள் அனுபவம் பெற்றவரையும் கலந்து ஆலோசித்து உன் தொழிலைத் தொடங்குக என்பது பொருள். அனுபவம் வாய்ந்தவருடன் கலந்து பேசித்தொடங்கினால், அரிய செயல் ஒன்றுமே இல்லை உலகில்.

"தெரிந்த இனத்தொடு தேர்ந்தெண்ணிச செய்வார்க்கும்

அகும்பொருள் யாதொன்றும் இல்"[76]

ஒரு தொழிலைச் செய்யத் தொடங்கும்முன், இவைகளோடு, ஏற்ற காலம், இடம் முதலியவற்றையும் சீர்தூக்கிப் பார்க்க வேண்டும். குளிர்பானம் செய்வதற்கு வெளிநாட்டிலிருந்து இயந்திரங்களை வரவழைத்துக் குளிர் காலத்தில் அத்தொழிலைத் தொடங்கினால் எப்படிப் போட்ட முதலை எடுக்க முடியும். 'பருவத்தே தொழில்செய்' என்பார்கள் 'பருவத்தோடு ஒழுகு' என்பார்கள். பருவம் அறிந்து தொழில் செய்வது செல்வத்தைப் போகவிடாமல் இறுக்கக்கட்டி வைக்கும் கயிறு ஆகும்.

"பருவத்தோடு ஒட்ட ஒழுதல் திருவினைத்

தீராமை ஆர்க்கும் கயிறு"[77]

'கொல்லன் தெருவிலே ஊசிவிற்ற கதை' என்பார்கள் நாம் எங்கே எந்தத் தொழிலைத் தொடங்க வேண்டும்; எங்கே கொண்டுபோய் நிறைய லாபத்திற்கு விற்கலாம் என்பதையும் தொழில் முனைவோர் சிந்திக்க வேண்டும். தொழிலாளிகளே கிடைக்காத இடத்தில், தண்ணீர் கிடைக்காத பொட்டல் நிலத்தில் தொழிலைத் தொடங்க முடியுமா? பருத்தி மிகுதியாக கிடைக்கும் கோவையில் பஞ்சாலை தொடங்க வேண்டும். தேங்காய் நிறைய கிடைக்கும் கன்னியாகுமரியில் தேங்காய் எண்ணெய் சுத்திகரிப்புத் தொடங்க வேண்டும். வேர்க்கடலைச் சுத்திகரிப்பு ஆலையைத் தென்னார்க்காடு மாவட்டத்தை விட்டுவிட்டுத் தெற்கே கொண்டு போனால் கட்டுப்படியாகுமா என்று சிந்தித்துப் பார்க்க வேண்டும்.

அதனால் தொழிலைத் தொடங்குகின்றவன், காலத்தையும் மனத்தில் கொள்ள வேண்டும்; தக்க இடத்தையும் தேர்வு செய்து தக்க தொழிலைத் தொடங்க வேண்டும் தொடங்கினால், இந்த உலகத்தையே கட்டி ஆளலாம் எனத் திருவள்ளுவர் கூறுகின்றார்.

"ஞாலம் கருதினுங் கைகூடும் காலம்

கருதி இடத்தாள் செயின்"[78]

வியாபாரிக்கு லாபத்தின் மேல்தான் கண் இருக்கும். எந்தத் தொழிலைத் தொடங்கினால் நிறைய பணம் வரும் என எண்ணுவது மனித இயல்பு. ஆனால், ஒருவன் தொடங்கும் தொழில் மக்களுக்குப் பிடிக்காத ஒன்றாக இருந்தால், மக்கள் வெறுப்பார்கள். பணத்திற்குக் கேடுதான். மக்கள் விரும்பும் தொழிலைத் தொடங்க வேண்டும். பணத்தின் பொருட்டு இகழத்தக்க தொழிலைத் தொடங்கக் கூடாது. இதனை,

"எள்ளாத எண்ணிச் செயல்வேண்டும் தம்மொடு

கொள்ளாத கொள்ளாது உலகு"[79]

என்ற இக்குறள் உணர்த்துகிறது.

## தொகுப்புரை

'தொழில் என்பதனைச் சுட்டும்போது வள்ளுவர் உழவுத்தொழிலை முதன்மைப் படுத்தியும் போர்த்தொழிலைச் சிறப்பித்தும் கூறியுள்ளார். உழவுத்தொழிலுக்கு அடிப்படைக் காரணிகளான நிலம், நீர்வளம் குறித்தும் உழவுத்தொழில் நிகழ்த்த உதவும் உழைப்பு அதனால் கிடைக்கப்பெறும் செல்வம் குறித்தும் வள்ளுவர் வரிவாக விளக்கியுள்ளார்.

'தொழில் நிர்வாகம்' என்பதனை அக்காலத்திலிருந்த உழவுத்தொழில், வேளாண்மைத் துணைத் தொழில்கள், வாணிபம், கொல்லத்தொழில், கால்நடை பராமரிப்பு போன்றவற்றில் பொருத்தி ஆய்வு செய்ய இடமிருப்பினும், வள்ளுவத்தில்

உழவுத்தொழில் பற்றியே விரிவாகக் குறிப்பிட்டுள்ளதால், ‘தொழில் நிர்வாகம்’ முழுவதுமாக உழவுத்தொழிலை மையப்படுத்தியே ஆய்வாளர் விளக்க முயன்றுள்ளார்.

தொழில் நிர்வாகத்தைத் தொழில் முனைவோர், நிர்வாக இயக்குநர் என்ற இருபெரும் பிரிவுகளாகப் பாகுபாடு செய்து, இவ்விரு தரப்பு குறித்தும் வள்ளுவர் சுட்டியுள்ள கருத்துக்களைத் திரட்டித் தொகுத்துள்ளார் ஆய்வாளர்.

தொழில் முனைவோருக்கான சில தகுதிப்பாடுகள் குறித்தும், நிர்வாக இயக்குநர்கள் மேற்கொள்ளவேண்டிய நடவடிக்கைகள் குறித்தும் வள்ளுவர் மொழிந்துள்ள கருத்துக்களை வகை – தொகை செய்து இந்த இயலில் விளக்கப்பட்டுள்ளது.

## அடிக்குறிப்புகள்

1. சு. சக்திவேல், நாட்டுப்புறவியல், ப. 180.
2. சண்முகசுந்தரம் (தொ.ஆ.), தமிழ்நாட்டு பழமொழிகள், ப. 32.
3. இரா. சந்திரசேகரன், ப. சரவணன், கொங்குநாட்டாரியல் - பழமொழிகள், ப. 28.
4. மு. அருணாசலம் பிள்ளை (உ.ஆ.), தொல்காப்பியம் - பொருளதிகாரம் - அகத்திணை இயல் ப. 70.
5. மேற்கோள்: ப. முருகன், திருவள்ளுவர் பொருளியில் சிந்தனை, ப. 72.
6. மேலது, ப. 73.
7. கி.வா. ஜகந்நாதன் (ப..ஆ.), திருக்குறள் ஆராய்சிப் பதிப்பு, ப. 40.
8. நா. வானமாமாலை, தமிழ்நாட்டுப்புறப் பாடல்கள், ப. 112.
9. கி.வா. ஜகந்நாதன் (ப..ஆ.), மு.நூ. ப. 20.
10. ந.மு. வேங்கடசாமி நாட்டார் (உ.ஆ.), இளங்கோவடிகள் இயற்றிய சிலப்பதிகாரம், ப. 45.
11. கி.வா. ஜகந்நாதன் (ப..ஆ.), மு.நூ., ப. 15.
12. மேலது, ப. 313.
13. மேலது, ப. 32.
14. மேலது, ப. 624.
15. மேலது, ப. 677.
16. மேலது, ப. 679.
17. மேலது, ப. 684.
18. ச.வே. சுப்பிரமணியன் (ப.ஆ.), சங்க இலக்கியம் மூலம் முழுவதும். ப. 80.
19. கி.வா. ஜகந்நாதன் (ப..ஆ.), மு.நூ., ப. 134.

20. மேலது, ப. 241.

21. மேலது, ப. 268.

22. மேலது, ப. 302.

23. மேலது, ப. 340.

24. மேலது, ப. 400.

25. மேலது, ப. 402.

26. மேலது, ப. 404.

27. மேலது, ப. 507.

28. மேலது, ப. 530.

29. மேலது, ப. 313.

30. மேலது, ப. 315.

31. மேலது, ப. 322.

32. மேலது, ப. 617.

33. ச.வே. சுப்பிரமணியன் (ப.ஆ.), மு.நூ., ப. 73.

34. பாரதியார், பாரதியார் கவிதைகள், ப. 180.

35. சண்முகசுந்தரம் (தொ. ஆ.), மு.நூ., ப. 312.

36. கி.வா. ஜகந்நாதன் (ப..ஆ.), மு.நூ., ப. 539.

37. மேலது, ப. 540.

38. ந.மு.வேங்கடசாமி நாட்டார் (உ.ஆ.), நல்வழி, ப. 18.

39. கி.வா. ஜகந்நாதன் (ப.ஆ.), மு.நூ., ப. 540.

40. மேலது, ப. 402.

41. மேலது, ப. 376.

42. மேலது, ப. 86.

43. ச.வே. சுப்பிரமணியன் (ப.ஆ.), மு.நூ. ப. 619.

44. கி.வா. ஜகந்நாதன் (ப..ஆ.), மு.நூ., ப. 84.

45. மேலது, ப. 443.

46. மேலது, ப. 542.

47. மேலது, ப. 526.

48. ச.வே. சுப்பிரமணியன் (ப.ஆ.), மு.நூ., ப. 578.

49. கி.வா. ஜகந்நாதன் (ப..ஆ.), மு.நூ., ப. 542.

50. மேலது, ப. 317.

51. மேலது, ப. 602.

52. மேலது, ப. 134.

53. மேலது, ப. 20.

54. மேலது, ப. 603.

55. மு. அருணாசலம் பிள்ளை (உ_.ஆ.), தொல்காப்பியம், பொருளதிகாரம், அகத்திணை இயல், ப. 31.

56. கி.வா. ஜகந்நாதன் (ப..ஆ.), மு.நூ., ப. 403.

57. மேலது, பக். 267, 280, 555, 690.

58. மேலது, ப. 274.

59. மேலது, ப. 413.

60. மேலது, ப. 154.

61. மேலது, ப. 409.

62. மேலது, ப. 408.

63. மேலது, ப. 412.

64. மேலது, ப. 409.

65. மேலது, ப. 412.

66. மேலது, ப. 151.

67. மேலது, ப. 339.

68. மேலது, ப. 157.

69. மேலது, ப. 199.

70. மேலது, ப. 526.

71. ப. முருகன், திருவள்ளுவரின் பொருளியல் சிந்தனைகள், ப. 70.

72. கோ. சுரேஷ், வள்ளுவரும் வாழ்வியலும், ப. 81.

73. கி.வா. ஜகந்நாதன் (ப.ஆ.), மு.நூ., ப. 278.

74. மேலது, ப. 274.

75. மேலது, ப. 273.

76. மேலது.

77. மேலது, ப. 283.

78. மேலது.

79. மேலது, ப. 277.

# இயல் ஆறு

# திருக்குறளும் நிர்வாகக் கூறுகளும்

ஒரு நிர்வாகத்தில் வருவாய், நிதியாட்சி, செலவு ஆகிய மூன்றும் ஒன்றைத் தழுவியதாக ஒன்று எனத் தொடர்புபடுத்தப்பட்டு இணைந்து இருக்கும். இதனை வள்ளுவர் இயற்றல், ஈட்டல் - காத்தல், வகுத்தல் எனச் சுட்டியுள்ளார். இம் மூன்று குறித்தும் வள்ளுவர் விளக்கியுள்ளமையைத் தொகுத்துக் கூறும் விதமாகவும் தற்கால நிர்வாக முறைகளோடு அவை பொருந்திவரும் பாங்கு குறித்து விளக்கும் விதமாகவும் இந்த இயல் அமைகிறது.

## நிதியாட்சி

தொடக்கக் காலத்தில் ஆடம்ஸ்மித், ஆல்பர்ட் மார்ஷல் போன்ற பேரறிஞர்களின் கோட்பாட்டின் அடிப்படையில் நிலம், உழைப்பு, மூலதனம், நிர்வாகம் முதலிய நான்கு காரணிகளைக் கொண்டு, உற்பத்தியைப் பெருக்கித் தாம் படைத்த உற்பத்தியைப் பகிர்ந்து அளித்தும் தாமும் நுகர்ந்து வாழ்க்கை இன்பம் காண்பதே 'பொருளியல் வாழ்க்கை' எனக் கருதினர்.

தொடக்க நாளில் பொருள் நூலார் உற்பத்திக்கும் வாழ்க்கையின் இன்ப நுகர்வுக்கும் நான்கு காரணிகள் மட்டும் தேவை என எண்ணியிருந்தாலும், விரைவில் பொருள் நூல் வல்லார் நான்கு காரணிகளோடு ஐந்தாவது காரணியாக வேறு ஒன்றும் உள்ளது எனக் கண்டுணர்ந்தனர். அது 'அரசு' என்பதாகும்.

சிறப்பான உற்பத்திக்கும் வளமான பொருள் வாழ்வுக்கும் செம்மையான அரசு தேவை என்பதனைப் பிரஞ்சு நாட்டினைச் சார்ந்த இயற்கைவாதிகளும், மேலை நாட்டினை சேர்ந்த வணிகவாதத்தினரும் எடுத்துக் கூறினர்.

இயற்கைவாதத்தின் தந்தை எனக் கருதப்படும் குவஸ்னே என்பார், அரசியலுக்கும் பொருளியலுக்கும் உள்ள தொடர்பினை உணர்ந்து,

"பொருள் நூலினை அரசியல் பொருள் நூல்"[1]

எனக் குறிப்பிட்டுள்ளார்.

ஆடம்ஸ்மித் என்பார் கி.பி. 18 ஆம் நூற்றாண்டில் அவர் எழுதிய 'பல நாடுகளின் செல்வம்' என்ற நூலில், பொருளியலைத் தனியே பிரித்து, அதனை ஒரு விஞ்ஞானமாகக் கண்டார்.

அரசியலுக்கும் பொருளியலுக்கும் உள்ள நெருங்கிய உறவினை அறிந்திருந்த வள்ளுவர்,

"ஆங்கமைவு எய்தியக் கண்ணும் பயமின்றே
வேந்தமைவு இல்லாத நாடு"[2]

என்று 'நல்ல அரசு இன்றி நல்ல நாடு இல்லை' என்ற கருத்தினைத் தெரிவித்துள்ளார்.

அதாவது, ஒரு நாடு நீர்வளமிக்கதாய், தள்ளா விளைவினைத் தருவதாய், தாழ்விலாச் செல்வரை உடையதாய், நடுவுநிலைமை தவறாத தக்கார் உடையதாய் இருக்கலாம். இருப்பினும், அந்நாடு பொருள் வளத்தால் சிறப்புடையதாய் இருக்க வேண்டுமாயின் அந்த நாட்டுக்கு ஏற்ற அரசு அமைய வேண்டும் என வள்ளுவர் கருதுகிறார்.

அதனால் வள்ளுவர், பொருளியல் கண்ணோட்டத்தில் அரசனையும் ஒரு காரணியாகக் கொண்டு அரசின் இயல்பு பற்றி ஆராய்ந்துள்ளார் எனலாம்.

உற்பத்தி, பகிர்வு, நுகர்தல் எனப் பிறப்பொருளியல் பொருளை ஆராய்வது போலவே அரசருக்கு எவ்வழியில் வருவாய் வருகிறது, அவற்றை எவ்விதத்தில் பெருக்கிக் கொள்கிறார், அதனை மக்கள் நலனுக்காக எவ்வாறெல்லாம் செலவு செய்கிறார் என்றெல்லாம் ஆய்வு செய்தால் அக்கால நிதி நிர்வாக முறையினை உய்த்தறிய இயலும்.

இவ்வாறு தனிச்சிறப்புடன் விளங்கும் பொது நிதியினை டால்டன் போன்ற நிதியியலாளர்கள் நான்காகப் பகுத்துள்ளனர். அவை,

1. பொது வருவாய்
2. பொதுச் செலவு
3. பொதுக் கடன்
4. பொது நிதி ஆட்சி

என்பனவாகும்.

இந்நான்கினையும் வள்ளுவர்,

> "இயற்றலும் ஈட்டலும் காத்தலும் காத்து
> வகுத்தலும் வல்லது அரசு"[4]

எனக் குறிப்பிட்டுள்ள நான்கினோடும் பொருத்திப் பார்க்க வாய்ப்புள்ளது.

தி. முருகரத்தினம்,

"இயற்றலும் ஈட்டலும் இரண்டும் சேர்ந்தது வருவாய். காத்தல், என்பது வள்ளுவர் கூறும் பொருளாட்சி அல்லது நிதியாட்சி வகுத்தல் என்பது பல்வேறு செலவினங்கள்"[5]

என்று ஒப்புமைப்படுத்தி விளக்கியுள்ளார்.

## இயற்றல்

அரசனுக்குப் பொருளே உயிரென்று கௌடல்யர் கூறுவார். அதனால் அவர் பொருள் தேடுவது அரசரின் தலையாய கடமை என எடுத்துரைத்துள்ளார். திருவள்ளுவரும் பொருளின் இன்றியமையாமையினைப் பல இடத்துக் கூறியிருந்தாலும், 'பொருள் செயல் வகை' என்ற அதிகாரத்தில், மிக விரிவாக விளக்கியுள்ளார். அதற்கெல்லாம் தோற்றுவாயாகப் பொருட்பாலின் முதல் அதிகாரத்தில், 'அரசர் தொழில் வரும் வழிகளை மேன்மேல் உண்டாக்கி' என்ற பொருளில் 'இயற்றி' என்று தொடங்குகின்றார். இயற்றுதல் என்பது, பரிமேலழகர் கூறுவதுபோல, 'வருவாய் பெருக மேன்மேலும் தொழிலைப் பெருகச் செய்தல்' எனக்கொள்ள வேண்டும்.

'இயற்றி' என்பதனோடு, 'தெரிந்து வினையாடல்' என்ற அதிகாரத்தில் வரும்,

"வாரி பெருக்கி வளம்படுத்து உற்றவை
ஆராய்வான் செய்க வினை"[6]

என்ற குறளையும் சேர்த்துப் பொருள் காண வேண்டும். 'வாரி பெருக்கி' என்பதற்குப் 'பொருள் வரும் வழிகளை மேன்மேலும் பெருகச் செய்து, அதன் மூலம் நாட்டின் வளத்தைப் பெரிதாக்கி' என்பது பொருள். அதனால் 'இயற்றல்' என்ற சொல் முதலில் அரசன் தொழில் பல தொடங்கிப் பொருள் வளத்தைப் பெருக்க வேண்டியதன் அவசியத்தைக் குறிப்பதாகக் கொள்ளலாம். இதனை அரசரே தொடங்கிய தொழில் மூலம் வரும் வருவாய் என்று கொள்ளலாம்.

அடுத்துப் பொது வருவாயாகக் கீழ்வரும் மூன்று வகைகளைத் திருவள்ளுவர் குறிப்பிடுகின்றார். இவை மூன்றும் தொன்றுதொட்டு நிலவி வரும் அரசு வருவாயாகக் கொண்டு, 'இயற்றல்' என்பதன் கீழ்க்கொண்டு வரலாம்.

> "உறுபொருளும் உல்கு பொருளும்தான் ஒன்னாத்
> தெறுபொருளும் வேந்தன் பொருள்"[7]

எனப் 'பொருள் செயல்' வகை என்ற அதிகாரத்தில் அரசருக்குறிய வருவாயாக இவற்றைக் குறிப்பிடுகின்றார்.

'உறுபொருள்' என்பது அரசருக்கே உரியது; பிறர்க்கு உரியதன்று; சிறப்பாகக் குடிமக்களால் தங்கள் வருவாயில் ஆறில் ஒரு பங்கினைத் தங்கள் 'கடமையாக' அரசனுக்கு இறுக்கப்படுவது; இறையாகச் செலுத்தப்படும் இறைமை; கடமை எனக் கருதிக் கட்டுப்படும் கடமை; இந்த நிலவரி,[8] நாட்டையாளும் அரசுக்கே உரியது. அதனால் அதனை உறுபொருள் எனவும் கூறுவது உண்டு. இங்ஙனம் நிலவரி உலகின் பல பாகங்களிலும் பன்னெடுங் காலமாகவே செலுத்தப்பட்டு வந்திருக்கின்றது.

நிலவரியைத் தவிர, வேறுசில வருவாயையும் உறுபொருள் என்பதன் கீழ் அடக்கலாம். நிலத்தில் பல காலம். புதைந்து கிடந்து பின்பு கண்டு எடுக்கப்பட்ட புதை பொருள் அரசுக்கே உரியது. இது தவிர, சந்ததியார் இன்றிச் செல்வர்கள் இறந்துபடின் அவர்கள் செல்வம் அனைத்தும் அரசரை முறைப்படிச் சென்று சேரவேண்டும் என்பது பண்டையோர் விதி. அதனால், இத்தகைய இனங்களை 'உறுபொருள்' என்ற தலைப்பின் கீழ்த் திருக்குறள் உரையாசிரியர்கள் அடக்குவர்.

அடுத்துக் குறிப்பிடப்படுவது 'உல்கு' எனப்படும் சுங்கவரியாகும். இந்தச் சுங்கவரி தமிழ்நாட்டில் பண்டைக் காலந்தொட்டே வசூலித்து வரப்படுகின்றது என்பதனைச் சங்க இலக்கியங்கள் பட்டினப்பாலை[9] (124-125) பெரும்பாணாற்றுப்படை[10] (80-81) கொண்டு உணரலாம்.

'ஒன்றார்த்தெறுபொருள்' என்பதைத் 'திறைப்பொருள்' எனவும், 'கொண்டி' எனவும் நம் முன்னோர் குறிப்பிட்டு வந்தனர். பகைவர் செலுத்தும் திறை எனவும் பகைவர் நாட்டை அழித்துக் கொண்டு வரும் 'கொண்டி' எனவும் கூறுவது உண்டு. பண்டைய நாளில் சிற்றரசர்கள் பேரரசர்களுக்குக் கப்பம் செலுத்தி வாழ்ந்துவருவதும் செலுத்த முடியாத காலத்தில் வல்லரசுகளால் கொள்ளையடிக்கப்படுவதும் பழங்காலத்தில் எங்கும் நிலவிய அரசியல் கொண்டியாகும். இதுவும் இயற்றலின் கீழ்வரும் அரசு வருவாயாகும்.

'உறுபொருள்' என்ற அரசனுக்கே உரிய நிலவரியைத் தவிர சாணக்கியர் தாம் எழுதிய அர்த்தசாத்திரத்தில், உப்புவரி, மீன்வரி, காட்டுவரி போன்ற வேறு சில வரிகளையும் குறிப்பிடுகின்றார். மது, சூது, விலைமகளிர் கூடச் சாணக்கியர்

பார்வைக்கு வரிவிதிப்பிற்குரியன எனத் தோன்றின. ஆனால், திருவள்ளுவர், மது, சூது, வரைவின் மகளிரை அறவே இகழ்ந்துரைக்கின்றார். இவை மூலம் வருவாய் தேடுவதைத் திருவள்ளுவர் விரும்பவில்லை. மது, சூது விலைமகளிர் முதலியன தீமைதருவன; இவை மூலம் வரும் வருவாய் அறத்தையும் கொடுக்காது; இன்பத்தையும் கொடுக்காது. இத்தகையவற்றை நீக்கி நல்ல அறநெறியில் வரியாக நிதி திரட்ட வேண்டும் என்பார்.

"அறன்ஈனும் இன்பமும் ஈனம் திறனறிந்து
தீதின்றி வந்த பொருள்"[11]

**ஈட்டல்**

'ஈட்டல்' என்பது அரசு வருவாயை 'ஒருவழி தொகுத்தல்' என்று பரிமேலழகர் கூறுவார். மணக்குடவரும் பரிபெருமாள் என்பாரும், இதே கருத்தினை உடையவராகிப் 'பண்டாரம் கூறிற்று' என்று உரையெழுதுகின்றார்கள். பண்டாரம் என்பது கருவூலம் (Treasury) ஆகும். அரசுக்கு வந்து சேரவேண்டிய வருவாய் அனைத்தையும் திரட்டி கருவூலத்தில் கொண்டு சேர்த்தல் எனக்கொள்ளலாம். சங்க காலம் தொட்டே தமிழக அரசின் கீழ் அரசுக்குரிய வரி முதலியவற்றை நெறியறிந்து வசூலித்துக்கொண்டுவர பல அலுவலர்கள் பணிபுரிந்து வந்துள்ளனர். 'ஈட்டலை' யார் செய்தனர் என்று தனியாகத் திருக்குறள் கூறாவிட்டாலும், பட்டினப்பாலை, சிலம்பு முதலியன கொண்டு உல்கு செய்வோர், ஆய்க்கணக்கர், காவிதி (வரியிலார்) போன்ற அதிகாரிகள் இருந்ததையறியலாம்.

வரிவசூலிக்கப்படும் முறைபற்றித் திருவள்ளுவர் நன்கு எடுத்துக்கூறுகின்றார். 'அறநெறி முதற்றே அரசின் கொற்றம்' என்பது தமிழர் கண்ட நெறி. நெறியறிந்து[12] வரிவசூலிப்பது (புறம் 184) பொருளியில் துறையில் தமிழர் கண்ட வரிவாங்கும் நெறி. மலருக்குத் துன்பம் இழைக்காது தேனைச் சேகரிக்கும் வண்டு போலக் குடிமக்களைத் துன்புறுத்தாது வரியை ஈட்டவேண்டும்.[13] பண்டைத்தமிழ் மரபுக்கேற்பவே, தம் அறநெறிக் கொள்கையை விட்டுக்கொடுக்காமல், வரி வாங்கும் போதும் அருளோடும் அன்போடும் வாராத வருவாய் வேண்டாம் என்கிறார் திருவள்ளுவர். இதனை,

> "அருளொடும் அன்பொடும் வாராப் பொருளாக்கம்
> புல்லார் புரள விடல்"[14]

என்ற இக்குறட்பா வழி அறியலாம்.

ஆடம்ஸ்மித் தாம் எழுதிய 'நாடுகளின் செல்வம்' என்ற நூலில் வரிவிதிக்கும் மரபுகளை வகுத்துரைத்தார். (Canons of Taxation) அவைகளே இன்றும் பொதுநிதி இயலில் பெரிதும் பல நாட்டினராலும் பின்பற்றப்பட்டு வருகின்றன. அவை கூறிய நெறிகளில், அரசு விதிக்கும் வரி, 'சுமையாக இருக்கக்கூடாது, எளிதில் செலுத்தக் கூடியதாக அமைதல் வேண்டும். சமமாக இருத்தல் வேண்டும், 'சுண்டைக்காய் கால் பண் சுமைகூலி முக்கால் பணம்' என்று வரியை, வசூலிப்பதற்கு நிறைய பணம் செலவாதல் கூடாது என்பன சில.

மக்களைக் கசக்கிப்பிழிந்து, வரிவசூலிக்கக் கூடாது. குடிமக்கள் அழுது கொண்டே கொடுத்தால், அரசு துன்பப்படவிட்டு நீங்கும். இதனை,

"அழக்கொண்ட எல்லாம் அழப்போம் இழப்பினும்

பிற்பயக்கும் நற்பா லவை"[15]

என்ற குறள் மூலம் உணரலாம்.

மக்கள் தாமாக வந்து வரி செலுத்தக் கூடியதாக வரிச்சுமை அமையவேண்டும். மற்றும் அரசு தன் அதிகாரத்தைப் பயன்படுத்தி மக்களிடமிருந்து கடன்கூடப் பெறக்கூடாது. அரசு குடிமக்களிடத்தில் சென்று கொடு என்று இரந்து நிற்பது, 'வழிப்பறிகாரன், நடுவழியில் வேலோடு நின்று, இருப்பதைப் போட்டுவிட்டு, நகர்ந்து செல்' என்பதற்குச் சமம். இதனை,

"வேலொடு நின்றாள் இடுஎன் றதுபோலும்

கோலொடு நின்றான் இரவு"[16]

எனும் குறள் வழி அறிய முடிகிறது.

இங்ஙனம் வரிவசூலிப்பதற்குத் துணைநிற்கவல்ல பல அறநெறிகளை, பொருட்பாலிலும் திருவள்ளுவர் எடுத்துக்கூற மறக்கவில்லை.

## காத்தல்

'காத்தல்' என்பது பற்றியும் கருத்து வேறுபாடு உண்டு. காத்தல் என்பதற்குப் பகைவர், கள்வர் முதலியவர்களிடமிருந்து பாதுகாத்தல் என்று பொருள் கூறுவார்கள் பரிமேலழகர் போன்ற உரையாசிரியர்கள்.

அரசு, பொது நிதியைப் பிறர் களவாடாமலும் சட்டத்துக்கு விரோதமாக வீண்செலவு செய்யாமலும் பாதுகாக்க வேண்டும். காத்தலைப் பூமியில் போட்டு புதைத்து வைத்துக்கூடக் காக்கலாம். அப்படிச் செய்தால் அந்த அரசினைச்

சிறப்புடைய அரசு என்று பாராட்ட இயலாது. பொருளைக் காத்தல் என்பது உண்மையில் அதனைப் பயனபடுத்தி, ஒன்றை ஒன்பதாகப் பெருக்குவது என்பதுதான் பொருள். விவிலியத்தில் நிலத்தில் புதைத்து வைத்துத் தகப்பனார் கொடுத்த பொற்காசுகளை அப்படியே (Talents) செலவு செய்யாமல் கொடுத்தவனைத் தந்தை பாராட்டவில்லை. தான் கொடுத்த முதலைக் (Talents) கொண்டு வாணிபம் செய்து, லாபம் ஈட்டிப் பன்மடங்காக்கிக் காத்தவனைத்தான் தந்தை பாராட்டினார்[17]. ‘காத்தல்’ என்ற சொல் பாதுகாவல் தந்து ‘வளர்த்தல்’ என்ற பொருள் தரும். இதனைப் பொருளாட்சிப் பொருள் போற்றுவார்க்கு (காப்பார்க்கு) உண்டு என்று கொள்ள வேண்டும்.

“பொருளாட்சி போற்றாக்கு இல்லை அருளாட்சி
ஆங்கில்லை ஊன்தின் பவர்க்கு”[18]

இக்குறளில் அருளாகிய இரக்க உணர்ச்சியினை நன்கு பயன்படுத்தி உயிர்க்கொலை புரியாமலும், ஊன் உண்ணாமலும் இருப்பவர்களே அருளுடைமையைக் காப்பவர்கள் ஆகின்றனர். அதைப்போல பொருளின் பெருமையினை உணர்ந்து அதனை நல்ல வழியில் பயன்படுத்திச் செல்கின்றவர்களே பொருள் பெற்றவர்கள் ஆவார்கள். பொருளைப் போற்றி நல்ல வழியில் செலவிட்டு மேன்மேலும் பெருகச் செய்கின்றவர்களே பொருளுக்கு உரியவர்கள் ஆகின்றார்கள்; அத்தகையோரைத்தான் உண்மையில் பொருளைக் காத்தவர் எனக்கூறு வேண்டும். பூதம் போல் காப்பது, காப்பது ஆகாது. காத்தல் என்பதனை 252 ஆம் குறளுடன் சேர்த்துப் பார்த்தல் வேண்டும்.

பணத்தைக் காத்தல் வேண்டும் என்று கருதி, அரசு அளவுக்கு மிஞ்சிய கருமித்தனம் கொள்ளவும் கூடாது; பொருத்தமில்லாத மான உணர்வும் தேவையில்லை; தகுதியற்ற மகிழ்ச்சியும் தேவையில்லை. சிறப்பாக இங்கே உலோபத் தன்மையைத் தவிர்க்க வேண்டும்.

"இவறலும் மாண்பிறந்த மானமும் மாணா
உவகையும் ஏதம் இறைக்கு"[19]

எனக் காத்தல் என்ற சொல்லுக்கு விரிவான பொருளையே காண்கின்றார். நிலத்தில் புதைத்துக் காத்தல் அன்று; நன்றாகப் போற்றி ஆளப்பட்டுக் காப்பது; தானும் அனுபவிக்காமல் பிறறையும் அனுபவிக்க விடாமல் எல்லாம் பொருளினால் உண்டு என்று கருமியாக இருப்பது அன்று; தானும் உண்டு பகிர்ந்தளித்துப் பிறரையும் வாழவைத்துப் பொருளை வளரச் செய்வதே காத்தலாகும். இதுகுறித்து 'நன்றியில் செல்வம்' என்ற அதிகாரத்தில் விரிவாக விளக்கிக் கூறுகின்றார்.

## வகுத்தல்

பொதுநிதியலில் இறுதியாக வருவது பொதுச்செலவு (Public Expenditure). இதனைத் திருவள்ளுவர் 'வகுத்தல்' என்ற சொல்லால் குறிப்பிடுகின்றார். பொதுவருவாயைப் பல இனங்களாகப் பிரித்துச் செலவு செய்தலை 'வகுத்தல்' என்பார். காத்தவற்றை அறம், பொருள், இன்பங்களின் பொருட்டு விடுத்தல் என்று பரிமேலழகர் விளக்கம் கூறுகிறார்.

முன்னாளில் அறம், பொருள், இன்பம் என்பன உறுதிப்பொருள் எனக் கொள்ளப்பட்டமையால், இதனையே மனத்திற்கொண்டு அறத்திற்காக அரசர் ஒரு பங்கு செலவு செய்யலாம் என்பார்.

இரண்டாவது, பொருள் செலவு. இங்குப் பொருள் என்பது அரசியலையே குறிக்கும். அரசியல் சரிவர நடைபெற, நீதி, நிர்வாகம், காவலுடன் படைசெலவினையும் குறிக்கும். அரசு இயங்கச் செய்யப்படும் செலவு அனைத்தையும் கொள்ளலாம்.

மூன்றாவது, இன்பம்பொருட்டு. இதற்குப் பரிமேலழகர், மக்கள் இன்பம் நுகர்தற்பொருட்டு மண்டபம், வாவி, செய்குன்றம் முதலியன அமைத்தல் என்பார். இவ்வாறு சமூக நலப் பணிக்காகச் செலவிடப்படும் செலவு அனைத்தையும் இதன் கீழ்க்கொண்டுவரலாம்.

பரிமேலழகர் காலத்தில் நிலவிய சூழ்நிலையில் வகுத்தலை மேலேகூறிய மூன்று பிரிவின்கீழ் அடக்க முடியாது. இன்றைய நிதியமைச்சர்களுக்கே எப்படி வகுத்து எல்லோரையும் மகிழ்விப்பது என்பது தானே அவர்கள் முன் நிற்கும் ஒரு கேள்விக்குறி.

மக்கள் நலனையும் அரசர் பெரிதாகக் கொள்ள வேண்டும். தன்னை விட நாட்டின் நலனே பெரிது எனக் கொண்டு செலவிட வேண்டும். அரசன் இன்சொலால் ஈந்தளிக்க வல்லனாக இருக்க வேண்டும். அரசர் கொடை, அருள், செங்கோலோடு தளர்ந்த குடிமக்களைக் காக்கும் ஈகைப் பண்பு உடையவராகவும் இருத்தல் வேண்டும்.

> “கொடையளி செங்கோல் குடியோம்பல் நான்கும்
> உடையான் வேந்தர்க்கு ஒளி”[20]

என அரசருக்கு வரும் வருமானத்தில், குடிமக்களின் நலன் கருதிக் குறைதீர்த்துத் தண்ணளி செய்து, பாதுகாத்துப் போகின்ற அரசரே அரசர்களுக்கு எல்லாம் ஒளி போல்வார் என்று கூறுகின்றார். மக்களின் நலன் பொருட்டுச் செலவு செய்வதும்

பாராட்டப்படுகின்றது. மற்றும் அரசர், இனிய சொல்லுடன், குடிமக்களுக்கு வாரி வழங்கி அவர்கள் நலன் பேணிவந்தால், அரசர் சொல்லைக்கேட்டு, மக்கள் யாவரும் அரசர் வழி நிற்பர். இங்கே மக்கள் நலனும் போற்றப்படும். அரசும் வலிமை பெறும். இதனை,

"இன்சொலால் ஈத்தளிக்க வல்லாற்குத் தன்சொலால்
தான்கண் டனைத்துஇவ் வுலகு"[21]

என்ற குறள் வழி அறியலாம்.

பொதுநிதிக் கொள்கையின் மணிமுடியாக இருப்பது வரவு-செலவு இனங்களைச் சரிகட்டுவது. இக்காலத்தில் பற்றாக்குறை நிதிநிலை அறிக்கையைத் தாக்கல் செய்து சில ஆண்டுகளில் வருமானத்தைப் பெருக்கிச் சீர்செய்யப் பார்க்கின்றனர். இது வளர்த்து வரும் எல்லா நாடுகளிலும் காணப்படும் நிதித்தன்மையாகும். ஆயினும் திருவள்ளுவர் வாழ்ந்த காலம் வேறு; சூழ்நிலை வேறு. அதனால், அவர் வருவாய்க்கேற்பச் செலவைக் கட்டுப்படுத்துக என்று வலியுறுத்துகின்றார்.

'ஆற்றில் போட்டாலும் அளந்து போடு'[22] 'வளவனாயினும் அளவறிந்து செலவு செய்'[23] என்பன நம்முடைய முன்னோர்கள் முதுரை. இதற்கேற்பத் திருவள்ளுவர், அரசுக்குச் சில அறிவுரைகளை வழங்க நினைக்கின்றார். அரசு பல செலவினங்களை மேற்கொண்டுதான் ஆகவேண்டும். ஆயினும் தன்னால் தாங்கக் கூடிய வலிமையையும் பாதுகாத்துக்கொள்ள வேண்டும். பொருளாதாரத்திற்காகப் பணத்தைச் செலவு செய்வதாக இருப்பினும் 'அளவு அறிந்து செலவு செய்; அதுவே, பொருளைப் போற்றி வாழும் நெறி' என்பார்.

"ஆற்றின் அளவறிந்து ஈக அதுபொருள்

போற்றி வழங்கும் நெறி"[24]

என இவ்வாறு அளவறிந்து செலவு செய்யாது போனால், மீஇருப்பது போல் தோன்றி உள்ளதும் போய்விடும்' என்பதனை,

"அளவறிந்து வாழாதான் வாழ்க்கை உளபோல்

இல்லாகித் தோன்றக் கெடும்"[25]

என்ற குறள் வழிச் சுட்டியுள்ளார்.

அதனால், அரசுக்குத் திருவள்ளுவர் இறுதியாகப் பொது நிதியைச் செலவு செய்வது பற்றித் தம் கருத்தைக் கூறுகின்றார். 'வரவுக்கேற்றச் செலவு' என்பது தான் சிறந்தது என்று தெளிவுபடுத்துகிறார். பொருள் வருகின்ற வழி அளவிலே சிறியதாக இருக்கலாம். அதாவது வருமானம் குறைவாக இருக்கலாம். செலவினங்கள் அதிகப்படாதவரை, இதுபற்றிக் கவலை கொள்ள வேண்டியதில்லை. என்பதனை,

"ஆகாறு அளவிட்டி தாயினும் கேடில்லை

போகாறு அகலாக் கடை"[26]

என் குறட்பா வழிச் சுட்டியுள்ளர்.

அளவாகச் செலவு செய்து வளமே பெற்று நாடு வாழட்டும் என்கிறார். ஆயினும் இக்காலத்துப் பொருள் நூல் வல்லார், கடன்பட்டாயினும் திட்டம் தீட்டினால்தான், வளர்த்த நாடுகளுடன் போட்டிப் போட்டுக் கொண்டு வாழமுடியும்

என்று கூறுவர். இது காலவோட்டத்தில் மாறிவிட்ட பொருளாதாரச் சூழலை, எதிர்கொள்ள ஏற்படுத்தப்பட்ட மாற்றுக் கொள்கை ஆகும்.

## வள்ளுவரின் நிர்வாக முறைகள் - ஒரு பொதுப்பார்வை

"எண்பதத்தான் ஒரா முறைசெய்யா மன்னவன்

தண் பதத்தால் தானே கெடும்"[27]

என்று காட்டியுள்ளார் வள்ளுவர். அரசின் ஆட்சியும் குடிமக்களின் சமுதாயக் கடமைகளும் நியாயம் என்ற அச்சில்தான் சூழல்கின்றன. அச்சில் சிறு பழுது வந்தாலும் அழிவு பெரியது. நியாயமான நல்லாட்சி மக்களுக்குத் தேவை என்பதனை, வள்ளுவர்,

"வான் நோக்கி வாழும் உலகெல்லாம் மன்னவன்

கோல் நோக்கி வாழும் குடி"[28]

எனக் குறிப்பிட்டுள்ளார். நன்மைகள் செய்யும் ஆட்சியைவிட நியாயமான ஆட்சி முதன்மை பெறும். சட்டம் இயற்றுவது முதல் உணவுப் பங்கீடு செய்வது வரை, எல்லாத் துறைகளிலும் நியாயம் விளங்கும்படிச் செய்வது ஆட்சியின் முதற்கடமை ஆகும். வள்ளுவர் பொருட்பாலில் அரசைப் பற்றியே விரிவாகக் குறிப்பிட்டுள்ளார் எனலாம்.

சுப. அண்ணாமலை,

"சமுதாயம் அரண்மனை அறம் அதன் அடிப்படை அரசு என்ற பொருள்தான் அதன் பல்வேறு மண்டபங்கள் அறைகள் இன்பம் அதன் கோபுரம்"[29]

என வர்ணித்துள்ளமை இங்கு நினைவுகூரத்தக்கது.

இன்றைய கால அரசில் உள்ள உள் ஆட்சி, வெளியுறவு என்பவை பற்றியும் அவற்றின் விரிவாகிய வருவாய் ஆட்சி, நீதி ஆட்சி, படை ஆட்சி பற்றியும் வள்ளுவர் தன் குறட்பாக்களில் விளக்கியுள்ளமை சிந்திக்கத் தக்கனவாக உள்ளன.

அரசுத் தலைவருக்கு ஆலோசனை கூறுபவர்கள் அமைச்சர்கள். செயல் தலைவர்களும் அவர்களே. ஊதியம் பெறாமல், ஆலோசனை அவையில் அமர்ந்து, நல்வழி காட்டுவோர் பெரியோர். இவர்கள் அரசரிடம் பணி புரிபவர்கள் அல்லர் அரசர் இவர்களைப் பணிந்து ஆலோசனை கேட்பார்.

அலுவல் சாராத இப்பெரியோரின் துணையை நிலையாகப் பெற்று, இவரிடம் அரசர் ஆலோசனை கேட்பது குறித்துத் தனி அதிகாரம் அமைத்துள்ளார் வள்ளுவர். இதில் இப்பெரியோர் மதம், சாதி, அரசியற் குழு முதலிய எந்த நிறுவனத்தையும் சார்ந்தவராகக் குறிப்பிடவில்லை என்பது சிறப்பு. 'அறிவு' அவற்றிற்கு அப்பாற்பட்டது என்பது வள்ளுவரின் தெளிந்த சிந்தனையாகும்.

சங்க காலத்தில் புலவர்கள் அரசர்களுக்கு ஆலோசனை நல்கியுள்ளனர். மாங்குடி மருதனார், வெள்ளைக்குடி நாகனார், பிசிராந்தையார் முதலியோரைச் சான்றாகச் சுட்டலாம்.

சிலப்பதிகாரத்தில் சோழ மன்னர் அரசசபையில் ஐம்பெருங்குழு இருந்தமைக்குச் சான்று உள்ளது. இந்த ஐம்பெருங்குழுவினராக,

"மாசனம், பார்ப்பனர், மருத்துவர், நிமித்திகர், அமைச்சர்"[30]

என ஐவர் என்ற அரும்பத உரையாசிரியரும்,

"அமைச்சர், புரோகிதர், சேனாபதியர், தூதுவர், சாரணர்"[31]

என்ற ஐவர் என அடியார்க்கு நல்லாரும் உரை வகுத்துள்ளனர்.

இந்த ஐம்பெருங்குழுவினரைத் தவிர எண்பேராயம் என்று எட்டு நபர்கள் கொண்ட குழுவினரும் அரசசபையில் இருந்ததாகச் சிலப்பதிகாரத்தின் வழி அறிய முடிகிறது.

எண்பேராயம் எனச் சிலப்பதிகாரத்தில் கூறப்படுவோர்,

"அரசன் பயன்படுத்தும் நுகர் பொருள்களை
ஆயும் ஆய்வாளர்"[32]

என அரும்பதஉரையாசியரும்,

"அரசு அதிகாரியும், நகர மாந்தரும்"[33]

என்று அடியார்க்கு நல்லாரும் சுட்டிக் காட்டியுள்ளார்.

தமிழின் தொன்மையான இலக்கண நூலான தொல்காப்பியம்,

"எட்டுவகை நுதலிய அவையகம்"[34]

என்று குறிப்பிட்டுள்ளது. இதற்கு விளக்கவுரை அளித்துள்ள இளம்பூரணர்,

"குடிப்பிறப்பு, கல்வி, ஒழுக்கம், வாய்மை, தூய்மை, நடுவுநிலைமை,
அழுக்காறாமை, அவா இன்மை"[35]

எனக் குறிப்பிட்டுள்ளார்.

இம்மேலோரையே திருவள்ளுவர் அரசியலில் 'பெரியோர்' என்று மூத்த அறிவுடையார் தக்கார், நல்லார் என்றும் கூறுகின்றார். இவர்களையே அமைச்சியலில், 'அவை அஞ்சாமை' அதிகாரத்தில் வல்அவை, நூல் அவை, நல் அவை, நல்லார் அவை என வகைப்படுத்திக் குறிப்பிட்டுள்ளார் வள்ளுவர்.

இப் 'பெரியோர் அவை' என்ற அமைப்பே பிற்காலத்தில் ஐம்பெருங்குழுவாக மாறியது எனலாம்.

அமைச்சர், பெரியோர் என்ற இந்த இரண்டுவகை அறிஞர்கள் நட்பு, குடிமக்கள், படையினர் என்போரும் வருவாய்த்துறை, அரண் (பாதுகாப்பு) என்பவையும் அரசின் உறுப்புகள் என்றும், அரசர் இவற்றின் இவர்களின் தலைவர் என்றும்,

> "பிடைகுடி கூழ்அமைச்சு நட்புஅரண் ஆறும்
> உடையான் அரசருங் ஏறு"[36]

என்ற குறட்பாவழிச் சுட்டிக் காட்டியுள்ளார்.

அரசின் பல துறைகளையும் தலைமை ஏற்று நடத்த வேண்டிய அரசருக்கு, அரசியற் கல்வி, சிந்தித்துத் தெளியும் அறிவுடைமை, மதிநுட்பம், தலைமைப் பண்பு, ஊக்கம், முயற்சி, துன்பம் கண்டு துவளாமை முதலிய பல பண்புகளை வள்ளுவர் வரையறை செய்துள்ளார். முயற்சி, செயல், உழைப்பு ஆகிய மூன்றினையும் மன்னர், அமைச்சர், குடிகள் ஆகிய முத்திறத்தவருக்கும் வள்ளுவர் வலியுறுத்தியுள்ளமை சிந்திக்கத்தக்கதாக உள்ளது.

வள்ளுவர் வகுத்தளித்துள்ள அரசியல் நிர்வாக முறைகள் இக்காலத்திலும் பொருந்துவனவாக உள்ளமை வியப்புக்குரியனவாகும்.

## தொகுப்புரை

தொடக்கக்காலத்தில் நிலம், உழைப்பு, மூலதனம், நிர்வாகம் முதலிய நான்கினைக் கொண்டு, உற்பத்தியைப் பெருக்கித் தாம் படைத்த செல்வத்தைப் பகிர்ந்தளித்து வாழ்ந்த மக்கள் காலப்போக்கில் ‘சிறப்பான உற்பத்திக்கும் வளமான பொருள் வாழ்வுக்கும் செம்மையான ‘அரசு’ இன்றியமையாதது’ என்பதனை உணர்ந்தனர்.

பொது நிதியினை நான்காகப் பகுக்கலாம். அவை, பொதுவருவாய், பொதுச்செலவு, பொதுக்கடன், பொது நிதி ஆட்சி என்பனவாகும். இந்த நான்கினையும் வள்ளுவர் சுட்டியுள்ள இயற்றல், ஈட்டல், காத்தல், வகுத்தல் என்ற நான்கினோடு தி.முருகரத்தினம் ஒப்பிட்டு விளக்கியுள்ளார்.

‘இயற்றல்’ குறித்து வள்ளுவர், ‘தெரிந்து வினையாடல்’ என்ற அதிகாரத்திலும், ‘ஈட்டல்’, பற்றிப் ‘பொருள் செயல்வகை’ என்ற அதிகாரத்திலும் ‘காத்தல்’ குறித்து, ‘குற்றங்கடிதல்’ என்ற அதிகாரத்திலும் ‘வகுத்தல்’ பற்றி, ‘இறைமாட்சி’ என்ற அதிகாரத்திலும் சிறப்புற எடுத்துக் கூறியுள்ளார்.

அரசின் ஆட்சியும் குடிகளின் சமுதாயக் கடமைகளும் ‘நியாயம்’ என்ற அச்சில் சுழலவேண்டும் என்பது வள்ளுவரின் விருப்பம். மக்களுக்கு நன்மை செய்யும் ஆட்சியைவிட நியாயமான ஆட்சியை, நீதிஆட்சியை வள்ளுவர் வரவேற்கிறார்.

நீதி ஆட்சியின் நிர்வாக முறைமைகள் பற்றி அரசியல் மற்றும் அங்கஇயலில் விரித்துரைத்துள்ளார் வள்ளுவர்.

அரசு நிர்வாகமுறைச் செவ்வனே நடைபெற அரசர் அறிவுசார்ந்த ‘பெரியோர் அவை’ யைத் துணைக் கொள வேண்டும் என்று திருவள்ளுவர் வலியுறுத்தியுள்ளார்.

## அடிக்குறிப்புகள்

1. மேற்கோள்: ப.முருகன், திருவள்ளுவரின் பொருளியல் சிந்தனை, ப.113.
2. கி.வா.ஜகந்நாதன் (ப.ஆ.), திருக்குறள் ஆராய்ச்சிப் பதிப்பு, ப.403.
3. மேற்கோள்: ப.முருகன், மு.நூ.,ப.114.
4. கி.வா.ஜகந்நாதன் (ப.ஆ.), மு.நூ.,ப.234.
5. தி.முருகரத்தினம், குறள் கண்ட பொருள் வாழ்வு, ப.18.
6. கி.வா.ஜகந்நாதன் (ப.ஆ), மு.நூ.,ப.298.
7. மேலது, ப.411.
8. விவிலியம், பழைய ஏற்பாடு ஆதியாகமம், 47.24.
9. ச.வே.சுப்பிரமணியன் (ப.ஆ.), சங்க இலக்கியங்கள் மூலம் முழுவதும், ப.618.
10. மேலது, ப.577.
11. கி.வா. ஜகந்நாதன் (ப.ஆ), மு.நூ.,ப.410.
12. ச.வே. சுப்பிரமணியன் (ப.ஆ), மு.நூ.,ப. 184.
13. மா.இராசமாணிக்கனார், (உ.ஆ), பழமொழி நானூறு, ப.33.
14. கி.வா.ஜகந்நாதன் (ப.ஆ), மு.நூ.,ப.411.
15. மேலது, ப.369.
16. மேலது, ப.319.
17. விவிலியம், மு.நூ., 83-16.
18. கி.வா.ஜகந்நாதன் (ப.ஆ), மு.நூ.,ப.157
19. மேலது, ப.258.
20. மேலது, ப.237.

21. மேலது, ப.235.

22. ந.மு. வேங்கடசாமி நாட்டார் (உ.ஆ), மூதுரை, ப.32.

23. மேலது, ப.34.

24. கி.வா.ஜகந்நாதன் (ப.ஆ.),மு.நூ.,ப.281.

25. மேலது.

26. ஞா. மாணிக்கவாசகன், திருக்குறள் எளிய உரை - இனியநடை, ப.113.

27. மேலது, ப.112.

28. சுப. அண்ணாமலை, திருக்குறள் சிந்தனை, ப.11.

29. ந.மு.வேங்கடசாமி நாட்டார் (உ.ஆ.), இளங்கோவடிகள் இயற்றிய சிலப்பதிகாரம், ப.18.

30. மேலது.

31. மேலது, ப.19.

32. மேலது.

33. மு. அருணாச்சலம் பிள்ளை (உ.ஆ), தொல்காப்பியம், புறத்திணையியல், ப.180.

34. இளம்பூரணர் (உ.ஆ), தொல்காப்பியம் புறத்திணையியல், ப.93.

35. கி.வா. ஜகந்நாதன் (ப.ஆ), மு.நூ.,ப. 232.

36. மேலது, ப.314.

# ஆய்வு நிறைவுரை

- இவ் ஆய்வில் கண்டடைந்த கருத்துக்களைத் தொகுத்து ஆய்வு நிறைவுரையாக இப்பகுதியில் தரப்பட்டுள்ளன. சங்க காலச் சமுதாய அமைப்பில் மக்கள் வெறுப்புற்றனர். வாழ்க்கையில் ஒழுக்கநெறியை விரும்பினர். அவர்களின் தேவைக்கு ஏற்ப நீதி நூல்கள் தோன்றலாயின. வரலாற்று அடிப்படையில் அற நூல்கள் சங்க இலக்கியங்களை அடுத்துத் தோன்றியவை என்பது அறிஞர்களின் முடிபு.

- நீதி நூல்களுள் முதலில் தோன்றியது திருக்குறள். அது மட்டுமல்ல, தமிழக வரலாற்றில் அரசுக்குரிய சட்ட திட்டங்களைத் தொகுத்தளித்த முதல் நூலும் அதுவே.

- ஓர் உணர்கிற நோக்கத்திற்கான பின் தொடர்கையாக எடுக்கப்பட்ட தீர்மான நடவடிக்கையே 'நிர்வாகம்' ஆகும். வள்ளுவர் காலத்தில் 'நிர்வாகம்' என்ற சொல் ஆளப்பெறவில்லை என்றாலும் கூட, அச்சொல் உணர்த்தும் பொருண்மைகள் அக்கால வழக்கில் இருந்துள்ளமையைத் திருக்குறள் வழி உணரமுடிகிறது. அப் பொருண்மைகளுக்கு வள்ளுவர் வரையறையும் விதிமுறைகளும் வகுத்துள்ளார் என்பதனை அறியமுடிகிறது.

- ஒருவர் தன்னை ஆளவும், பிறரை ஆளவும், பிறிதொரு குழுவினரை ஆளவும் நேர்மை, சிறந்த அறிவு, பொறுமை, தளராத முயற்சி, ஈகை, சோர்வின்மை, மனஉறுதி, செயலாற்றும் திறமை போன்றவை முதன்மைத் தேவை. அவற்றை வள்ளுவர் தம் குறட்பாக்களின் வழி விரித்துரைத்துள்ளார். அக்

கருத்துக்களைப் பிற நீதி இலக்கியங்கள் சுட்டியுள்ள போதிலும் வள்ளுவர் அவற்றை விரிவாக எடுத்துரைத்துள்ளமை சிந்திக்கத்தக்கது.

- ஒரு சமுதாயம் அரசியல் அடிப்படையில் ஒருமுகப்படுத்தப்படுகின்ற போது அதனை ‘அரசு’ என்றும் அதனைச் செயல்படுத்தும் இன்றியமையாதக் காரணியை ‘அரசாங்கம்’ என்றும் கூறலாம்.

- குடியாட்சியையும் முடியாட்சியையும் புறக்கணிக்கும் வள்ளுவர் வலியுறுத்தும் புதிய ஆட்சிமுறை ‘அறவோர் அரசாட்சி முறை’ ஆகும்.

- பொது நிர்வாகக் கூறுகள் சார்ந்த தகவல்களைப் பரவலாக ஏறத்தாழ 600 குறட்பாக்களின் வழியாக வள்ளுவர் கூறுவதாகக் க.ப. அறவாணர் குறிப்பிட்டுள்ளார்.

- ‘திட்டமிடுதல்’ சார்ந்த கருத்துக்களை மூன்று அதிகாரங்களிலும் ‘அமைப்பு’ சார்ந்த குறிப்புகளை ஓர் அதிகாரத்திலும், ‘பணியாளர்கள்’ சார்ந்த தகவல்களை நான்கு அதிகாரங்களிலும், ‘வழிகாட்டல்’ சார்ந்த கருத்துக்களை இரண்டு அதிகாரங்களிலும், ‘ஒருங்கிணைப்பு’ பற்றிய குறிப்புகளை இரண்டு அதிகாரங்களிலும், ‘அறிக்கை’ குறித்த செய்திகளை ஓர் அதிகாரத்திலும், ‘வரவு - செலவு’ சார்ந்த கருத்துக்களை இரண்டு அதிகாரங்களிலும் வள்ளுவர் குறிப்பிட்டுள்ளார்.

- நிறுவனத்தின் பணியாட்களையும் வளங்களையும் கொண்டு, தகுந்த திட்டங்கள் வழியாகவும் ஒருங்கமைப்பு வழியாகவும் உரிய

ஊக்குவிப்பு வழியாகவும் தகுந்த கட்டுப்பாட்டின்படியும் அந்நிறுவனத்தின் நோக்கங்களை அறுதியிட்டு அவற்றை அடைய விழையும் ஒரு தனிப்பட்ட செயற்பாங்கே 'மேலாண்மை' ஆகும்.

- ❖ நிர்வாகத்திற்கு உட்பட்டதே மேலாண்மை ஆகும். நிர்வாகம் தீர்மானம் எடுப்பதில் ஈடுபடுகிறது. மேலாண்மை அம் முடிவுகளைச் செயல்படுத்துகிறது.

- ❖ ஹென்றி ஃபாயல் என்பவர் மேலாண்மைத் தத்துவங்களாக 14 கருத்துக்களை முன் மொழிந்துள்ளார். அவற்றுள் ஐந்தினை வள்ளுவர் தன் குறட்பாக்களின் வழி மொழிந்துள்ளார்.

- ❖ தன் உயிருக்கு அஞ்சாமல், அறம், கடமை போன்றவற்றிலிருந்து பிறழாமல் உழைப்பவர்களிடம் அரசாங்கம் பணிப் பொறுப்பை ஒப்படைக்கலாம் என்றும், அவர் நற்குடியில் பிறந்திருக்க வேண்டும், அறிவு நிரம்பப் பெற்றிருக்க வேண்டும், பழி – பாவங்களுக்கு அஞ்சுபவராக இருக்க வேண்டும் என்றும் விதிமுறைகளை வள்ளுவர் வகுத்துள்ளார்.
- ❖ மேலாளராக விளங்கும் அரசர் விரைந்து செயலாக்கம், ஆராய்ச்சி, முடிவு மேற்கொள்ளல் ஆகிய மூன்றினையும் கைக்கொள்ள வேண்டும் என்கிறார் திருவள்ளுவர்.

- ❖ அரசர் தன் அதிகாரத்தை நேர்மையான நெறியில் பயன்படுத்தித் தன் பொறுப்புணர்ந்து மக்கள் பணியாளராகத் தானும் செயலாற்றித் தனக்குக் கீழ் பணியாற்றுவோரையும் அந்நெறியில் செயலாற்ற வழி வகுக்க வேண்டும் என்று வள்ளுவர் சில குறட்பாக்கள் வழிப் பகர்ந்துள்ளார்.

- ❖ செயலூக்கமளித்தல், தலைமை, மேற்பார்வையிடுதல், தகவல் தொடர்பு, ஒருங்கிணைத்தல் இவ்ஐந்தும் நிர்வாகப் பணிகளுள் தலையாயன.

- ❖ செயலூக்கமளித்தல் சார்ந்த கருத்துக்கள், திருக்குறளில் ‘ஊக்கமுடைமை’ என்ற அதிகாரத்தில் மிகுதியாகக் கூறப்பட்டுள்ளன.

- ❖ தலைமை என்பது, ‘திட்டங்களுக்கும் அவற்றைச் செயல்படுத்துதலுக்கும் இடையேயான தொடர்புச் சங்கிலிதான். திட்டங்களைப் பணியாளர்களுக்குத் தெளிவுபடுத்துதல், அவர்தம் எண்ணங்களைக் கேட்டறிதல், அவர்களை ஊக்கப்படுத்துதல் ஆகியவற்றைக் கொண்டு நிறுவனத்தை அதன் வெற்றி இலக்கை நோக்கி அழைத்துச் செல்வதாகும்’.

- ❖ திருவள்ளுவர் காலச் சூழலில் தலைவர் என்பவர் அரசரே, படை, வருவாய், அமைச்சு, நீதி ஆலோசனைக்குழு, கோட்டை, கொத்தளம் எல்லாம் இருப்பினும் அரசருக்குத் ‘தலைமைப் பண்பு’ இருத்தல் முதன்மையானதாகக் கருதப்பட்டது. இது குறித்து, ஆறுக்கும் மேற்பட்ட குறட்பாக்களில் வள்ளுவர் கருத்துத் தெரிவித்துள்ளார்.

- ❖ மேற்பார்வை என்பது, இயக்குதல், ஊக்கப்படுத்துதல், தலைமை தாங்குதல், ஒருங்கிணைத்தல் ஆகிய நான்கு அங்கங்களைக் கொண்டது என்றும் அவை நான்கும் ஒன்றையொன்று சார்ந்தவை என்றும் அறியமுடிகிறது. மேற்பார்வை குறித்து, ‘அமைச்சு’, என்ற அதிகாரத்தில் வள்ளுவர் பல்வேறு கருத்துக்களை எடுத்துரைத்துள்ளார்.

- அன்புடைமை, அறிவுடைமை, ஆராய்ந்து சொல்கின்ற சொற்திறமை ஆகிய மூன்றும் தகவல் தொடர்பில் இன்றியமையாதவை என வள்ளுவர் மொழிந்துள்ளார்.
- பலதரப்பட்ட பணியாளர்களின் கூட்டுச் செயல்பாடே ‘ஒருங்கிணைத்தல்’ ஆகும். இதுகுறித்து, ‘ஒப்புரவறிதல்’ என்ற அதிகாரத்தில் வள்ளுவர் விளக்கம் அளித்துள்ளார்.
- மேம்பாட்டு உத்திகளைப் பலம், பலவீனம், தக்க தருணம், அச்சுறுத்தல் என நான்காகப் பகுக்கலாம்.
- ‘பலம்’ குறித்து ‘வினைத்திட்டம்’ என்ற அதிகாரத்தில் வள்ளுவர் குறிப்பிட்டுள்ளார். தன்னம்பிக்கையே பலம் என்பது திருவள்ளுவர்தம் கருத்தாக உள்ளது.
- எதிர்காலம் குறித்த விழிப்புணர்வு இன்றி இருப்பதையே வள்ளுவர் பலவீனமாகக் கருதுகிறார்.
- நல்லதொரு வாய்ப்பிற்காகக் காத்திருத்தலையும் வாய்ப்பினை நன்முறையில் பயன்படுத்திக் கொள்ளுதலையும் ‘தக்க தருணம் பார்த்தல்’ என்ற செயல் நுட்பத்திற்குள் வள்ளுவர் பொருத்தி உரைத்துள்ளார்.
- அச்சுறுத்தல் பற்றி, ‘இடுக்கண் அழியாமை’ என்ற அதிகாரத்தில் வள்ளுவர் பலவாறு மொழிந்துள்ளார்.

- ‘தொழில் என்பதனைச் சுட்டும்போது வள்ளுவர் உழவுத்தொழிலை முதன்மைப் படுத்தியும் போர்த்தொழிலைச் சிறப்பித்தும் கூறியுள்ளார். உழவுத்தொழிலுக்கு அடிப்படைக் காரணிகளான நிலம், நீர்வளம் குறித்தும் உழவுத்தொழில் நிகழ்த்த உதவும் உழைப்பு அதனால் கிடைக்கப்பெறும் செல்வம் குறித்தும் வள்ளுவர் வரிவாக விளக்கியுள்ளார்.

- ‘தொழில் நிர்வாகம்’ என்பதனை அக்காலத்திலிருந்த உழவுத்தொழில், வேளாண்மைத் துணைத் தொழில்கள், வாணிபம், கொல்லத்தொழில், கால்நடை பராமரிப்பு போன்றவற்றில் பொருத்தி ஆய்வு செய்ய இடமிருப்பினும், வள்ளுவத்தில் உழவுத்தொழில் பற்றியே விரிவாகக் குறிப்பிட்டுள்ளதால், ‘தொழில் நிர்வாகம்’ முழுவதுமாக உழவுத்தொழிலை மையப்படுத்தியே ஆய்வாளர் விளக்கியுள்ளார்.

- தொடக்கக்காலத்தில் நிலம், உழைப்பு, மூலதனம், நிர்வாகம் முதலிய நான்கினைக் கொண்டு, உற்பத்தியைப் பெருக்கித் தாம் படைத்த செல்வத்தைப் பகிர்ந்தளித்து வாழ்ந்த மக்கள் காலப்போக்கில் ‘சிறப்பான உற்பத்திக்கும் வளமான பொருள் வாழ்வுக்கும் செம்மையான ‘அரசு’ இன்றியமையாதது’ என்பதனை உணர்ந்தனர்.

- பொது நிதியினை நான்காகப் பகுக்கலாம். அவை, பொதுவருவாய், பொதுச்செலவு, பொதுக்கடன், பொது நிதி ஆட்சி என்பனவாகும். இந்த நான்கினையும் வள்ளுவர் சுட்டியுள்ள இயற்றல், ஈட்டல், காத்தல், வகுத்தல் என்ற நான்கினோடு ஒப்பிடலாம்.

- ‘இயற்றல்’ குறித்து வள்ளுவர், ‘தெரிந்து வினையாடல்’ என்ற அதிகாரத்திலும், ‘ஈட்டல்’, பற்றிப் ‘பொருள் செயல்வகை’ என்ற அதிகாரத்திலும் ‘காத்தல்’ குறித்து, ‘குற்றங்கடிதல்’ என்ற அதிகாரத்திலும் ‘வகுத்தல்’ பற்றி, ‘இறைமாட்சி’ என்ற அதிகாரத்திலும் சிறப்புற எடுத்துக் கூறியுள்ளார்.

- அரசின் ஆட்சியும் குடிகளின் சமுதாயக் கடமைகளும் ‘நியாயம்’ என்ற அச்சில் சூழலவேண்டும் என்பது வள்ளுவரின் விருப்பம். மக்களுக்கு நன்மை செய்யும் ஆட்சியைவிட நியாயமான ஆட்சியை, நீதிஆட்சியை வள்ளுவர் வரவேற்கிறார்.

- நீதி ஆட்சியின் நிர்வாக முறைமைகள் பற்றி அரசியல் மற்றும் அங்கஇயலில் விரித்துரைத்துள்ளார் வள்ளுவர்.

- அரசு நிர்வாகமுறைச் செவ்வனே நடைபெற அரசர் அறிவுசார்ந்த ‘பெரியோர் அவை’யைத் துணைக்கொள்ள வேண்டும் என்று திருவள்ளுவர் வலியுறுத்தியுள்ளார்.

- அக்கால ஆட்சிமுறை நிர்வாகத்திற்குத் திருக்குறள் ஒரு கையேடாக விளங்குகிறது. இக்கால நிர்வாகக் கூறுகள் பல திருக்குறளில் சுட்டப்பட்டுள்ள நிர்வாக முறைகளோடு பொருத்தி இருப்பது சிந்திக்கத் தக்கதாக உள்ளது.

# மேலாய்வுக் களங்கள்

பின்வரும் தலைப்புகளின் கீழ், திருக்குறளை ஆய்வுசெய்ய வழிவகையுள்ளது.

1. திருக்குறளில் நிலம், நீர்வள மேலாண்மை
2. வள்ளுவரின் பொருளியற் சிந்தனை
3. குறள் வழிப்புலனாகும் அக்கால ஆட்சி முறை
4. பொருட்பால் அறிவுறுத்தும் அறவாழ்வு
5. வள்ளுவரின் அறவோர் அரசாட்சிக் கோட்பாடுகள்

# துணைநூற்பட்டியல்

## தமிழ் நூல்கள்


அண்ணாமலை, சு.ப., திருக்குறள் சிந்தனை, கூானதி பதிப்பகம், சென்னை, 1987.

அப்பாதுரை, க., (உ.ஆ.) திருக்குறள் மணி விளக்க உரை, அலமேலு நிலையம், சென்னை, 1967.

அருணாச்சலம் பிள்ளை, மு., (உ.ஆ.) தொல்காப்பியம் - பொருளதிகாரம் அகத்திணையியல் உரைவளம், தஞ்சைப் பல்கலைக் கழகம், தஞ்சாவூர், 1980.

அறவாணன், க.ப., அன்றைய நாள் காதலும் வீரமும், தமிழ்க் கோட்டம், சென்னை, 1978.

அறவாணன், க.ப., தமிழர் மேல் நிகழ்ந்த பண்பாட்டுப் படையெடுப்புகள், தமிழ்க் கோட்டம் சென்னை, 1987,

அறவாணன், க.ப., தமிழர் இலக்கியச் சமூகத் தளங்கள், தமிழ்க கோட்டம், சென்னை, 2003.

அறவாணன்,க.ப., அற இலக்கியச் களஞ்சியம்,
தாயறம், திருச்சி,
2009.

இராசா.கி., தமிழ் இலக்கிய வரலாறு,
அன்னை நிலையம், திருச்சி,
2001.

இராசமாணிக்கனார், மா., தமிழர் நாகரிகமும் பண்பாடும்,
பாரிநிலையம், சென்னை,
1975.

இராசமாணிக்கனார், மா., கல்வெட்டுகளில் அரசியல் சமயம்
சமுதாயம்,
சேகர் பதிப்பகம், சென்னை,
1977.

இராசமாணிக்கனார், மா., (உ.ஆ.) பழமொழி நானூறு,
கழகப் பதிப்பு, சென்னை,
1963.

இளங்குமரன், இரா., (உ.ஆ.) நீதிபோத வெண்பா,
கழகப் பதிப்பு, சென்னை,
1977.

சண்முகசுந்தரம், (தொ.ஆ.) தமிழ்நாட்டுப் பழமொழிகள்
காவ்யா, பெங்களூர்,
1997.

சாரதி, ஆர்.பி. (மொ.ஆ)., நிர்வாக விதிகள், கிழக்கு பதிப்பகம், சென்னை, 2009, இரண்டாம் பதிப்பு.

சந்திரசேகரன், இரா.,சரவணன்,ப., கொங்குநாட்டாரியல் - பழமொழிகள், நாம் தமிழர் பதிப்பகம், சென்னை, 2008.

சுப்பிரமணியன், கா., சங்க காலச் சமுதாயம், நியூ செஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை, 1987.

சுப்பிரமணியன், ச.வே., (ப.ஆ)., பதினெண் கீழ்க்கணக்கு நூல்கள், மெய்ப்பன் பதிப்பகம், சிதம்பரம், 2007.

சுப்பிரமணியன், ச.வே.(ப..ஆ) சங்க இலக்கியம் மூலம் முழுவதும், மெய்யப்பன் பதிப்பகம், சிதம்பரம், 2008.

தங்கராஜ், ஆர்., தற்கால அரசியல் முறைகள், பாவை பதிப்பகம், சென்னை, 2001.

தமிழ்வேட்பன், (உ.ஆ.) திருக்குறள் எளிய தெளிவுரை, ஸ்ரீ செண்பகா பதிப்பகம், சென்னை, 2003.

தார்ஷியா (மொ.ஆ.)., நிர்வாக விதிகள், கிழக்கு பதிப்பகம், சென்னை, 2009.

திருவேங்கடசாமி, ஆர்.கே., வள்ளுவத்தில் நீர்வளமும் வாழ்வியலும், நியூ செஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை, 2006.

தேவநேயம், ஞா., தமிழர் வரலாறு, நேசமணி பதிப்பகம், காட்பாடி, 1972.

நாராயண வேலுப்பிள்ளை, எம்., (உ.ஆ.)., பதினெண் கீழ்க்கணக்கு நூல்கள், நர்மதா பதிப்பகம், சென்னை, 2001.

பாலசுந்தரம், தி.சு., (உ.ஆ.)., நீதிவெண்பா, கழகப் பதிப்பு, சென்னை, 1966.

பாலசுந்தரம், தி.சு., (உ.ஆ.), ஏலாதி, கழகப் பதிப்பு, சென்னை, 1972.

பாலசுந்தரம், தி.சு., (உ.ஆ.), நான்மணிக் கடிகை, கழகப் பதிப்பு, சென்னை, 1962.

பாலசுந்தரம், தி.சு., (உ.ஆ.), நாலடியார், கழகப் பதிப்பு, சென்னை, 1964.

பாலசுப்பிரமணியன், சி., தமிழ் இலக்கிய வரலாறு, மணமலர்ப் பதிப்பகம், சென்னை, 1996.

பாஸ்கரசேதுபதி, இரா., பொதுநிருவாகவியல், நியூ செஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை, 2004.

பிச்சமுத்து, ந., திறனாய்வும் தமிழ், இலக்கியக் கொள்கைகளும், சக்திவெளியீடு, சென்னை, 1994, நான்காம் பதிப்பு.

பிரதாப் (உ.ஆ.)., திருக்குறள் பன்முகஉரை, மாஸ்டர் பதிப்பகம், மதுரை, 2006.

புன்னைவனநாத முதலியார், பு.சி.,(உ.ஆ)., சிறுபஞ்சமூலம், கழகப் பதிப்பு, சென்னை, 1960.

புன்னைவனநாத முதலியார், பு.சி.,(உ.ஆ)., முதுமொழிக் காஞ்சி, கழகப் பதிப்பு, சென்னை, 1968.

புன்னைவனநாத முதலியார், பு.சி.,(உ.ஆ)., ஆசாரக்கோவை, கழகப் பதிப்பு, சென்னை, 1961.

புன்னைவனநாத முதலியார், பு.சி.,(உ.ஆ)., திரிகடுகம், கழகப் பதிப்பு, சென்னை, 1962.

பொன்னுசாமிபிள்ளை, ஆ., (உ.ஆ.)., அறநெறிச் சாரம், கழகப் பதிப்பு, சென்னை, 1964.

மகாதேவ முதலியார் (உ.ஆ)., இனியவை நாற்பது, கழகப் பதிப்பு, சென்னை, 1950.

மருதநாயகம், ப., ஒப்பில் வள்ளுவம், சாரதாபதிப்பகம், சென்னை, 2008.

மாணிக்கனார், வ.சுப., (உ.ஆ.,) திருக்குறள் உரை, சாரதா பதிப்பகம், சென்னை, 2007.

மாணிக்கவாசகன், ஞா., (உ.ஆ.)., திருக்குறள் எளியஉரை - இனியநடை, உமா பதிப்பகம், சென்னை, 1997, ஐந்தாம் பதிப்பு.

முருகன், ப., திருவள்ளுவரின் பொருளியல் சிந்தனை, நியூசெஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை, 1994.

வித்தியானந்தன், சு., தமிழர் சால்பு, பாரிபுத்தகப் பண்ணை, சென்னை, 1985.

வெங்கடேசன், க., மேலாண்மைத் தத்துவங்கள், நியூ செஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை, 2001.

வேங்கடசாமி, மயிலை, சீனி., மறைந்து போன தமிழ் நூல்கள், சாந்தி நூலகம், சென்னை, 1967.

வேங்கடசாமி நாட்டார், ந.மு.(உ.ஆ.)., இளங்கோவடிகள் இயற்றிய சிலப்பதிகாரம், ராமையா பதிப்பகம், சென்னை, 2005.

வேங்கடசாமி நாட்டார், ந.மு.(உ.ஆ.)., முதுரை, கழகப் பதிப்பு, சென்னை, 1964.

வேங்கடசாமி நாட்டார், ந.மு.(உ.ஆ.), நறுந்தொகை எனும் நீதிநெறி விளக்கம், கழகப் பதிப்பு, சென்னை, 1964.

வேங்கடசாமி நாட்டார், ந.மு.(உ.ஆ.), நல்வழி, கழகப் பதிப்பு, சென்னை, 1964.

வேங்கடசாமி நாட்டார், ந.மு.(உ.ஆ.), கொன்றை வேந்தன், கழகப் பதிப்பு, சென்னை, 1964.

வேங்கடசாமி நாட்டார், ந.மு.(உ.ஆ.), உலகநீதி, கழகப் பதிப்பு, சென்னை, 1964.

வேங்கடசாமி நாட்டார், ந.மு.(உ.ஆ.), ஆத்திசூடி கழகப் பதிப்பு, சென்னை, 1966.

வையாபுரிப் பிள்ளை, எஸ்., தமிழர் பண்பாடு, தமிழ்ப் புத்தகாலயம், சென்னை, 1962.

ஜகந்நாதன், கி.வா. (ப.ஆ.), திருக்குறள் ஆராய்ச்சிப் பதிப்பு, ராமகிருஷ்ணா மிஷன் வித்யாலயம், கோயம்புத்தூர், 2003.

ஸ்ரீ சந்திரன், ஜெ., தமிழ் இலக்கிய வரலாறு, வர்த்தமானன் பதிப்பகம், சென்னை, 1999.

## முனைவர் பட்ட ஆய்வேடுகள்

சாரங்க பாணி, ரா., தமிழில் நீதிநூல் இலக்கிய ஆய்வு, தமிழ்த்துறை, சென்னைப் பல்கலைக் கழகம், சென்னை, 1969.

செல்லம்மாள், த., பிறதுறைநோக்கில் திருக்குறள், தமிழ்த்துறை, பாரதிதாசன் பல்கலைக் கழகம், திருச்சி, 2002.

தாமரைச் செல்வி, திர. அரசு., திருக்குறள் காட்டும் தமிழர் சமுதாயம், குடும்பம், தமிழ்த்துறை, புதுவை பல்கலைக் கழகம், புதுவை, 1990.

பங்கயச் செல்வி, சி., திருக்குறள் துறவறவியல், தமிழ்த்துறை, அழகப்பா பல்கலைக் கழகம், காரைக்குடி, 1985.

பத்மநாபன், பொன்., வள்ளுவரின் அறநெறிக் கொள்கைகள்,
தமிழ்த்துறை,
புதுவை பல்கலைக் கழகம்,
புதுவை, 1996.

பாண்டுரெங்கன், என்., நீதி நூல்கள் - ஓர் ஆய்வு,
தமிழ்த்துறை,
சென்னைப் பல்கலைக் கழகம்,
சென்னை, 1981.

முத்துச்சாமி, ச., திருக்குறள் கண்ட தமிழ்ப் பண்பாடு,
தமிழ்த்துறை,
சென்னைப் பல்கலைக் கழகம்,
சென்னை, 1980.

முருகன், எஸ்., திருக்குறளும் தம்மபதமும் மனுதர்மமும்,
தமிழ்த்துறை,
மதுரை காமராசர் பல்கலைக் கழகம்,
மதுரை, 1998.

வேலு, ஆர்., திருக்குறளும் கௌடில்யமும்- ஒப்பாய்வு,
தமிழ்த்துறை,
மதுரை காமராசர் பல்கலைக் கழகம்,
மதுரை, 1986.

## ஆங்கில நூல்கள்


Diaz, S.M. — Tirukkural, Vol-1&2, Ramanandha Adisgalar Foundation, Coimbatore, 2000.

Heinz Welhrich Harold Koontz — Management a Global Perspective, Tata Mchraw-Hill Publishing, New Delhi, 2005, 11th Edition.

Hornby, A.S. — Oxfored Advanced Leasner's Dictionary of current English, Oxford university Press, New York, 1999, 5th Edition.

Kasturi Srinivasan — Thirukkural an ancient Tamil Wclassic, Bombay, 1969.

White, C.D. — Introduction to the study of Public Administration. New Delhi, 2000.

Yogi Suddanantha Bharathi — The rosary of gems of Thirukkural Madras, 1969.

Yogi Suddanantha Bharathi — Thirukkural Couplets with clear Proserendering, Madras , 1971.

## இணையதள முகவரி

1. www.c.s. ulk.edu
2. www.epf1.ch/ic/Icp-zkk/tamil4.html
3. www.squidoo.com
4. www.tamilvu.org
5. www.tamilelibrasy.org
6. www.tn.gov.in
7. www.uts.cc.utexus.edu.

# பின்னிணைப்பு

**தமிழ்மொழி தவிர பிற மொழிகளில் திருக்குறள் மொழியாக்கம் செய்யப்பட்டுள்ளமையை விளக்கும் அட்டவணை.**

1767 ஆம் ஆண்டுமுதல் 1989 ஆம் ஆண்டுவரை 26 மொழிகளில் திருக்குறள் மொழியாக்கம் செய்யப்பட்டுள்ளமையை இவ் அட்டவணை விளக்கும் வகையில் அமைந்துள்ளது.

| S.No | Year | Language | Title of the book | Translator | Book Print From |
|---|---|---|---|---|---|
| 1. | 1767 | French | Kural de thiruvalluvar | Jocolliot & Louis | Paris |
| 2. | 1803 | German | Thirukural Waith german translation | A.f.Cammera | Leipzig |
| 3. | 1840 | English | The kural of thiruvalluvar with commentary of parimelazhakar | H.W. Drew | Madras |
| 4. | 1847 | German | Thirukural | Rickert & Friederich | Berlin |
| 5. | 1848 | French | Kural de thiruvalluvar | M. Ariel | Paris |
| 6. | 1854 | German | Der kural des thiruvalluvar | Graul & Karl | London |
| 7. | 1865 | German | Der tanu lische gnomes dichtar thiruvalluvar | Graul & Karl | Leipzig |
| 8. | 1866 | Latin | Kural of thiruvalluvar | Graul & Charles | Tranquebar |

| 9. | 1866 | German | Der Kural des thiruvalluvar | William & Norgate | London |
|---|---|---|---|---|---|
| 10. | 1867 | French | Thirukural in French | M. Lamairesse | Pondicheray |
| 11. | 1875 | Malayalam | Thirukural in verses | Azhakathukurup | Thirvandram |
| 12. | 1889 | French | Le livre de lamour de thriuvalluva | Barrigue de & G. fontaineu | Paris |
| 13. | 1916 | English | Kural a selectionof 366 verses | T. Thirunavukarasu | Poona |
| 14. | 1924 | Hindi | Thirukural | Klenand Rakar | Ajmer |
| 15. | 1925 | English | Kural in English with commentary in Tamil | A. Mathavariyah | Madras |
| 16. | 1928 | English | The sacred aphorisms of thiruvalluvar | S.M. Michael | Nagarcoil |
| 17. | 1928 | English | 108 gems from the sacred kural | T.V. Parameswaran Aiyar | Kottayam |
| 18. | 1930 | Latin | Thirukural | Veeramamunivar | London |
| 19. | 1933 | English | Thirukural moolamum uraiyum with English translation | Ranganatha mathaliar | Madras |
| 20. | 1937 | English | Kural the great book of thiruvalluvar | C. Raja gopalachari | Madras |
| 21. | 1939 | Assamese | Thirukural | Nalini mohan & sanyal | Calcutta |

| 22. | 1940 | Kannada | Kural | B.M. Srikanthaiah | Bangalore |
|---|---|---|---|---|---|
| 23. | 1942 | Hindi | Kural in verse | Govindaraj Jain | New Delhi |
| 24. | 1942 | French | Thiruvallouvar Kural | Danielou & Alain | Pondicherry |
| 25. | 1949 | English | Thirukural in English with roman translation | V.R. Ramachandra Dikshithar | Madras |
| 26. | 1950 | English | Thirukural | P. Raja | Kumbakonam |
| 27. | 1950 | English | The seared kural | H.A. Popely | Calcutta |
| 28. | 1951 | Malayalam | Thirukural manikal | P. Damodaran Pillai | Trivandrum |
| 29. | 1952 | Czech | Thirukural | V. Kamil & Zvelebil | Prague |
| 30. | 1952 | Telugu | Thiruvalluva sookthaln | Jagannatha Sastri | West godavari |
| 31. | 1953 | English | Thirukural in English with commentary | A. Chakravarthi | Madras |
| 32. | 1954 | English | Thirukural | T.D. Thangaswami | Madras |
| 33. | 1955 | Kannada | Thirukural dharama bhaga (Part – 1) | L.. Gundappa | Bangalore |
| 34. | 1956 | English | Thirukural | H.W. Drew & J. Lazarus | Madras |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 35. | 1958 | Hindi | Thirukural in Hindi | Sankar Raju Naidu | Madras |
| 36. | 1958 | Polish | Thiruvalluvar Kural | Uma devi & wandy dynowskiev | Madras |
| 37. | 1959 | English | A collection of the English translation of thirukural | G.V. Pope | Madras |
| 38. | 1960 | Kannada | Thirukural (3 Parts) | L. Gundappa | Madras |
| 39. | 1960 | Malayalam | Thirukural | Gopalakurup & Vennikulam | Kottayam |
| 40. | 1961 | Sanskrit | Thirukural in sanskrit slokas | S.N. Srirama Desikan | Madras |
| 41. | 1961 | Singalese | Thirukural | M. Sissigamy govokgada | Colombo |
| 42. | 1961 | English | Kural: Maxims of thiruvalluvar | V.V.S. Aiyar | Madras |
| 43. | 1961 | Hindi | Thirukural | B.D. Jain | Thirupananthal |
| 44. | 1962 | Malayalam | Thirukural Tharmanaskantam | K. Chellam nadir | Parassala |
| 45. | 1962 | English | Thirukural of thiruvalluvar | K.M. Balasubramaniam | Madras |

| 46. | 1963 | Russian | Thirukural, a book on virtu, politics and love. | J.J. Glazov & A. Krishnamurthi | Moscow |
|---|---|---|---|---|---|
| 47. | 1963 | Malayalam | Kural waith commentary (Part – I) | G. Balakrishna Nair | Trivandrum |
| 48. | 1964 | Malay | Thirukural | Ramily Bin Thakir | Kualalumpur |
| 49. | 1964 | Fiji | Thirukkurala | S.L. Berwick | Fiji |
| 50. | 1964 | Dutch | Thirukural | D. Kat. | Metherlamds |
| 51. | 1964 | Hindi | Thirukural | G.M. Venkata Krishnan | Trichy |
| 52. | 1964 | Singalesh | Thirukural in Sinhalese | De silva, Charles & Sirigiya | Colombo |
| 53. | 1966 | Urdu | Kural in urdu | Surawathi hagarat | New Delhi |
| 54. | 1967 | Chinese | Thirukkural | Chi Eng Hsi | Hongkong |
| 55. | 1967 | Malay | Thirukural sastera kalasik tamil yang | I smail & Hussein | Kuala limpur |
| 56. | 1968 | English | Thirukural with English couplets | Yogi suddanantha Bharathi | Madras |

| 57. | 1969 | English | The rosar of gems of thirukkural | A. gajapathy nayagar | Madras |
|---|---|---|---|---|---|
| 58. | 1969 | English | Thirukural an ancient Tamil classic | Kasturi srinivasan | Bombay |
| 59. | 1969 | English | The thirukural – a unique guide to moral material and spiritual prosperity | G. Vanmikinathan | Trichy |
| 60. | 1970 | English | Thirukural couplets with clear prose rendering | Yogi suddanantha Bharathi | Madras |
| 61. | 1971 | Gujarathi | Thirukural in gujarathi | Kalani & L. Kandilal | Bombay |
| 62. | 1972 | Finnish | Kural – the ancient tamil classic | Aalto & Pentit | Finland |
| 63. | 1973 | English | Preface in the kural | K.C. Kamaliah | Madras |
| 64. | 1974 | Assamese | Thirukural | E.C. Sastri | Calcutta |
| 65. | 1974 | Russian | Thirukural in couplets with illustrations | J.J. Glazov | Moscow |
| 66. | 1976 | Hindi | Thirukural | Rajan Pillai | Lucknown |
| 67. | 1976 | Urdu | Kural in Urdu & Arabic | Kohan & Muhamad Yusuf | Madras |
| 68. | 1977 | German | Thirukural von Thiruvalluvar aus dem Tamil | Albrecht, Fenz & K. | Madras |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| | | | | Lalithambal | |
| 69. | 1980 | Saurastra | Saurastra Thirukural Payiram-Pikika Pragaranam | S.S. Ram | Madurai |
| 70. | 1982 | Rajasthani | Thirukural needhi sastra | Kamala hurg | Jaipur |
| 71. | 1982 | Hindi | Thirukural in Hindi | K. Seshadri | Lucknow |
| 72. | 1982 | Kannada | Thirukural with original couplets and translations in kannada | P.S. Srinivas | Madurai |
| 73. | 1982 | English | Aphorisms of valluvar | S.M. Diaz | Madras |
| 74. | 1983 | Punjabi | Thirukural dhamma granth of the tamils | Ram murti sharma | Chandigash |
| 75. | 1985 | Oriya | Thirukuralu in oriya language | Kishrod & Dash ch | Sampalbur |
| 76. | 1989 | English | Kural – portraits | K. Chellappan | Chithambaram |